# சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்




முனைவர்ப் (Ph. D.,) பட்டத்தகுதிப் பேற்றிற்காகப்
புதுவைப் பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

இரா. நாராயணன்




தமிழ் ஆராய்ச்சித் துறை
காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம்
புதுச்சேரி - 605 008

டிசம்பர் - 2000

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் க. பஞ்சாங்கம்,
விரிவுரையாளர்,
தமிழ் ஆராய்ச்சித்துறை,
காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்புக் கல்வி மையம்,
புதுச்சேரி – 605 008

ஆய்வாளர் **இரா. நாராயணன்** அவர்கள், முனைவர்ப் பட்டத்தகுதி பெறுவதற்காகப் புதுவைக் காஞ்சிமாமுனிவர் பட்ட மேற்படிப்புக் கல்வி மையத் தமிழ்த் துறையில் மேற்கொண்ட ஆய்வின் அளிப்பேடு இது.

**'சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்'** என்னும் தலைப்பில் உருவாக்கப் பெற்ற இவ்வாய்வேடு, இதற்கு முன்னர் வேறெந்தக் கல்வித் தகுதி பெறவும் அளிக்கப்பெறவில்லை.

இவ்வாய்வேடு இம்மாணாக்கரால் தன்னியலாக உருவாக்கப்பட்டது.

இடம் : புதுச்சேரி–8

நாள் : 29. 12. 2000

நெறியாளர் ஒப்பம்

Dr. K. PANJANGAM, M. A., Ph. D.
Lecturer in Tamil
K. M. CENTRE FOR P. G. STUDIES
LAWSPET [illegible]

துறைத்தலைவர் மேலொப்பம்
29.12.2000

*Dr. Nagappa. Nachiyappan,*
M.A., Ph.D., Dip.Arch.,
**PROF. & H. O. D. OF TAMIL**
K. M. Centre for Post - Graduate Studies
*T.A.C. Campus, Lawspet, Pondicherry-605 008.*



இரா. நாராயணன்,
முனைவர்ப் பட்ட ஆய்வாளர்,
தமிழ் ஆராய்ச்சித் துறை,
காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்புக் கல்வி மையம்,
புதுச்சேரி – 605 008

# ஆய்வாளர் உறுதிமொழி

இவ்வாய்வேடு, 'சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்' என்னும் தலைப்பில் உருவாக்கப் பெற்றுள்ளது.

இது, புதுவைப் பல்கலைக் கழகம், காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்புக் கல்வி மையத் தமிழ்த்துறையில் முனைவர்ப் பட்டத் தகுதிக்காக மேற்கொள்ளப்பெற்ற ஆய்வின் அளிப்பேடாகும்.

ஆய்வாளரால் தன்னியலாக உருவாக்கப்பெற்ற இந்த ஆய்வேடு, வேறெந்தக் கல்வித் தகுதிக்கும் இதற்கு முன்னர் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கின்றேன்.

இடம் : புதுச்சேரி–8
நாள் : 29.12.2000

ஆய்வாளர் ஒப்பம்

துறைத்தலைவர் மேலொப்பம்

29.12.2000

Dr. Nagappa. Nachiyappan,
M.A., Ph.D., Dip.Arch.,
PROF. & H. O. D. OF TAMIL
K. M. Centre for Post - Graduate Studies
T.A.C. Campus, Lowspet, Pondicherry-605 008.



# நன்றியுரை

'சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்' என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு, சிறப்பான முறையில் உருவாவதற்கு உதவிசெய்து, சென்ற போதெல்லாம் இன்முகத்துடன் வரவேற்று உபசரித்து என்னை ஊக்கப்படுத்தி முழுமையான அளவில் பங்கெடுத்துக் கொண்டு உறுதுணையாக இருந்த என்னுடைய நெறியாளரும், முனைவருமான,

- மனதில் நிறைந்த க. பஞ்சாங்கம்,

இவ்வாய்வினை மேற்கொள்ள எனக்கு அனுமதி அளித்த மையத்தின் முன்னாள் இயக்குநர்,

- நினைவில் நின்ற சரோஜா சுந்தரராஜன், மற்றும் இந்நாள் இயக்குநர், முனைவர் உமா,

ஆய்வு மேற்கொண்ட காலங்களில் உதவிகள் செய்த முன்னாள் துறைத்தலைவர்,

- அன்புக்குரிய அமரர் மா. அய்யாசாமி, மற்றும் இந்நாள் துறைத்தலைவர்,
- மதிப்பிற்குரிய நாகப்பா. நாச்சியப்பன்,

மற்றும் ஆய்வுக்கு உதவிகள் செய்த விரிவுரையாளர்கள்,

- சிந்தைக்கினிய சிவ. மாதவன்,
- வணக்கத்திற்குரிய சிந்தாநிலாதேவி,
- பாசத்திற்குரிய தி. செல்வம்,
- பழகுவதற்கினிய வே. கருணாநிதி,
- பண்பிற்குரிய ஆ. விஜயராணி,

ஆய்வுக் காலங்களில் உடனிருந்து உதவிகள் செய்த நண்பர்கள்,

- து. ஆறுமுகம், சு. இளவழகன், கோ. செல்லன்,

ஆய்வின் போது தகவல் திரட்ட உதவியாக இருந்த புதுவைப் பிரஞ்சு இந்திய நூலகம், உ.வே.சாமிநாதையர் நூலகம், கன்னிமாரா நூலகம், தாகூர் கலைக்கல்லூரி நூலகம், புதுவைப் பல்கலைக்கழக நூலகம், முதலான நூலகங்களின்,

- நூலகர்கள்,

ஆய்வேட்டைக் கணினி அச்சில் வடிவமைப்புச் செய்த ஸ்பெக்ட்ரா கிராஃபிக்ஸ்,

- இர. சந்திரசேகரன் மற்றும் கட்டமைப்புச் செய்தவர்கள்,

ஆகியோருக்கு என் நன்றி என்றென்றும் உதடுகளால் அல்ல உள்ளத்தால் ஒன்றியிருக்கும்.

ரா. நாராயணன்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ.இ. | – | ஆண்டு குறிக்கப்படவில்லை |
| ஆசி.இ. | – | ஆசிரியர் குறிக்கப்படவில்லை |
| இ.இ. | – | இடம் குறிக்கப்படவில்லை |
| தொகு. | – | தொகுப்பு நூல் |
| தொகு.ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| தொகு.ஆசி. | – | தொகுப்பாசிரியர்கள் |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பதி.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பதி.ஆசி. | – | பதிப்பாசிரியர்கள் |
| பதி. கு. | – | பதிப்பகம் குறிக்கப்படவில்லை |
| மு.கு.ஆ. | – | முன்னோர் குறிப்பிட்ட ஆய்வேடு |
| மு.நூ. | – | முன்னர் குறிப்பிட்ட நூல் |
| மேலது. | – | மேலே குறிப்பிட்ட நூல் |
| மொ. நூ. | – | மொழிபெயர்ப்பு நூல் |
| P. | - | Page |
| PP | - | Pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

## சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்

சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகள் வெளிவரத் தொடங்கி ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்காலம் கடந்துவிட்டது. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உருவான சமூக, அரசியல் இயக்கங்கள் தங்களுக்கான வரலாற்றைக் கட்டுவதற்குப் பல்வேறுபட்ட நெறியில் முயன்று கொண்டிருந்தன. அத்தகைய ஒரு காலக்கட்டத்தில் உ.வே.சாமிநாத ஐயர், சி.வை.தாமோதரம்பிள்ளை ஆகியோர் ஓலைச்சுவடிகளில் இருந்து சங்க இலக்கியத்தை அச்சில் கொண்டுவரும் பணியில் ஈடுபட்டனர். அதன் காரணமாகச் சங்க இலக்கியம் பல்வேறு புதிய மதிப்பீடுகளுக்கு உள்ளாக்கப்பட்டது. அன்று தொடங்கி இன்று வரை, சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகள் ஏராளமாக வெளிவந்துள்ளன அந்த ஆய்வுகளை எல்லாம் ஒருங்கிணைத்து நோக்கும்போது சங்க இலக்கிய ஆய்வுகள் செல்கின்ற நெறியும், அத்துடன் பல்வேறு புதிய உண்மைகளும் வெளிப்பட வாய்ப்பிருக்கிறது. எனவே, சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகளின் சமூகப் பொருளாதார அரசியல் பின்னணிகளை வெளிக்கொணர வேண்டும் என்ற எண்ணம் ஆய்வாளருக்கு ஏற்பட்டது அதன் காரணமாக இத்தலைப்புத் தேர்வு செய்யப்பட்டது

### 0.1. ஆய்வுப் பொருள் :

"சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்" என்பது ஆய்வுப் பொருளாக அமைகின்றது.

### 0.2. ஆய்வின் நோக்கமும் கருதுகோளும்

1. சங்க இலக்கியம் பற்றிய ஆய்வு நூல்களை, தமிழகச் சமூக, அரசியல் இயக்கங்களின் வரலாற்றுப் பின்னணியில் விளக்க முயலும்போது, அச்சமூக இயக்கங்களுக்குத் தேவையான கருத்தாக்கங்களைப் புனைவதற்குச் சங்க இலக்கியம் எப்படியெல்லாம் பயன்பட்டிருக்கிறது என்ற உண்மையை வெளிக்கொணர்தல்.

2. அத்துடன், எவ்வளவு தொன்மையான இலக்கியங்களையும் கூடத் தன் காலத் தேவைக்குத் தகுந்தவாறு வாசித்துப் பொருள் காணமுடியும். அவ்வாறு காண்பதன் மூலம் அந்த இலக்கியத்திற்கு நிரந்தரத் தன்மையை வழங்கமுடியும் என்ற கருத்தை விளக்குதல்.

3. மேலும், புதிய வரலாற்றியல் கோட்பாட்டின் படி (New Historism), 'வரலாறு என்பது காலத் தேவைக்குத் தகுந்தவாறு புனையப்படுவதுதான்' என்ற உண்மையை வெளிக்கொணர்தல்.

மேற்கண்ட கருத்துக்கள் இவ்வாய்வேட்டின் கருதுகோள்களாக அமைகின்றன.

## 0.3. ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியம், சங்க இலக்கியம் பற்றி வெளிவந்துள்ள திறனாய்வு மற்றும் ஆய்வு நூல்கள், கட்டுரைகள், பட்டத்திற்காக எழுதப்பட்டு நூலாக வெளிவந்த ஆய்வேடுகள் ஆகியன முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய சமூக, அரசியல் இயக்கங்கள் பற்றிய நூல்கள், புதிய வரலாற்றியல் பற்றிய கோட்பாட்டு நூல்கள், சமூகவியல், உளவியல் முதலிய திறனாய்வுக் கோட்பாட்டு நூல்கள் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## 0.4. ஆய்வு அணுகுமுறைகள்

இவ்வாய்வேடு, ஆய்வின் கருதுகோளுக்கு ஏற்ப சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளைத் தொகுத்தல், பகுத்தல், விளக்குதல் முதலிய ஆய்வு முறைகளைப் பயன்படுத்தி உள்ளது.

வரலாறு எழுதுதல், அதற்கான தேவைகள் பற்றி விளக்கும்போது வரலாற்று ஆய்வியல் முறையும், சாதிகள், மறுமலர்ச்சி இயக்கங்கள் பற்றி விளக்கும்போது சமூகவியல் அணுகுமுறையும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாறு, பன்முறைக் கூட்டு ஆய்வியல் அணுகுமுறைகள் இவ்வாய்வேட்டில் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன.

## 0.5. ஆய்வேட்டின் அமைப்பு :

'சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்' என்னும் தலைப்பில் அமையும் இவ்வாய்வேடு, முன்னுரை, தொகுப்புரை நீங்கலாகக் கீழ்க்காணும் முறையில் ஏழு இயல்களாக அமைக்கப்பட்டுள்ளது.

1. வரலாறு எழுதுதலும் அதற்கான தேவைகளும்
2. இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்
3. சமய மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்
4. தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்
5. சாதிகளின் எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும்
6. புதிய திறனாய்வுப் பார்வைகளும் சங்க இலக்கியமும்
7. சங்க இலக்கிய ஆய்வேடுகள்

**இயல் 1 : வரலாறு எழுதுதலும் அதற்கான தேவைகளும்**

வரலாறு என்பது ஒரு நாட்டின், ஒரு சமூகத்தின், ஒரு பண்பாட்டின், ஓர் இனத்தின் வளர்ச்சியோடு பின்னிப் பிணைந்த செயலாகும் அதனால்தான் வரலாறானது அந்தந்தக் காலத்தின் தேவைக்கேற்ப எழுதப்பட்டும், மாற்றப்பட்டும், திருத்தப்பட்டும், விளக்கப்பட்டும் வந்திருப்பதை வரலாற்றில் காணமுடிகிறது இதனை விளக்கும் முறையில் இவ்வியல்,

"வரலாறு - வரலாறு பற்றிய விளக்கங்கள் -ஆய்வாளர்கள் வரலாற்றை அணுகிய முறை - இதிகாசங்கள், தொன்மங்கள் முதலானவற்றின் வரலாற்றுப் பங்களிப்பு - வரலாறு எழுதுவதற்கான தேவைகள் - வரலாற்றின் இருவித போக்கு - வரலாற்றுக்கும் அதிகார வர்க்கத்துக்கும் உள்ள தொடர்பு - வரலாற்றை எழுதியவர்கள் அதிகாரத்துடன் தொடர்புடைய உயர்சாதி வகுப்பினராக இருந்து வந்துள்ள தன்மை - வரலாற்றின் பயன்" என்ற உட்தலைப்புக்களின் கீழ் எழுதப்பட்டுள்ளது

இப்படி எழுதுவதன் மூலம், சங்க இலக்கிய வரலாற்று ஆய்வுகள் அகச்சார்புடன் எழுதப்பட்டிருப்பதை விளக்குவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது ஆய்வேட்டின் கருதுகோளை மெய்ப்பிக்கவும் உதவியாக அமைகிறது.

**இயல் 2 : இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்**

ஐரோப்பியர் ஆட்சியினாலும், கல்வியினாலும், சமயத்தினாலும் இந்தியாவில் பல இயக்கங்கள் தோற்றம் பெற்றன. அவற்றுள் இன்றியமையாதது இந்திய விடுதலை இயக்கமாகும். இவ்வியக்கம் தமிழகத்திலும் மிக வேகமாகப் பரவியது. இந்தியத் தேசியக் கருத்துருவாக்கங்கள் இலக்கியங்களையும் பாதித்தன. இந்த வகையில் சங்க இலக்கியம்,

இந்தியத் தேசிய இயக்கத்துக்கு மூல ஆற்றலாக இருந்து செயல்பட்டுள்ளதையும் அவ்வாறு செயல்பட்டதன் மூலமாக, இந்நூற்றாண்டின் புதிய மதிப்பீடுகளுக்கு ஏற்ப விளக்கம் பெற்றுள்ளதையும் இவ்வியல் ஆராய்கிறது. அதற்கு உதவும் வகையில்,

"இந்தியத் தேசியத்தின் தோற்றம்-இந்திய விடுதலை இயக்கம்-தமிழகத்தில் தேசிய இயக்கச் சிந்தனைகள்-இந்தியத் தேசியமும் தமிழ் இலக்கியங்களும்-இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கியமும்-இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்" முதலான உட்தலைப்புக்களில் இவ்வியல் விளக்கம் பெறுகிறது.

**இயல் 3 : சமய மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்**

தனி மனித வாழ்விலும், சமூக வாழ்விலும் சமயம் இன்றியமையாத இடத்தை வகிக்கிறது. எனவே, சமயத்தின் தாக்கம் இலக்கியத்திலும் இடம் பெறுகிறது. இருபதாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் கலப்பினால் ஏற்பட்ட புதிய மறுமலர்ச்சிக் காலக்கட்டத்தில் சமயத்துறையில் ஏற்பட்ட எழுச்சிகள் இலக்கியத்தையும் இலக்கியத் திறனாய்வையும் பாதித்தன. இச்சமய எழுச்சி சங்க இலக்கியத் திறனாய்வுகளில் செயல்பட்டுள்ள தன்மையை இவ்வியல் ஆராய்கிறது. அதற்கு உதவும் வகையில்,

"சமயத்துக்கும் இலக்கியத்துக்குமான உறவு - இந்தியாவில் ஏற்பட்ட சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் - தமிழகத்தில் சமய எழுச்சி - சங்க இலக்கியத்தை அச்சில் கொண்டுவரும் பணியில் சமய இயக்கங்களின் பங்களிப்பு - சங்கத்துக்கும் சமயத்துக்குமான தொடர்பு - சங்க இலக்கிய ஆய்வுகளில் சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் செலுத்தியுள்ள செல்வாக்கு" முதலான உட்தலைப்புக்களில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**இயல் 4 : தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளும்**

ஆங்கிலக் கல்வியும், கிறித்துவத் தந்தைமார்களின் இலக்கிய இலக்கண ஆய்வுகளும், அச்சுக் கூடங்களின் வருகையும், பழம்பெரும் தமிழ் நூல்களின் அச்சேற்றமும், இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் மறுமலர்ச்சி இயக்கங்கள் தோற்றம் பெறுவதற்குக் காரணங்களாக அமைந்தன. இம்மறுமலர்ச்சி இயக்கங்கள், பழம்பெரும் நூல்களில் பெருமை தேடின. அவ்வாறு தேடித் திரட்டிய பெருமைகளைத் தங்கள் இயக்கங்களின் உறுதிப்பாட்டிற்கும் வளர்ச்சிக்கும் பயன்படுத்திக் கொண்டன. அந்த வகையில் சங்க

இலக்கியம், வடமொழி ஆதிக்கத்திற்கு எதிரான இயக்கங்களுக்கு மூல ஆற்றலாக இருந்து செயல்பட்டுள்ளதையும், அவ்வாறு செயல்பட்டதன் மூலமாக, இந்நூற்றாண்டின் புதிய மதிப்பீடுகளுக்கு ஏற்ப விளக்கம் பெற்றுள்ளதையும் இவ்வியல் ஆராய்கிறது அதற்கு உதவும் வகையில்,

"கிறித்துவத் தந்தைமார்களின் ஆய்வுகள் - வடமொழி ஆதிக்க எதிர்ப்பு இயக்கம் - சமூக, அரசியல் தளத்தில் பார்ப்பனர் அல்லாதார் என்ற அடையாளம் - தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் - நீதிக்கட்சி - சுயமரியாதை இயக்கம்- திராவிடர் கழகம் உருவாதல் - தனித்தமிழ் இயக்கம் - தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்" முதலான உட்தலைப்புக்களில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**இயல் 5 : சாதிகளின் எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும்**

இந்திய நாட்டுச் சமூக அமைப்பு, சாதிகளை அடிப்படையாகக் கொண்டது இந்தச் சாதி அமைப்பு ஐரோப்பியர் வருகையினால் பல மாற்றங்களுக்கு உள்ளானது எப்பொழுதெல்லாம் புதிய ஒரு சூழல் வரலாற்றில் வாய்க்கிறதோ, அப்பொழுதெல்லாம் சாதிகள் விழிப்புற்றுத் தங்களை நிலைநிறுத்திக் கொள்ள முயல்கின்றன இந்தச் சாதிய இயக்கங்கள் சங்க இலக்கியத்தைக் கையாண்ட நிலையை இவ்வியல் ஆராய்கிறது அதற்கு உதவும் வகையில்,

"சாதியம் - இந்திய நாட்டுச் சமூக அமைப்பு - தமிழகத்தில் சாதியம் - சாதிய இயக்கங்களின் எழுச்சி - சாதிகளின் எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும்" முதலான உட்தலைப்புக்களில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**இயல் 6 : புதிய திறனாய்வுப் பார்வைகளும் சங்க இலக்கியமும்**

ஆங்கில இலக்கியத்தில் பெருகிக்கிடந்த திறனாய்வு நூல்களின் அறிமுகத்தால் தமிழிலும் புதிய திறனாய்வுப் பார்வைகள் தோன்றி வளர்ந்தன. இப்புதிய திறனாய்வுப் பார்வைகளின் அடிப்படையிலும் சங்க இலக்கியங்கள் ஆராயப்பட்டன. அவற்றை விளக்கும் முயற்சி இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது. அதற்கு உதவும் வகையில்,

"மூலப்பாடத் திறனாய்வு - உரைமரபுத் திறனாய்வு - கல்வியாளர் திறனாய்வு - அழகியல் திறனாய்வு - சமூகவியல்திறனாய்வு - ஒப்பிலக்கியத் திறனாய்வு" ஆகிய உட்தலைப்புக்களில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

**இயல் 7 : சங்க இலக்கிய ஆய்வேடுகள்**

பல்கலைக் கழகங்களின் பெருக்கத்தினாலும், உயர்கல்விப் படிப்பின் வளர்ச்சியினாலும், பல்கலைக் கழக நிதிக்குழு அளிக்கும் பண உதவியினாலும் ஆராய்ச்சித் துறைகள் பெருகி வருகின்றன. சங்க இலக்கியம் பற்றி இதுவரை நூலாக வெளிவந்துள்ள ஆய்வேடுகளின் தன்மைகளைக் கணிப்பதற்கு இவ்வியலில் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. அதற்கு உதவும் வகையில்,

"மொழியியல் அணுகுமுறை - ஒப்பிலக்கிய அணுகுமுறை - சமூகவியல் அணுகுமுறை கலைநுட்ப அணுகுமுறை - தொல்காப்பிய நெறிப்பட்ட அணுகுமுறை ஆகிய உட்தலைப்புக்களில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

## 0.6. தொகுப்புரை

மேற்கூறிய இயல்களில் ஆராய்ந்து கண்ட முடிவுகளின் தொகுப்புரையாகவும் ஆய்வின் பயனை எடுத்துரைப்பதாகவும் தொகுப்புரை அமைந்துள்ளது அடிக் குறிப்புக்கள் அந்தந்த இயலுக்குப் பின்னால் கொடுக்கப்பட்டுள்ளன. இறுதியில் துணைநூற் பட்டியல் இடம்பெற்றுள்ளது. ஆய்வாளர் ஆய்வுக்காக ஏராளமான நூல்களைப் படித்திருந்தாலும் அடிக்குறிப்புக்களாகப் பயன்படுத்தப்பட்ட நூல்கள் மட்டுமே துணைநூற் பட்டியலில் இடம் பெற்றுள்ளன. ஆய்வுடன் தொடர்புடைய தகவல்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன,

## வரலாறு எழுதுதலும் அதற்கான தேவைகளும்

1.0 'வரலாற்றை முற்றிலும் புறவயமாக நின்று எழுத முடியாது. அவற்றில் அகச்சார்பு இருக்கவே செய்யும்' என்ற கருத்தின் அடிப்படையிலேயே இவ்வாய்வேடு சங்க இலக்கிய ஆய்வுகளை அணுகுகிறது. எனவே, ஆய்வேட்டின் கருத்து விளக்கத்திற்காகவும், ஆய்வை வழிநடத்திச் செல்வதற்குத் துணையாகவும் வரலாற்றியல் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுவது தேவையான ஒன்றாகிறது.

அதற்கு உதவும் வகையில் 'வரலாறு எழுதுதலும் அதற்கான தேவைகளும்' என்னும் இவ்வியல், 'வரலாறு-வரலாறு பற்றிய விளக்கங்கள் - ஆய்வாளர்கள் வரலாற்றை அணுகிய முறை - இதிகாசங்கள், புராணங்கள், தொன்மங்கள் முதலானவற்றின் வரலாற்றுப் பங்களிப்பு - வரலாறு எழுதுவதற்கான தேவைகள் - வரலாற்றின் இருவித போக்கு - வரலாற்றுக்கும் அதிகார வர்க்கத்துக்கும் உள்ள தொடர்பு - வரலாற்றை எழுதியவர்கள் அதிகாரத்துடன் தொடர்புடைய உயர்சாதி வகுப்பினராக இருந்து வந்துள்ள தன்மை - வரலாற்றின் பயன் என்ற உட்தலைப்புக்களின் கீழ் எழுதப்படுகிறது.

### 1.1. வரலாறு

மனிதனின் உணர்வெழுச்சிக்கும், உரிமைகளைப் பெறுவதற்கும், அதனை நிலை நிறுத்துவதற்கும் வரலாறு பயன்படுகிறது எனலாம். அதனால்தான் இன்று ஒவ்வொரு இனமும் தங்களின் இருப்பை உறுதிப்படுத்துவதற்கும், அடையாளத்தை வெளிக்காட்டுவதற்கும் தங்களுக்கான வரலாற்றைக் கட்டமைக்கும் முயற்சிகளில் இறங்கியுள்ளன. இது வரலாற்றுக்காலம் முழுக்க நடந்துவரும் ஒரு நிகழ்வாகும்.

1960-களின் இறுதியில் தோற்றம் பெற்று உலகெங்கிலும் பாதிப்பை ஏற்படுத்திய, "பிரஞ்சு மாணவர் எழுச்சி, வியட்நாம் போர் எதிர்ப்பு, சுற்றுச்சூழல் மற்றும் பெண்ணிய இயக்கங்கள் மேலெழுதல், அறிவியலில் நிர்ணயவாதத்திற்கு (Determinancy principle) ஏற்பட்ட சரிவு, மொழியின் குறியியற் தன்மையை வெளிக்கொணர்ந்த அமைப்பியல், பின்-அமைப்பியற் சிந்தனைகள், அறிவொளிக் (Enlightment) காலத்தில் மேலெழுந்த பகுத்தறிவின் வன்முறையைத் தோலுரித்த பின் நவீனத்துவம்..." 'என்பன வரலாற்றெழுதியல் குறித்த சிந்தனைகளில் பல்வேறு மாற்றங்களைக் கொண்டுவந்து சேர்த்தன.

## 1.2. வரலாறு பற்றிய விளக்கங்கள்

இருபதாம் நூற்றாண்டில் உருவான மறுமலர்ச்சி சிந்தனைகள் வரலாற்றைப் புதிய நோக்கில் பார்த்தன ஆனால், பழைய சிந்தனைகள் வரலாற்றை நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவும், மன்னர்களின் பட்டியலாகவும் கண்டன

'வரலாறு' (History) என்னும் சொல் கிரேக்க மொழியிலிருந்து உருவாயிற்று சட்டத்துறை பற்றிய பூசலில் சான்றுகளை ஆய்வு செய்வதை ஹோமர் (Homer) வரலாறு என்னும் தொடரால் குறிப்பிட்டார் ஆய்வு செய்வதால் ஏற்படும் செய்திகளைக் குறிப்பிடுவதற்குப் பதிலாக உண்மையை வெளிப்படுத்தும் முயற்சியை இத்தொடர் குறிப்பிட்டது ஹெராடட்டஸ் (Herodotus) காலந்தொட்டு இவ்வித வரையறை செய்யப்பட்ட கருத்தில் இச்சொல் வழங்கப்பட்டது[2]

வரலாறு பற்றி அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களைத் தந்துள்ளனர் ஆசிரியர் ஹென்றி ஜான்சன் (Henry Johnson), "பொது நோக்கமாகப் பார்த்தால் இதுகாறும் நடந்தவை எல்லாம் வரலாறு ஆகும் அஃது எப்படியிருப்பினும் கடந்த காலமே வரலாறு ஆகும்" [3] என்பார்

'நிகழ்ச்சிகளைக் கோவைப்படுத்தி, அவற்றின் தொடர்புகளை இணைத்துக் கூறுவது வரலாறு' என்று ஆசிரியர் பிண்ட்லே (Findley) வருணித்துள்ளார் பேராசிரியர் மெயித்லாந்து (Maitland) கருத்துப்படி, 'மனித இனம் கூறியது, செயலாற்றியவை அவற்றிற்கு மேலாக அவர்கள் நினைத்த எண்ணங்கள் யாவுமே வரலாறு ஆகும்[4]

'குற்றங்களையும் இடையூறுகளையும் வருணிப்பது வரலாறு எனறு வால்டேர் (Voltaire) கூறுகிறார் 'மனித இனத்தின் குற்றச்செயல்கள், தவறுகள், இடையூறுகள் போன்றவற்றின் பதிவேடுதான் வரலாறு' என்று கிப்பன் (Gibbon) கூறியுள்ளார் [5]

"நாட்டு மக்களைப் பற்றியும் வரலாற்றில் கூறவேண்டுமென்றும், வரலாற்றைச் சமூகமயமாக்க வேண்டுமென்றும் ரூஸோ (Rouseau) (கி பி 1712-78) கூறினார் பேஸ்டோ (கி.பி.1723-90) வரலாற்றை உயிர்ப்பிக்க வேண்டுமென்று வலியுறுத்திக் கூறியதோடு பல படங்களையும் தயார் செய்தார் மாணவர்கள் தற்கால நிகழ்ச்சிகளை எளிமையில் கற்கும் பொருட்டு வரலாற்றைக் காலவரிசையைப் (Sequence of time) பின்பற்றிக் கற்பிக்க

வேண்டுமென்று ரூஸோவும், பேஸ்டோவும் கூறினார்கள்.[6]

மேற்கண்ட விளக்கங்களை ஆராயும்போது வரலாற்றின் பொருள் விரிந்தது என்பதும், அது காலந்தோறும் விரிந்து வளர்ந்து வந்துள்ளது என்பதும் தெரிகிறது. மேலும், வரலாறு என்பது நிகழ்ச்சிகளின் தொகுப்பு, அந்நிகழ்ச்சிகளைப் பற்றிய விளக்கங்கள் என்பது தெரியவருகிறது.

சி.என். அண்ணாத்துரை,

> "வரலாறு, வெறும் குறிப்பேடு அல்ல. எல்லோருக்கும் எல்லாக் காலத்துக்கும் ஏற்ற வழிகளைக் காட்டவல்ல பாட ஏடும் ஆகிவிடாது. சம்பவங்கள் வரலாற்றுக்கு வித்து; விளக்கங்கள்- இலை, பூ, காய்; பயன்-அதன் கனி என்றும் கூறலாம்"[7]

எனக் குறிப்பிடுகிறார். இங்கு, வரலாறு என்பது நிலையானது அல்ல. மாறக்கூடியது என்ற கருத்து முன்வைக்கப்படுவதைக் காணலாம். நிகழ்ச்சிகள் வரலாற்றுக்கு விதையாகவும், விளக்கங்கள் அவற்றை வளர்த்தெடுப்பதற்குக் காரணமாக அமைவதையும் இங்குக் காணமுடிகிறது. எனவே, விளக்கங்கள் வரலாற்றை வழிநடத்திச் செல்ல பெரிதும் உதவுகின்றன எனலாம். இந்த விளக்கங்கள்தான் வரலாற்றின் ஊடாகத் தொழிற்படும் அகச்சார்புகளுக்கு இடம் கொடுக்கின்றன. அதனாலேயே வரலாறு, எழுதப்படுபவர்களுக்கு ஏற்றவிதமாகச் செயற்படுகிறது.

எனவே, வரலாறு என்பது மிகக் கவனமாகவும் நுணுக்கமாகவும் செயற்படுவதால் இதனைத் தனியொரு பயில் துறையாகவே வளர்த்தெடுக்கும் நிலையை அடைந்தது. கா.சிவத்தம்பி,

> "வரலாறு என்னும் ஆய்வுத்துறையில் அவ்வரலாற்றினை எழுதுவதற்கு அடிதளமாக அமையும் நோக்கங்கள், மனப்பாங்குகள், ஆய்வு முறைகள், அணுகுமுறைகள் என்பனவற்றை, அதாவது வரலாறு எழுதப்படும் முறையை, ஆராய்வதே தனியொரு பயில்துறையாக வளர்ந்துள்ளது. ஆங்கிலத்தில் அதனை "ஹிஸ்ற்றோறியோகிறாஃபி" (Historiography) என்பர்"[8]

எனக் குறிப்பிடுவார்.

## 1.3. ஆய்வாளர்கள் வரலாற்றை அணுகிய முறை

மலினோவெஸ்கி, ரொமிலாதாபர், டி.டி. கோசாம்பி முதலான வரலாற்றாய்வாளர்கள் மார்க்சிய அடிப்படையில் வரலாற்றை அணுகினர். வர்க்கங்களுக்கு இடையேயான உறவுகள், சுரண்டல்கள், போராட்டங்கள், கொடுமையான வரி வசூல்கள், நிறுவனங்களின் பின்னால் இருந்த அரசியல் மற்றும் பொருளியல் நோக்குகள் ஆகியவற்றை வெளிக்கொண்டுவரும் நோக்கில் இவர்களது ஆய்வுகள் அமைந்தன. டி.டி. கோசாம்பி,

> "உற்பத்தி சாதன முறைகளிலும் உற்பத்தி உறவுகளிலும் தோன்றி வந்த மாறுதல்களைக் காலவரிசைக் கிரமமாக எடுத்துரைப்பதே வரலாறு"[9]

என்பார். அவ்வக்கால உற்பத்தி முறைகளை வெளிக்கொணர்வது என்ற அடிப்படையில் வரலாற்றை அணுகிய டி.டி.கோசாம்பி,

> "நிகழ்காலம், கடந்த காலம் ஆகிய இரண்டுக்கும் உள்ள உறவுகளின் வாயிலாக ஆழ்ந்த, அறிவுப் பூர்வமான தெளிவு நிலையை ஊக்குவிப்பதே வரலாற்றின் பணியாகும்"[10]

எனக் கூறுவார். மேலும்,

> "ஒரு வரலாற்று ஆசிரியரின் கடந்த காலத்தைப் பற்றிய தீர்க்கமான பார்வை நிகழ்காலப் பிரச்சினைகளுள் ஊடுருவி நுண்ணறிவால் ஒளியிடும் போது, ஒரு பெரிய வரலாறு நுட்பமாக எழுதப்படுகிறது"[11]

என்பார். இக்கூற்றுக்களின் வாயிலாக இரண்டு செய்திகள் வெளிப்படுகின்றன. அவை (அ) கடந்த காலம் நிகழ்காலம் இவற்றுக்கான தொடர்பு, (ஆ) இந்த இரண்டுக்குமான தொடர்பின் அடிப்படையில் வரலாற்றை எழுதுதல் என்பனவாகும். இவற்றிலிருந்து, வரலாறு என்பது நிகழ்காலத்தேவையின் அடிப்படையில் கடந்த காலத்தை விளக்குவது என்றாகிறது. அதாவது, தேவையின் அடிப்படையில்தான் வரலாறு எழுதப்படுகிறது என்ற கருத்து இங்கு வலிமைபெறுகிறது. அதனால்தான் வரலாறு அவ்வக்காலத்துக்கு ஏற்ற விதத்தில் எழுதப்பட்டும் மாற்றப்பட்டும் வருகிறது எனலாம்.

வரலாற்றாய்வாளரான ரொமிலா தாபர்,"வரலாற்றின் தகவு இரண்டு வகையிலானது. கடந்த காலம் பற்றிய புரிதலைத் தருவது ஒன்று. இறந்த காலத்தின் எச்சங்கள் பலநிலவும்

நமது சமுதாயத்தில் இத்தகைய புரிதலின் தேவை அதிகம். மிக முன்னேறிய தொழில்துறை வளர்ச்சியும் மிகப் பழங்காலத்தைச் சார்ந்த வேட்டையாடுதல் போன்ற தொழில்களும் ஒருங்கே நடைபெறும் நமது சமுதாயத்திற்கு, வரலாறு பற்றிய புரிதல் மிகவும் தேவை. இன்னொன்று, அரசியல் சித்தாந்தத்தில் வரலாற்றியலைத் திட்டமிட்டுப் பயன்படுத்துதல் ஆகும். அண்மைக் காலத்தில் இப்போக்குத் தீவிரப்பட்டிருப்பதை, வரலாற்றுப்பாடநூல்கள் பற்றிய விவாதத்திலிருந்தும் அறியலாம்"[12]

எனக் கூறும் கருத்து நோக்கத்தக்கதாகும். கடந்தகாலம் பற்றிய புரிதல், திட்டமிட்டுப் பயன்படுத்துதல் என்ற இரண்டு கருத்து இங்கே வலியுறுத்தப்படுகிறது. மேலும் வரலாறு என்பது வெறுமனே எழுதப்படுவதல்ல. அது காரண காரியத்துடன் திட்டமிட்டுப் பயன்படுத்தப்படுவது என்பதும் தெரியவருகிறது. இந்தத் திட்டமிட்டுப் பயன்படுத்துதல் என்பது வரலாற்றை எழுதுபவரின் தேவையைப்பொறுத்து அமைகிறது எனலாம்.

வரலாறு குறித்துப் பல்வேறு வினாக்களை எழுப்பி விவாதிக்கும் கா. சிவத்தம்பி,

"வரலாறு என்பது, நிகழ்காலத்தின் தேவைகளுக்கும் நியமங்களுக்கும் இயையக் கடந்த காலத்தைப் பற்றி நாம் கொண்டுள்ள அறிவு என்பது புலனாகின்றது. அதாவது, ஒவ்வொரு வரலாறும், அவ்வவ் வரலாறு எழுதப்பட்ட காலத்திற் கடந்த காலம் பற்றிக் கிளப்பப்பட்ட அன்றேல் கிளம்பிய நிகழ்கால வினாக்களுக்குப் பதிலிறுப்பதாகவே அமைந்துள்ளது"[13]

எனக் குறிப்பிடுகிறார். இங்கும் நிகழ்காலத் தேவையை நிறைவு செய்யவே வரலாறு எழுதப்படுவது தெளிவாகிறது.

கேரளச் சிந்தனையாளரான பி.கே. பாலகிருஷ்ணன்,

"நிகழ்கால யதார்த்தத்தைப் பற்றிய பிரக்ஞை மூலம் இறந்த காலத்தின் மீது வெளிச்சத்தை வீசுவதும், அதன் மூலம் புது அர்த்தத் தெளிவு கொள்ளும் இறந்தகாலம், அதே ஒளியை மேலும் தீவிரமாக நிகழ்கால யதார்த்தங்களின் மீது பிரதிபலிப்பதுமான ஒரு அறிவுச்செயல்பாட்டையே நாம் வரலாற்றாய்வு என்கிறோம்"

என வரலாற்றாய்வு குறித்து விளக்குகிறார். இங்கு வரலாற்றாய்வு குறித்த அறிவுச் செயல்பாடு புலப்படுகிறது. நிகழ்காலத் தேவை காரணமாக ஆராயப்பட்ட சங்க இலக்கியம், அதனால் புது அர்த்தத் தெளிவு பெற்றதும், அந்தப் புது வெளிச்சத்தின் காரணமாக நிகழ்காலத்தேவை நிறைவுசெய்யப்பட்டதுமான ஓர் அறிவுச் செயல்பாட்டைச் சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகளில் காணமுடிகிறது. பி.கே. பாலகிருஷ்ணனின் கூற்று, சங்க இலக்கிய வரலாற்றியல் ஆய்வுகளுக்கும் பொருந்தி வருவதைக் காணமுடிகிறது. மேலும், வரலாற்றாய்வின் தொழிற்பாட்டைக் குறித்த தெளிவை வழங்குகிறது எனலாம்.

அடுத்து, வரலாற்றை எழுதும் ஆய்வாளர்கள் முற்றிலும் புறவயமாக நின்று ஒன்றை எழுதவியலாது என்பதையும் விளக்கவேண்டியிருக்கிறது. அப்போதுதான் சங்க இலக்கிய ஆய்வுகள் அகச்சார்போடு இயங்கியதை விளக்குவதற்குத் துணையாக இருக்கும். எனவே, வரலாற்றை எழுதும் எழுத்தாளன் சமூகத்தால் கட்டுண்டவன். எனவே, சமூகம் உற்பத்தி செய்த நிலைமையை முற்றிலுமாக மீறி அவனால் இயங்க முடியாது எனலாம். இதனை,

"எவராலும் முற்றிலும் புறவயமாக எதையும் பார்க்க இயலாது. மொழி, கருத்தியல் மற்றும் தன்னிலையால் (Subject) பிரதிகள் கட்டுப்பட்டுள்ளதுபோல, மனித தன்னிலையும் கட்டப்பட்டதுதான் என்று பின்னை நவீனத்துவம் கூறுகிறது. தன்னிலை பற்றி பெல்சி (Belsey) என்பவர் கூறும்போது, இது இயற்கையானதல்ல, நிரந்தரமானதல்ல, உற்பத்தி செய்யப்படுகிறது. குறிப்பிட்ட அதிகார உறவுகளாலும், உறவுகளுக்குள்ளும் இது உற்பத்தியாகிறது. மறு உற்பத்தி செய்யப்படுகிறது என்பார். புறத்தால், உறவுகளால் அகம் உற்பத்தியாகிறது. இது பன்முகத்தன்மை வாய்ந்தது. உற்பத்தி செய்யப்பட்ட நிலைமையை முற்றிலுமாக மீறி அகத்தால் புறத்தை அறிய முடியாது"[15]

என்ற கூற்றுத் தெளிவுபடுத்துவதைக் காணலாம். எனவே, வரலாற்றாய்வாளனும் அகச்சார்பு இன்றி இயங்க முடியாது என்பதும், இந்நிலைமை சங்க இலக்கிய ஆய்வுகளுக்கும் பொருந்தும் என்பதும் தெளிவாகிறது எனலாம்.

### 1.4. இதிகாசங்கள், புராணங்கள், தொன்மங்கள் முதலானவற்றின் வரலாற்றுப் பங்களிப்பு

பழமையான நிகழ்வுகளை முன்வைத்து நிகழ்காலத் தேவைகளை நிறைவு செய்யும்

நிலை ஆளும் வர்க்கத்தால் எல்லாக் காலக்கட்டத்திலும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது எனலாம். "ஆதிகாலச் சமூகங்களுக்கு வரலாற்றுணர்வை வெளிப்படுத்தும் வடிவங்களாக இதிகாச புராணங்கள் விளங்கின. (வடமொழியில் 'இதிகாசம்' என்ற சொல்லுக்கு, 'இவ்வாறு அது இருந்தது' எனவும், 'புராணம்' என்பதற்குப் 'பழைமை' என்றும் பொருள் உண்டு)"[16] என்பர்.

வாய்மொழியாக வழங்கி வந்த கதைகள் அவ்வக்காலச் சூழலுக்கு ஏற்ப புராண, இதிகாசங்களாக எழுதப்பட்டதும், சங்க இலக்கியப் பாடல்கள் தொகுக்கப்பட்டதும் அரசியல் தேவையின் காரணமாக இருக்கலாம். அகத்தியக் கட்டுக் கதைகள் குறித்து ஆராய்ந்த கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி,

> "இதிகாசங்களிலும் புராணங்களிலும் மட்டுமன்றி தமிழிலக்கியத்திலும், அகத்தியக் கட்டுக்கதைகள் சிறப்பிடம் பெறுகின்றன. எனவே, வரலாற்று நிகழ்ச்சிகளின் அடிப்படையில் இக்கதைகள் புனையப்பட்டவை என்பதைச் சிறிது சிந்தித்தாலும் நாம் தெரிந்து கொள்ளலாம். தென்னிந்தியாவை ஆரிய மயமாக்கி ஆரிய நாகரிகத்தை அங்குப் பரப்பிய பேரியக்கமே அக்கதைகளிற் காணப்படும் உண்மையாகும்"[17]

என்பார். இவ்வாறு ஒவ்வொரு காலக்கட்டத்திலும் பழமையான நிகழ்வுகளைக் கொண்டு வரலாறு இயங்கிவந்திருப்பதை அறியமுடிகிறது.

இறையனார் களவியல் உரையில் குறிப்பிடப்படும் சங்கம் பற்றிய கருத்துக்களை 'ஒரு பிரிவினரின் தேவை கருதிய வலுக்கட்டாயமான திணிப்பு' என்பார் கோ.கேசவன்.[18] இது குறித்து எழுதிய கா. சிவத்தம்பி,

> "ஐதீகவாக்கம் என்பது வரலாற்றினைத் "தயாரிக்கும்" ஒரு வகைமுறையாகும். இறையனார் களவியலுரையிலே தரப்பட்டுள்ள சங்கம் பற்றிய கட்டுக்கதை, தமிழை இந்துமயப் படுத்துவதற்கான, முக்கியமாக அதனைச் சைவ மரபின் ஓரங்கமாக ஆக்குவதற்கான ஒரு முயற்சியேயாகும்" [19]

என்பார். இங்கும் காலத்தின் தேவைக்கேற்ப பழைய கருத்துக்கள் புதிய வடிவில் உருப்பெறுவதைக் காணமுடிகிறது.

## 1.5. வரலாறு எழுதுவதற்கான தேவைகள்

ஒரு நாட்டின், சமூகத்தின், அமைப்பின் வளர்ச்சியோடு பின்னிப் பிணைந்த ஒன்றாக வரலாறு விளங்குவதால் அதை எழுதுவது என்பது தேவையான ஒன்றாகிறது. தம்மை உயர்த்திப்பிடிப்பதற்கும், தம்முடைய இருப்பின் தேவையை நியாயப்படுத்துவதற்கும், தேவையான சொல்லாடல்களை உருவாக்கும் கருத்தியல் கருவியாக வரலாறு விளங்குவதால் அதனைத் தமக்கேற்ற வகையில் பயன்படுத்துவது முதன்மையானதாகிறது. வரலாறு எழுதுவது குறித்து ரவிக்குமார்,

> "தன்னை மக்களுக்கு 'மேலான' நிலையில் வைத்து, வெகுமக்களை மனித உயிரிகளே இல்லை என்கிற நிலைக்குத் தள்ளுவதற்காக அதிகாரம் கைக்கொள்ளும் எண்ணற்ற நடவடிக்கைகளில் வரலாற்றை எழுதுவது என்பதும் ஒன்று"[20]

எனக் குறிப்பிடுவார்.

தேசம், தேசியம் முதலான கருத்துக்களை வளர்த்தெடுக்க வரலாறு சிறந்த கருவியாகிறது. ஓர் இயக்கம் தன்னை வளர்த்து எடுப்பதற்கு வரலாற்றைத் திரித்தல், பழைய தத்துவங்களுக்குப் புதிய விளக்கங்கள் கொடுத்தல் முதலான செயல்களில் ஈடுபடுவதைக் காணலாம். இந்தியத் தேசிய இயக்கத்தின் செயல்பாடுகள் இதற்குச் சரியான சான்றுகளாக அமைகின்றன.

இந்தியா குறித்த ஆங்கிலேயரின் கருத்துக்களை உடைத்தெறிய, இந்தியத் தேசியம் குறித்த பழம்பெருமைகளை உள்ளடக்கிய வரலாறு தேவைப்பட்டது. அப்பணியை இந்தியத் தேசிய இயக்கத்தினர் சிறப்பாகச் செய்தனர். 'இந்தியா ஆரிய நாடு' என்றும், 'வடமொழி உயர்ந்த மொழி' எனவும் வரலாற்றைக் கட்டிய தேசிய இயக்கத்தினருக்கு எதிராகத் தமிழகத்தில் தமிழை முன்னிறுத்தித் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரால் பொற்கால வரலாறு எழுதப்பட்டது.

## 1.6. வரலாற்றின் இருவித போக்கு

அரசாங்கத்தை வழிநடத்திச் செல்கின்றவர்களும், அதற்கு எதிர்நிலையில் உள்ளவர்களும் வரலாற்றை உருவாக்குவதில் மும்முரமாக ஈடுபடுகின்றனர். இதற்குச் சரியான

சான்றாக இந்தியாவை ஆண்ட ஆட்சியாளர்களும், அவர்களுக்கு எதிராக நின்ற இந்தியத் தேசிய இயக்கத்தினரும் வரலாற்றைப் பயன்படுத்திய நிலையைக் காட்டலாம்.

"ஆங்கிலேய ஆட்சியாளர்கள் இந்திய மக்களுக்கு ஜனநாயகம் என்றால் என்னவென்றே தெரியாது என்றும், அதைப்பற்றிய அனுபவம் கிடையாதென்றும் தொடர்ந்து பிரச்சாரம் செய்து இந்திய மண்ணில் தங்களது ஆட்சியை நியாயப்படுத்தி வந்தனர். மேலும், ஆங்கிலேயத் தரப்பில் இந்தியர்களுக்குத் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளத் தெரியாது என்றும் பிரச்சாரங்கள் முடுக்கப்பட்டன"[21]

என்பர். ஆங்கில ஆட்சியாளர்கள் வரலாற்றைப் பயன்படுத்தியது பற்றி எழுதும் எஸ்.ஏ.டாங்கே,

"வளர்ந்து வரும் விடுதலை இயக்கத்தைச் சோர்வடையச் செய்வதற்காக, இந்தியாவில் ஆங்கிலேய அதிபர்கள் சரித்திரத்தைப் பயன்படுத்தினார்கள்; உலக சரித்திரம், அதன் தொன்மை, அதன் சாதனை ஆகியவற்றுடன் ஒப்பிட்டால் இந்தியாவும் இந்திய மக்களும் சுத்த சூன்யமாயிருப்பதாகவும், இந்தியச் சரித்திரத்தைக் தெரிந்தவரையில் அன்னியப் படையெடுப்பாளர்களின் வசப்பட்டு, அவர்களுடைய ஆட்சிக்கு இலக்காவதே நம் தேசத்தின், நமது தேச மக்களின் சரித்திர விதியாயிருக்கிறதென்ற முடிவுக்கே வர முடிகிறதென்றும், ஒரு மனோபாவத்தை மக்களின் தலைமையில், சிருஷ்டிப்பதற்காக, ஆங்கிலேய ஆட்சியாளர்கள் சரித்திரத்தைப் பயன்படுத்தினார்கள். பூகோளம், சீதோஷ்ணம், பண்பாடு அனைத்தும், தவிர்க்க முடியாத விதியாக இதை நம்மீது சுமத்திவிட்டதாக அவர்கள் கூறினார்கள்"[22]

என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு ஆங்கிலேய ஆட்சியாளர்கள் தங்கள் ஆட்சியின் வலிமைக்காக இந்திய வரலாற்றைக் கட்டினார்கள். இவர்களுக்கு எதிராக இந்தியத் தேசிய இயக்கத்தினர் தங்களுக்கான வரலாற்றைக் கட்டுவதில் மிகுந்த கவனம் செலுத்தினர்.

இந்தியத் தேசிய இயக்கத்தினரின் வரலாற்றுச் செயல்பாட்டைப் பற்றி எழுதிய செந்தில்பாபு,

"அவர்களும் எந்த விதமான வரலாற்றுப்பூர்வமான ஆதாரங்களும் இல்லாது அரசியல் தன்மையுடன் கூடிய 'கதை'களையே முன்வைக்கத் தொடங்கினர். புராதன இந்திய நாட்டில் மகோன்னதமானதோர் பொற்காலம் நிலவியதாக அவர்கள் கதைகட்டத்தொடங்கினார்கள். அப்படிக் கூறுவதற்கு அவர்கள் தேர்வு செய்துகொண்ட காலம் மனித நினைவுகளுக்கு அப்பாற்பட்ட மிகப் பழங்காலம். எவருக்கும் தெரியாத ஒரு காலம் பற்றிக் கற்பனைகளைப் படரவிடும்போது அவற்றை நம்ப வைப்பது எளிது"[23]

என்று குறிப்பிடுகிறார்.

இந்தியத் தேசிய இயக்கம், வரலாற்றைத் திட்டமிட்டுக் கட்டமைத்த விதம் குறித்து எஸ்.ஏ. டாங்கே,

"அசோகா தூண் ஒரு உண்மை. ஒரு மெய்ப்பொருள்; இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நாம் அத்தகைய அருமையான சன்மார்க்க நெறிகளைப் போதித்தோமென்பதையும், அத்தகைய ராஜ்யத்தில் நாம் வாழ்ந்தோமென்பதையும் அதன் தொன்மை எடுத்துக்காட்டுகிறது. ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், மொஹன்ஜாதாரோவில் குளிக்கும் அறைகள் இருந்தன, ஓடுகள் இருந்தன; ஒரு நகரம் இருந்தது. எனவே, நீங்கள் வந்து எங்களுக்குப் போதிப்பதற்கு முன் நாங்கள் நாகரீகம் அடையவில்லையென்றும், உங்கள் உதவியில்லாமல் நாங்கள் மீண்டும் நாகரீகமாக வாழமுடியாதென்றும் கூறாதீர்கள்"[24]

என்று எழுதுகிறார். இவற்றிலிருந்து ஆளும் வர்க்கமும், அவற்றை எதிர்த்து அதிகாரத்தைக் கைப்பற்ற விரும்பிப் போராடும் வர்க்கமும் தங்களுக்கான பார்வையில் வரலாற்றை வடிவமைப்பதைக் காணமுடிகிறது. இவர்கள் இருவருமே வரலாற்றைக் கட்டுவதற்குப் பழமையான நிகழ்வுகளையே பயன்படுத்திக் கொள்ளுவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## 1.7. வரலாற்றுக்கும் அதிகாரவர்க்கத்துக்கும் உள்ள தொடர்பு

வரலாறு எப்போதுமே ஆளும் வர்க்கத்தின் அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. அதனால் வரலாறு அதிகார வர்க்கத்துடன் தொடர்புடையதாகிறது எனலாம். ஏற்கனவே உள்ள அரசை எதிர்த்துப் போராடும் வர்க்கம் தன் போராட்டத்தில்

வெற்றி பெற்று ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றும்போது மீண்டும் தனக்கான வரலாற்றைப் புதுப்பித்துக்கொள்வதைக் காணமுடிகிறது. இதற்குச் சான்றாக, ஆங்கிலேயரை எதிர்த்து விடுதலை பெற்ற இந்தியத் தேசிய இயக்கம் ஆட்சியில் அமர்ந்தவுடன் இந்திய வரலாற்றைப் போராட்ட வரலாறாகப் புதுப்பித்து எழுதியதைக் கூறலாம். இந்நிலை குறித்துச் செந்தில்பாபு,

> "விடுதலை பெற்ற அன்றைய இளம் இந்தியாவுக்குத் தன் உருவாக்கத்தின் இருத்தலின் நியாயத்தைத் தன் மக்களின்முன் நிரூபித்துக்கொள்ள வேண்டியுள்ளது. எனவே, சுதந்திரப் போராட்ட வரலாற்றை வலுவாக முன்வைத்து வரலாறு எழுதப்பட்டது. அது நம் மனங்களில் ஆழப்பதிந்துள்ளது. இது அரசியல்தான்"[25]

என எழுதுகிறார். இதிலிருந்து வரலாற்றை எழுதுவது என்பது அரசியலின் ஒரு பகுதிதான் என விளங்கிக்கொள்ள முடிகிறது. இப்போக்கு இன்றைய அரசுகளுக்கும் பொருந்தும் எனலாம். வரலாற்றுப் பாடநூலை மாற்றி எழுதும் போக்கிலிருந்து இதனைத் தெளிவாக உணரலாம். இது குறித்துக் கண. குறிஞ்சி,

> "எடுத்துக்காட்டாகக் குஜராத் மாநிலக் கல்வித்துறையின் ஒன்பதாம் வகுப்பு வரலாற்றுப்பாடநூலில் வர்ணாசிரம தர்மம் புகழ்ந்துரைக்கப்படுகிறது. "சாதி விலை மதிப்பற்ற பரிசு" என வரவேற்கப்படுகிறது. சிறுபான்மையோராகிய இசுலாமியர், கிருத்துவர் மற்றும் பார்சிக்கள் 'அந்நியர்' என முத்திரை குத்தப்பட்டுள்ளனர். "இஸ்லாம் வன் கொடுமையை மட்டுமே கற்பிக்கிறது." என அச்சிட்டு வெளியிடுகின்றனர். ஆனால், "அதே சமயத்தில் உடன் கட்டை ஏறுவது (சதி) என்பது ஓர் உயர்வகைப் பெருமை" எனப் பாடநூல் வாயிலாகக் கூசாமல் கற்பிக்கின்றனர்"[26]

என எழுதுகிறார். இக்கூற்று வரலாற்றுக்கும் அதிகார வர்க்கத்துக்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்துகிறது எனலாம். ஒவ்வொரு அரசும் தனக்கான வரலாற்றை எழுதுவதன் மூலம் வரலாறு என்பது காலத்தின் தேவைக்கேற்ப மாற்றப்பட்டு வருவது தெளிவாகிறது.

## 1.8. வரலாற்றை எழுதியவர்கள் அதிகாரத்துடன் தொடர்புடைய உயர்சாதி வகுப்பினராக இருந்து வந்துள்ள தன்மை.

'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே' என்பார் தொல்காப்பியர். அறிவுத்துறை நடவடிக்கைகளில் காலங்காலமாக உயர் சாதியினரே இருந்து வந்துள்ளமையால்

வரலாற்றைக் கட்டமைத்தவர்களும் அவர்களாகவே இருந்துள்ளனர் எனலாம். அதனால்தான் வரலாறு, ஆளும் வர்க்கச் செயல்பாடுகளை விவரிக்கும் அளவுக்கு, அடித்தள மக்களின் உணர்வுகளை எதிரொலிப்பதில்லை. இந்தியத் தேசியப் போராட்ட வரலாற்றை எழுதியவர்களும் கூட அடித்தட்டு மக்களின் போராட்டப் பங்களிப்பு குறித்து விரிவாக எழுதாதது கவனத்துக்கு உரியதாகும். இதுவரை எழுதப்பட்ட வரலாறுகளின் செயல்நிலை குறித்து எழுதும் அ.மார்க்ஸ்,

" இதுவரை எழுதப்பட்ட வரலாறுகள் அனைத்துமே நிலைபெற்ற மையங்களின் வரலாறுகளாகவே (Sedantic Histories) இருந்தன. மையங்கள் வலுவாக இருந்த காலமே பொற்காலங்களாகவும் போற்றப்பட்டன. இவ்வகையில் சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம் என வரலாறு காலப்பாகுபாடு செய்யப்பட்டது. மையங்கள் வலு குறைந்த காலங்கள் இருண்டகாலங்களாகக் குறைத்துரைக்கப்பட்டன"[27]

என்கிறார். வர்க்க அடிப்படையில் வரலாற்றை ஆராய்ந்த மார்க்சிய வரலாற்றெழுதியலுங்கூட மையத்தை நோக்கிய வரலாறாகவே எழுதப்பட்டுள்ளது என்கிறார் அ.மார்க்ஸ். அவருடைய கூற்றாவது,

"மார்க்சிய வரலாற்றெழுதியலுங்கூட, மைய நீரோட்ட வரலாற்றெழுதியல் போலவே மையங்களைப் பற்றியே ஆய்வு செய்தது. பின்னது மையங்களின் மேன்மையைச் சுட்டிக்காட்டியது என்றால் முன்னது அவற்றின் ஊழல்களைச் சுட்டிக்காட்டியது. இருசாராரும் மையங்களிலிருந்து புவியியல் அடிப்படையிலும், அரசியல் பொருளாதார ரீதியிலும், கருத்தியல்-கலாச்சார மட்டங்களிலும் தூர விலகியிருந்த விளிம்புகளைக் கணக்கில் கொள்ளவில்லை. மையத்திற்கும் (Centre) விளிம்பிற்குமான (Periphery) உறவு ஆராயப்படவில்லை"[28]

என்பதாகும். இவ்வாறான, மையத்தை நோக்கிய பார்வைக்குக் காரணம் வரலாற்றின் உருவாக்கத்திற்கு முன்னின்றவர்கள் பெரும்பாலும் உயர் சாதியினராக இருந்துள்ளமையே எனலாம். இதனை, இந்தியத் தேசியம் பற்றிய கருத்துக்களை உருவாக்குவதில் முன்னின்ற தலைவர்களும், தமிழகத்தில் தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களை நடத்திய தலைவர்களும் உயர்சாதியினராக இருந்துவந்துள்ள தன்மையினின்றும் உணரலாம்.

இந்து மதத்தை முன்வைத்து இந்தியத் தேசியம் என்ற கருத்தை வளர்த்தெடுக்கக் காரணமாக அமைந்த தலைவர்களான ராஜாராம் மோகன்ராய், தேவேந்திரநாத் தாகூர், கேசவ சந்திரசென், தயானந்த சரஸ்வதி, இராமகிருஷ்ணர், விவேகானந்தர், முதலானவர்கள் உயர்சாதியினர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1885இல் இந்தியத் தேசிய இயக்கத்தைத் தோற்றுவிக்கக் காரணமாக இருந்த தலைவர்களான சுரேந்திரநாத் பானர்ஜி, ஆனந்த மோகன் போஸ், துவாரகநாத் கங்குலி, கிருஷ்ணகுமார் மித்ரா, ஜி.சுப்பிரமணிய அய்யர், மு. வீரராகவாச்சாரியார், பீடர் பெருமாள் பிள்ளை, பி. ரங்கய்ய நாயுடு, தாதாபாய் நவ்ரோஜி, காசிநாத் திரியம்பாக்திலங், பிரோஷா மேத்தா, தின்ஷா எதில்ஜிவாச்சா, சிப்லங்கர், மகா கோவிந்த ரானடே, திலகர் முதலானவர்களில் பெரும்பான்மையோர் உயர்சாதியினர் ஆவர்.

தமிழகத்தைப் பொறுத்தவரை நீதிகட்சியைத் தோற்றுவித்த பி.டி. தியாகராசர், டி.எம். நாயர், சி. நடேசன், மற்றும் நீதிக்கட்சியில் ஆதிக்கம் செலுத்திய ஏ.வி. முத்தையா முதலியார், மீனாட்சி சுந்தர முதலியார், பி.சி. மாணிக்கவாசக முதலியார், சி.என். அண்ணாத்துரை, பி. சிதம்பரம், எஸ். குருசாமி, சி.ஏ. அய்யாமுத்து, ஈ.வே. ராமசாமி, எம்.கே. ரெட்டி, ஜெயராம் நாயுடு, ஜே.எஸ். கண்ணப்பர், டபிள்யூ.ஏ. சௌந்திரபாண்டிய நாடார், வி.வி. ராமசாமி நாடார், எஸ்.ஏ. முத்துசாமி நாடார் முதலான தலைவர்கள் உயர்சாதியினராகவே காணப்படுகின்றனர்.

மேலும், தமிழக வரலாற்றை எழுதிய ஆரம்பக்கால அறிஞர்களான, வெ.கனகசபைபிள்ளை, பூரணலிங்கம்பிள்ளை, கா.சு. பிள்ளை, சி.வை.தாமோதரம்பிள்ளை, நாகை வேதாசலம்பிள்ளை, தா.கைலாசப்பிள்ளை, பெ.சுந்தரம்பிள்ளை, ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை, கே.என்.சிவராஜப்பிள்ளை முதலானவர்கள் உயர்சாதியினராகவே இருந்துள்ளனர்.

வரலாற்றை எழுதியவர்களும், இயக்கங்களை முன்னின்று நடத்தியவர்களும், இவர்களுக்குப் பண உதவி செய்த பெருவணிகர்களும், ஆலை முதலாளிகளும் உயர்சாதியைச் சேர்ந்தவர்களாகவே இருந்துள்ளனர். எனவே, நிகழ்காலத் தேவையை நிறைவு செய்யும் வரலாற்றின் குணத்தை இவர்கள் பயன்படுத்திக் கொண்டனர் எனலாம். தற்காலத்தில் சிந்தனை உலகில் ஏற்பட்ட மாற்றத்தின் காரணமாக, ஒடுக்கப்பட்ட மக்களை

நோக்கிய வரலாறுகள் வெளிவரத் தொடங்கியுள்ளன.

## 1.9. வரலாற்றின் பயன்

இவ்வாறு எழுதப்படும் வரலாறுகள் ஒரு சமூக, இன, வர்க்க, அரசியல் வளர்ச்சிக்குப் பயன்பட்டு வருகின்றன.

வரலாறானது அதிகாரத்தைப் பெறுவதற்கும், பெற்ற அதிகாரத்தை நிலை நிறுத்துவதற்கும், அதிகாரம் தம்முடைய இருப்பை நியாயப்படுத்துவதற்கும் பயன்படுகிறது.

ஒடுக்கப்பட்ட இனங்கள் தங்களின் உரிமையைப் பெறுவதற்கும், நிலைநிறுத்துவதற்கும், வளர்வதற்கும் வரலாறு எழுதுதல் பயன்படுகிறது.

கடந்தகால நிகழ்வுகளை நிகழ்காலத் தேவைக்கு ஏற்றவாறு பயன்படுத்திக்கொள்ளும் பணியை வரலாறு செய்கிறது.

ஓர் இயக்கத்தின் உருவாக்கத்திற்கு, வளர்ச்சிக்கு, வெற்றிக்கு வரலாறு இன்றியமையாததாகிறது.

இக்காரணங்களால் வரலாறானது உலகெங்கிலும் எழுதப்பட்டு வருகிறது எனலாம்.

## 1.10. கருத்துரை

1. வரலாறு குறித்த பல்வேறு வரையறைகள் விளக்கப்பட்டன. அதிலிருந்து பெறப்பட்ட, "நிகழ்கால யதார்த்தத்தைப் பற்றிய பிரக்ஞை மூலம் இறந்த காலத்தின் மீது வெளிச்சத்தை வீசுவதும், அதன்மூலம் புது அர்த்தத் தெளிவு கொள்ளும் இறந்த காலம், அதே ஒளியை மேலும் தீவிரமாக நிகழ்கால யதார்த்தங்களின் மீது பிரதிபலிப்பதுமான ஒரு அறிவுச்செயல்பாட்டையே நாம் வரலாற்றாய்வு என்கிறோம்" என்ற வரையறை சங்க இலக்கிய ஆய்வுகளுக்குத் துணையாவது சுட்டப்பட்டது. இந்த அடிப்படையில் சங்க இலக்கிய ஆய்வுகளை விளக்கும் முயற்சி பின்வரும் இயல்களில் மேற்கொள்ளப்படுகிறது.

2. வரலாறு, காலத்தின் தேவைக்கேற்ப அவ்வப்போது எழுதப்படக்கூடியது. அது மாறும் தன்மை கொண்டது. அதிகாரத்துடன் தொடர்புடையது. முற்றிலும் புறவயமாக நின்று வரலாற்றை எழுத முடியாது, அது அகச்சார்புடன் செயல்படக்கூடியது என்பன

விளக்கப்பட்டன. இதன் மூலம், ஆய்வேட்டின் கருதுகோள்களில் ஒன்றான,

"வரலாறு என்பது காலத்தேவைக்குத் தகுந்தவாறு புனையப்படுவதுதான்"

என்ற உண்மை மெய்ப்பிக்கப்படுகிறது.

3. மேற்கண்ட கருத்துக்களின் அடிப்படையில் சங்க இலக்கிய ஆய்வுகளை விளக்கும் முயற்சி பின்வரும் இயல்களில் மேற்கொள்ளப்படுகிறது. முதலாவதாக, 'இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்' என்ற தலைப்பில் இந்தியத் தேசிய இயக்கம் சங்க இலக்கியத்தை அணுகிய நிலையை விளக்கும் முயற்சி அடுத்த இயலில் மேற்கொள்ளப்படுகிறது.

# அடிக்குறிப்புக்கள்

1. அ. மார்க்ஸ், விளிம்பு நிலை உணர்வும் எழுதுதலும்: சுருக்கமான அறிமுகம், அ.மார்க்ஸ், பொ.வேல்சாமி (தொகு. ஆசி.), விளிம்பு நிலை ஆய்வுகளும் தமிழ்க் கதையாடல்களும், பக். 13-14
2. ஆர். திருஞான சம்பந்தம், வரலாறு கற்பித்தல், ப. 3
3. மேலது., ப. 2
4. மேலது., பக். 2, 3
5. மேலது., ப. 7
6. மேலது., ப. 9
7. டி.எம்.பார்த்தசாரதி, தி.மு.க. வரலாறு, சி.என்.அண்ணாத்துரை, முன்னுரை, ப. 5
8. கா. சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, முன்னுரை, ப. VIII
9. டி.டி. கோசாம்பி, பண்டைய இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றி... வரலாறு, ப. 14
10. மேலது., ப. 39
11. மேலது., ப. 39
12. ஞானி, (தொகு.), மார்க்சியத்தின் புதிய பரிமாணங்கள், பக். 16-17
13. கா. சிவத்தம்பி, மு.நூ., ப. 192
14. காலச்சுவடு-13, மார்ச் 1996, ப. 34
15. ராஜ் கௌதமன், அறம்/அதிகாரம், பக். 8, 9
16. நிறப்பிரிகை, பிப்ரவரி-4, 1992, ப. 4
17. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு (முதல் பகுதி), ப. 114
18. கோ. கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப. 143
19. கா. சிவத்தம்பி, மு.நூ., ப. 65
20. நிறப்பிரிகை, ஜனவரி 1992, ப. 57
21. புதுவிசை, ஆகஸ்ட் 2000, ப. 33
22. எஸ்.ஏ. டாங்கே, பண்டைக்கால இந்தியா, ப. 6
23. புதுவிசை, ஆகஸ்ட் 2000, ப. 33

24. எஸ்.ஏ. டாங்கே, மு.நூ., ப. 9

25. புதுவிசை, ஆகஸ்ட் 2000, ப. 33

26. ஞானி, (தொகு.), மார்க்சியத்தின் புதிய பரிமாணங்கள், கண. குறிஞ்சி, முன்னுரை, ப. 1

27. அ. மார்க்ஸ், விளிம்பு நிலை ஆய்வுகளும் எழுதுதலும்: சுருக்கமான அறிமுகம், அ.மார்க்ஸ், பொ.வேல்சாமி, (தொகு.ஆசி.), மு.நூ., ப. 12

28. மேலது., ப. 13

# இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

2.0 ஐரோப்பியர் ஆட்சியினாலும்,கல்வியினாலும்,சமயத்தினாலும் இந்தியாவில் பல்வேறு சமூக, அரசியல் இயக்கங்கள் தோற்றம் பெற்றன. அவற்றுள் ஒன்று இந்திய விடுதலை இயக்கமாகும். ஆங்கிலேயர் ஆட்சியின் நிர்வாக மையங்களுள் ஒன்றாகச் சென்னை விளங்கியதால் இந்திய விடுதலை இயக்கத்தின் தோற்றத்தோடு தமிழ்நாடும் நெருங்கிய உறவு கொண்டிருந்தது. இந்திய விடுதலை இயக்கத்தின் தாக்கம் தமிழகத்தில் வேகமாகப் பரவியது. இதன் காரணமாகப் பழம் பெரும் தமிழ் இலக்கியங்களை ஆராய்ச்சி செய்வதிலும் இந்திய விடுதலை இயக்கப் பார்வை செல்வாக்கு செலுத்தியது. இந்த வகையில் சங்க இலக்கியம் இந்திய விடுதலை இயக்கத்துக்கு மூல ஆற்றலாக இருந்து செயல்பட்டுள்ளதையும், அவ்வாறு செயல்பட்டதன் மூலமாக, இந்நூற்றாண்டின் புதிய மதிப்பீடுகளுக்கு ஏற்ப விளக்கம் பெற்றுள்ளதையும் காணும் முயற்சி இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது.

அதற்கு உதவும் வகையில், "இந்தியத் தேசியத்தின் தோற்றம்-இந்திய விடுதலை இயக்கம் -தமிழகத்தில் தேசிய இயக்கச் சிந்தனைகள்- இந்தியத் தேசியமும் தமிழ் இலக்கியங்களும்- இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கியமும்-இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்" ஆகிய உட்தலைப்புக்களில் இவ்வியல் ஆராய்கிறது.

## 2.1. இந்தியத் தேசியத்தின் தோற்றம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியாவின் கடற்கரைப் பகுதிகளான வங்காளம், மராட்டியம், குஜராத், தமிழ்நாடு ஆகியவற்றில் தேசிய உருவாக்கம் முதலில் தோன்றியது. இந்தியா என்ற கருத்தாக்கமும், இந்தியத் தேசிய இயக்கமும் கூட இந்நாடு முழுக்க தோன்றியிருந்த சமய இயக்கங்களின் பின்னணியில்தான் உருவாயின எனலாம். ஐரோப்பாவில், இத்தாலியில் ஏற்பட்ட மறுமலர்ச்சி இயக்கமும், ஜெர்மனியில் ஏற்பட்ட சீர்திருத்த இயக்கமும், தேசிய உணர்வை வளர்த்தது போன்று, இந்தியாவில் சமுதாய அரசியல் ஆற்றல் யாவும் சமய இயக்கங்களின் வாயிலாக வெளிப்பட்டன.

இந்து மதத்தில் தோன்றிய சமய இயக்கங்களில் குறிப்பிடத்தக்கன, பிரம்ம சமாஜம் (1828); பிரார்த்தனை சமாஜம் (1857); ஆரிய சமாஜம் (1875); இராமகிருஷ்ணா மிஷன் (1886)பிரம்ம ஞான சபை எனப்படும் "தியசாபிகல் சொசைடி" (1875) சமரச சுத்த சன்மார்க்க

சங்கம் (1865) முதலானவையாகும்.[1] இந்த இயக்கங்கள் இந்து மதத்தில் சீர்திருத்தம், மறுமலர்ச்சி என்ற போக்கில் இயங்கத் தொடங்கின. இந்த மத இயக்கங்கள் இந்தியப் பண்பாடு, நாகரிகம், வேதப்பெருமை என விழாக்கள் மூலம் ஒருமைப் பாட்டுணர்வை வளர்க்க முயன்றன.

இந்து என்ற கருத்தாக்கத்தை முதலில் புனைந்தது அரேபியர், ஆங்கிலேயர் போன்ற வெளிநாட்டவர்கள் ஆவர் "வில்லியம் ஜோன்ஸ், ஹம்போல்ட், மாக்ஸ் முல்லெர் போன்றோரின் ஆய்வுகள், ஆரிய இனம், ஆரியப் பண்பாடு என்ற கருத்தாக்கங்களை உருவாக்கின.சமஸ்கிருத மொழியறிவுடையவர்களைச் சமஸ்கிருத மரபினத்தவர்(Sanskritic Race) என ஹம்போல்ட் முதலில் வரையறுத்தார். பின்னர் ஆரிய இனத்தவர் (Aryan Race) என்று மாற்றம் செய்தார். இந்த ஆரியர்கள் யார் என்ற கேள்வியை எழுப்பி, நவீன ஐரோப்பியர்கள், இந்தியப் பார்ப்பனர்கள் ஆகிய இருவருக்கும் அவர்கள்தாம் மூதாதையர்கள் என்று ஜெர்மானிய ரொமாண்டிக் சிந்தனையாளர்கள் விடை வழங்கினர் [2]

இப்படியாக, மேலைநாட்டவர்களால் ஆரிய மேன்மை பேசப்பட்டது "இதன் விளைவாகவே, சாதி அடையாளங்களுக்கு அப்பால் எல்லாரையும் ஒன்றிணைக்கும் வகையில் இந்து மதத்திற்குப் புதிய விளக்கங்கள் தரப்படலாயின இந்து மதத்திற்குப் பொதுவான கோட்பாட்டு அடிப்படைகளை உருவாக்கும் முயற்சிகளும் செய்யப்பட்டன இதன் பொருட்டு பகவத் கீதை போன்ற நூல்களுக்குப் புதிய அர்த்தங்கள் தரப்பட்டன இந்து மதம், இந்திய நாகரிகம் ஆகியவற்றின் பழம்பெருமைகள் தேடிக் கண்டுபிடிக்கப்பட்டன. இத்தகைய முறையில் புதிய அர்த்தங்கள் வழங்கப்பட்ட இந்து மதமும் இந்திய நாகரிகமும் இந்தியத் தேசியத்தின் சிறப்பியல்புகளாக இருந்து வந்துள்ளன இந்தியாவின் வரலாற்றை, பண்டைய இந்தியா, முகலாயர் கால இந்தியா, பிரிட்டிஷ் ஆட்சிக்கால இந்தியா என்று ஐரோப்பிய (குறிப்பாக ஆங்கிலேய) சிந்தனையாளர்கள் வகைப்படுத்தினர். இவ்வாறு வகைப்படுத்துவது இந்திய தேசிய வாதிகளுக்கு உகந்ததாகவே இருந்தது"[3] என்பர்.

"இந்து, இந்துத்துவம், இந்தியத் தேசியம், இந்திய நாகரிகம் போன்ற கருத்தாக்கங்களின் மூலவர்களாக இருந்த ஐரோப்பியர்களில் முக்கியமானவர்கள், 1875-இல் அமெரிக்காவின் தியோசபிகல் சொசைட்டி (பிரம்ம ஞான சபை) என்ற அமைப்பை நிறுவிய கர்னல் ஓல்காட்,

ப்ளாவிட்ஸ்கி அம்மையார் ஆகியோராவர். பார்ப்பனிய பண்பாட்டைக் கொண்டும் இந்தியா முழுவதற்கும் சமஸ்கிருதத்தைப் பொதுமொழியாக ஆக்குவதன் மூலமும் இந்தியத் தேசியத் தன்மையை, தேசிய உணர்வை உருவாக்கவும், ஊக்குவிக்கவும் அவர்கள் முயன்றனர்"[4] என்பர். இப்படியாக ஆரிய வேதம், பண்பாட்டோடு இந்திய நாகரிகத்தைக் கட்டமைக்க முயன்றனர்.

"பார்ப்பன வேதங்களையும் பிற பழம் தேசிய நூல்களையும் அடிப்படையாகக் கொண்டு எழுப்பப்பட்ட ஓர் இந்திய நாகரிகம் மட்டுமே கற்பாறையில் கட்டிய வன்கோட்டையாக இருக்க முடியும் எனக் கூறினார் ஆல்காட்டு"[5]

என்பர்.

"ஆரிய மதத்தையும் பிற மதங்களையும் படிப்பதும் பொருள் முதல்வாதத்தை வளரவிடாமல் தடுப்பதும், பிரம்ம ஞான சபையின் நோக்கங்களாகச் சொல்லப்பட்டன. தேசிய சமஸ்கிருத இயக்கத்தின் (National Sanskrit Movement) பகுதியாக அடையாறு நூலகம் தொடங்கப்பட்டது"[6]

இப்படியாக இவர்களது முயற்சியால், இந்தியா வேதப் பெருமையுடைய நாடு, இந்திய மதம் என்பது ஆரிய மதம், வடமொழி உயர்வானது முதலான கருத்துக்கள் இந்தியத் தேசியம் என்பதன் அடிப்படைகளாக உருவாக்கப்பட்டன.

1876 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற இந்தியக் கழகம்(Indian Association) பல்வேறு இந்திய இனங்களிலும், மக்களினதும் ஒற்றுமையை ஏற்படுத்துவதே தன் குறிக்கோள் எனக் கூறியது.[7]

"இந்தியத் தேசியம் என்ற கருத்தாக்கத்தையும் இந்தியா என்ற ஒரே தேசம் என்ற கருத்தையும் உருவாக்கி அதைப் பரப்பி வந்தவர்களில் முக்கியமானவர்கள் வங்காளத்தைச் சேர்ந்த பார்ப்பனர்களும் பத்ரலோக் என்றழைக்கப்படும் படித்த மத்தியதர வர்க்கத்தினரும் ஆவர். 1866இல் வங்காளத்தில் நிறுவப்பட்ட பிரம்ம சமாஜத்தின் செயலாளரான கேசவசந்திரசென் ஒன்றுபட்ட இந்தியாவை உருவாக்குமாறும், இந்திய ஒற்றுமையைச் சாதிக்குமாறும் மேனாட்டுக் கல்வி பயின்ற படித்த வர்க்கத்தினருக்கு அறைகூவல் விடுத்தார்"[8] என்பர்.

கடற்கரையோரப் பகுதியாகவும் ஆங்கிலேயர் ஆட்சியின் நிர்வாக மையங்களுள் ஒன்றாகவும் சென்னை விளங்கியதால், தேசிய இயக்கத்தின் தொடக்கக் காலத்தில் இருந்தே தமிழ்நாடும் அவ்வியக்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டு வந்துள்ளது. "வங்காள பத்ரலோக் சிந்தனையை ஏற்றுக் கொண்ட அனந்தா சார்லு என்பவர் சென்னை மகாஜன சபையின் நிறுவக உறுப்பினர் ஆவார். ஓர் அனைத்திந்திய அமைப்பு உருவாக்கப்பட வேண்டும் என்பதை அவர் வலியுறுத்தினார். இந்தக் கருத்தை ஆதரித்த என்.சிவசாமி ஐயர் அத்தகையதொரு அமைப்புக்குத் தேசியக் காங்கிரஸ் என்றோ இந்து மகாஜன சபை என்றோ பெயர் வைக்கலாம் என்ற ஆலோசனை கூறினார்".[9]

பிரம்ம ஞான சபையில் சில காலம் உறுப்பினராக இருந்தவரும், ஆங்கில அரசின் அதிகாரியாக இருந்து விலகியவருமான ஆலன் ஆக்டோவியன் ஹ்யூம் 1885-இல் முதல் இந்தியத் தேசியக் காங்கிரஸைப் பம்பாயில் தொடங்கினார். இந்திய மக்களிடையே அதிருப்தி வளர்ந்து அது பிரிட்டிஷ் ஆட்சியின் இருப்புக்கு எதிரான விளைவுகளை ஏற்படுத்திவிடுமோ என்ற அச்சத்தில் அந்த அதிருப்தியை மென்மையானதாக்கும் பொருட்டு அவர் உருவாக்கிய அமைப்புதான் இந்தியத் தேசியக் காங்கிரஸ் எனலாம். இந்த வரலாற்று நிகழ்வை, வரலாற்றுப் பேராசிரியர் ஆ.சி. மஜும்தார்,

> "மக்களின் கொந்தளிப்புகள் வெடித்துப் புரட்சி இயக்கங்களைத் தோற்றுவிப்பதைத் தவிர்ப்பதற்காகவே காங்கிரஸை ஹ்யூம் நிறுவியதன் உண்மையான நோக்கமாகும்"[10]

எனக் குறிப்பிடுகிறார். ஹ்யூமின் வரலாற்றை எழுதிய வெட்டர்பர்ன் நூலில், காங்கிரஸின் தோற்றத்தைப் பற்றி ஹ்யூமின் வாய்மொழியாகக் குறிப்பிடப்பட்டுள்ள கருத்தாவது,

> "நம்முடைய செயல்களின் விளைவால் ஏற்படும் எதிர்ப்புறத்தில் தோன்றும் மகத்தான மக்கள் சக்தியைத் திசை திருப்பி விடவும், நம் செயல்களிலிருந்து நாம் தப்பித்துக் கொள்ளவும், நிச்சியமாகத் தோன்றக்கூடிய பின் விளைவுகளைத் தவிர்ப்பதற்கும், காங்கிரஸ் கட்சியை ஒரு வடிகால் சாதனமாக (Safety Valve) உபயோகித்துக் கொள்வதைத் தவிர, அவசரமாக உருவாக்கக் கூடிய வேறு சாதனம் எதுவும் இல்லை"[11] என்பதாகும்.

பிரிட்டிஷ் அதிகார வர்க்கம், ஆங்கிலம் கற்ற அறிவாளிகள், உத்தியோகச் சார்பற்ற ஆங்கிலேயர்கள் ஆகியோர் ஆசியுடன் முதலில் இந்தியத் தேசிய யூனியன் என்ற பெயரில் பூனாவில் தொடங்கப்படும் என அறிவிக்கப்பட்டுப் பிறகு இந்தியத் தேசியக் காங்கிரஸ் என்ற பெயரில் பம்பாயில் முதல் காங்கிரஸ், தேசிய அந்தஸ்துடன் கூடியது.[12]

## 2.2. இந்திய விடுதலை இயக்கம்

1884-இல் நிறுவப்பட்ட சென்னை மகாஜனசபை இந்தியத் தேசியக் காங்கிரசை உருவாக்குவதில் பெரும்பங்காற்றியது. "1885 டிசம்பர் 28, 29 தேதிகளில் நடைபெற்ற காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் மொத்தம் 72 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். இதில் சென்னையில் இருந்து சென்றவர்கள் 21 பிரதிநிதிகள் ஆவர். சென்னை மகா ஜன சபையின் முக்கியப் பிரமுகர்களான திரு.ஜி. சுப்ரமணிய ஐயர், நீதிபதி எஸ். சுப்ரமணிய ஐயர், திரு பி. அனந்தாச் சாருலு, திரு மு. வீரராகவாச்சாரியார், திரு ரங்கய்ய நாயுடு, முதலானோரும், தஞ்சாவூர் மக்கள் சங்கத்தின் தலைவர், எஸ்.ஏ. சுவாமிநாத அய்யர், மசூலிப்பட்டணம் சிங்க ராஜு, வெங்கட சுப்பராய்டு, அனந்தப்பூர் வி. கேசவ பிள்ளை ஆகியோரும் முதல் காங்கிரஸ் மகா சபையின் சிறப்பிற்குப் பாடுபட்ட சென்னை மாநிலப் பிரதிநிதிகள் ஆவர்.[13]

இந்தியத் தேசியக் காங்கிரசைத் தோற்றுவித்த முதல் கூட்டத்திலேயே இருபத்தொரு உறுப்பினர்கள் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கதாகும். அவர்களுள் ஒருவரான ஜி.சுப்ரமணிய அய்யர், இந்தியத் தேசிய உணர்வு மேலோங்க அக்கூட்டத்திலேயே பேசினார்.

> "இன்று முதல், இந்தச் சமயத்தில் இருந்து, இந்தியத் தேசம், தேசியக் கருத்து, தேசிய விருப்பங்கள் எனப் பேசுவோம்"[14]

என்பது அவருடைய பேச்சாகும்.

ஜி. சுப்ரமணிய ஐயரின் தேசிய இலட்சியத்தை வற்புறுத்திய சொற்பொழிவிற்கு மேலும் ஆதரவு அளிக்கும் வகையில், 'இந்தியா ஒரு தேசிய இனம்' என்று வலியுறுத்தி மு.வீரராகவாச்சாரியார் உரையாற்றினார்.

> "நம்மிடையே தாய்மொழிகளின் வேறுபாடுகளும், சமூக பழக்க-வழக்க மாறுபாடுகளும் நிலவிய போதும், நாம் தேசிய இனத்தின் உண்மையான கூறுகளைக் கொண்டுள்ளோம்" [15]

என முழங்கினார்.

இவ்வாறு தேசியம், தேசிய இனம் என்பனவற்றின் தெளிவுரைகளை மாநில அரசியல் அமைப்பின் அங்கத்தினர்கள் எடுத்துரைத்தது இந்தியத் தேசியத்தின் உருவாக்கத்திற்குப் பெருந்துணை புரிந்தது எனலாம். இந்துக்கள் தேசிய நோக்குப் பெற வேண்டும் என ஜி.சுப்ரமணிய அய்யர் 1883-ல் தம்முடைய சுய அரசாட்சி வினா-விடை புத்தகத்தில் குறிப்பிடுகிறார். 'இந்து என்றால் யார்?' எனக் கேள்வி கேட்டு,

"ஹிந்து மதத்தில் அபிமானம் வைக்கிறவனும் ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி பரியந்தமுள்ள இந்த தேசம் தன் சொந்த தேசம் என்று அறிந்து அதன் ஷேமத்துக்கும் தனம், அவகாசம், புத்தி இவைகளைச் செலவிடுகிறவனும், தன் தேசத்திலிருக்கும் 25 கோடி ஜனங்களையும் ஜாதி மத குல பேதமின்றி தன் சகோதரர்கள் போல் பாவித்து அவர்களின் நன்மைக்காகப் பாடுபட்டு தீமைகளை விலக்க முயல்கிறவனுமே ஹிந்து"[16]

என விடையளித்தார்.

இவ்வாறு இந்தியா என்ற கருத்தாக்கத்தை வலிமையாகக் கட்டமைக்க முயன்ற இந்தியத் தேசிய இயக்கம் 1885 முதல் 1905 வரை இருபதாண்டுக் காலம் அரசுப் பணிகளில் இடம்பெறுவது, அரசாங்கத்தை வாழ்த்திப்பாடுவது என்ற நிலையிலேயே இருந்தது. 1905இல் வங்காளப் பிரிவினையால் கொதித்தெழுந்த தேசிய உணர்ச்சி, திலகர் தலைமையில் தீவிரம் அடைந்தது. இந்தியத் தேசிய அரசியலில் தீவிரவாதிகளாகக் குறிப்பிடப்பட்டவர்கள் சமூகச் சீர்திருத்தத்தில் மிகவும் பிற்போக்குத் தன்மை உடையவர்களாக இருந்தனர். அரசியலில் மிதவாதத் தன்மை கொண்டவர்கள் சமூகச் சீர்திருத்தத்தில் முற்போக்குத் தன்மையுடன் செயல்பட்டனர். இதுபற்றி வரலாற்றுப் பேராசிரியர் இரசனி பாமிதத்,

"மிகப் பழமையுற்ற சமயத்தின் அடிப்படையிலும், சமய மூட நம்பிக்கைகளின் அடிப்படையிலும் இந்தியாவிலேயே மிக முன்னேறிய இயக்கமாகிய தேசிய இயக்கத்தை இவர்கள் இந்தப் புதிய தலைவர்கள் வளர்க்க முயன்றார்கள். தேசிய இயக்கத்தின் இந்தப் போக்கிற்குச் சொல்லொணாத் தீமை பயக்கும் முறையில் அரசியல் தீவிர வாதத்தையும் சமயப் பிற்போக்குத் தனத்தையும் இணைக்கும் கைங்கர்யம் இந்தக் காலத்தில்தான் தொடங்கியது"[17]

என முழங்கினார்.

இவ்வாறு தேசியம், தேசிய இனம் என்பனவற்றின் தெளிவுரைகளை மாநில அரசியல் அமைப்பின் அங்கத்தினர்கள் எடுத்துரைத்தது இந்தியத் தேசியத்தின் உருவாக்கத்திற்குப் பெருந்துணை புரிந்தது எனலாம். இந்துக்கள் தேசிய நோக்குப் பெற வேண்டும் என ஜி.சுப்ரமணிய அய்யர் 1883-ல் தம்முடைய சுய அரசாட்சி வினா-விடை புத்தகத்தில் குறிப்பிடுகிறார். 'இந்து என்றால் யார்?' எனக் கேள்வி கேட்டு,

"ஹிந்து மதத்தில் அபிமானம் வைக்கிறவனும் ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி பரியந்தமுள்ள இந்த தேசம் தன் சொந்த தேசம் என்று அறிந்து அதன் ஷேமத்துக்கும் தனம், அவகாசம், புத்தி இவைகளைச் செலவிடுகிறவனும், தன் தேசத்திலிருக்கும் 25 கோடி ஜனங்களையும் ஜாதி மத குல பேதமின்றி தன் சகோதரர்கள் போல் பாவித்து அவர்களின் நன்மைக்காகப் பாடுபட்டு தீமைகளை விலக்க முயல்கிறவனுமே ஹிந்து"[16]

என விடையளித்தார்.

இவ்வாறு இந்தியா என்ற கருத்தாக்கத்தை வலிமையாகக் கட்டமைக்க முயன்ற இந்தியத் தேசிய இயக்கம் 1885 முதல் 1905 வரை இருபதாண்டுக் காலம் அரசுப் பணிகளில் இடம்பெறுவது, அரசாங்கத்தை வாழ்த்திப்பாடுவது என்ற நிலையிலேயே இருந்தது. 1905இல் வங்காளப் பிரிவினையால் கொதித்தெழுந்த தேசிய உணர்ச்சி, திலகர் தலைமையில் தீவிரம் அடைந்தது. இந்தியத் தேசிய அரசியலில் தீவிரவாதிகளாகக் குறிப்பிடப்பட்டவர்கள் சமூகச் சீர்திருத்தத்தில் மிகவும் பிற்போக்குத் தன்மை உடையவர்களாக இருந்தனர். அரசியலில் மிதவாதத் தன்மை கொண்டவர்கள் சமூகச் சீர்திருத்தத்தில் முற்போக்குத் தன்மையுடன் செயல்பட்டனர். இதுபற்றி வரலாற்றுப் பேராசிரியர் இரசனி பாமிதத்,

"மிகப் பழமையுற்ற சமயத்தின் அடிப்படையிலும், சமய மூட நம்பிக்கைகளின் அடிப்படையிலும் இந்தியாவிலேயே மிக முன்னேறிய இயக்கமாகிய தேசிய இயக்கத்தை இவர்கள் இந்தப் புதிய தலைவர்கள் வளர்க்க முயன்றார்கள். தேசிய இயக்கத்தின் இந்தப் போக்கிற்குச் சொல்லொணாத் தீமை பயக்கும் முறையில் அரசியல் தீவிர வாதத்தையும் சமயப் பிற்போக்குத் தனத்தையும் இணைக்கும் கைங்கர்யம் இந்தக் காலத்தில்தான் தொடங்கியது"[17]

என்று குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. இந்துப் பண்பாட்டைக் கட்டமைக்க முனைந்த தேசிய இயக்கத்தினரின் செயல்பாடு குறித்து இரசனிபாமிதத்,

"அழுகலும் சொத்தையும் மண்டியுள்ள தத்துவ நாற்றச் சேற்றிலிருந்து சிதைந்துபட்ட கிராம ஆட்சியின் பாழ்த்த எச்சங்களிலிருந்து, மறைந்துபோன ஒரு நாகரிகத்தைச் சேர்ந்த அரசாங்கப் பகட்டுகளின் கல்லறைகளிலிருந்து அவர்கள் தங்கள் பொற்காலக் கனவான ஹிந்துப் பண்பாட்டைத் தூய்மையாக்கப்பட்ட ஹிந்துப் பண்பாட்டை உருவாக்கிக் காட்ட விழைந்தார்கள்"[18]

என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு பல்வேறு குறை நிறைகளுடன் வளர்ந்த இந்தியத் தேசிய இயக்கம், இந்தியாவின் அனைத்துத் தரப்பு மக்களையும் உள்ளடக்கியதாகக் காந்தியடிகள் வருகையால் வளர்ந்தது. இதுகுறித்து எஸ்.வி. ராஜதுரை,

"தீவிரவாதிகளின் இந்து-இந்திய தேசியம் முஸ்லிம்களை மட்டுமல்லாது, தாழ்த்தப்பட்ட சாதியினர், பிற்படுத்தப்பட்ட சாதியினர், பெண்கள் ஆகியோரையும் அந்நியப் படுத்தியதால், அந்தத் தீவிரவாதத்தைத் தணிக்கவும், முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்ட சாதியினர், பெண்கள் முதலியோரைக் காங்கிரஸ் பக்கம் இழுத்துக் கொள்ளவும் காங்கிரசுக்கு ஒரு தலைவர் தேவைப்பட்டது. காந்தி அத்தகைய தலைவராக வந்தமைந்தார்"[19]

என்று கூறும் கூற்றுக் குறிப்பிடத்தக்கதாகும்.

## 2.3. தமிழகத்தில் தேசிய இயக்கச் சிந்தனைகள்

இந்தியா நெடுகிலும் வீறுகொண்டு எழுந்த தேசிய இயக்கத்தின் தாக்கம் தமிழகத்திலும் வேகமாகப் பரவியது. இதனால், ஆங்கிலேயருக்கு எதிரான இயக்கத்தை வலிமையானதாகக் கட்டமைக்க முனைந்தனர் தமிழகத் தேசியவாதிகள். பாரதியார், வ.வே.சு. ஐயர், வ.உ.சி., திரு.வி.க., சுப்பிரமணிய சிவா, திருப்பூர் குமரன், இராசகோபாலச்சாரியார், காமராசர், ம.பொ.சி. முதலியோரின் தேசிய இயக்க ஈடுபாட்டினால், தேசிய உணர்வு தமிழ்நாட்டில் பரவியது.

முப்பது கோடி முகமுடையாள் - எனில்

சிந்தனை ஒன்றுடையாள் [20]

என்பது போன்ற பாரதியாரின் எழுச்சி மிக்க பாடல்கள் பெரும்பங்காற்றின. புதிதாகத் தோன்றிய படித்த நடுத்தர வகுப்பு மக்களைத் தேசிய இயக்கத்தை நோக்கி ஈர்த்தது.

இது தவிர, இந்தியாவின் கடந்த காலத்தைப் பற்றிய ஆய்வுகள் தேசியக் கண்ணோட்டத்துடனேயே நடைபெற்றன. இதனால் பழமையான இந்திய அரசாங்க முறைகள் பற்றிய ஆராய்ச்சிகள் ஊக்குவிக்கப்பட்டன. இந்தியத் தேசியம் பற்றிய கருத்துக்களை உருவாக்கப் பழம்பெரும் நூல்களைத் துருவித் துருவி தேடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இதனால் ஓலைச் சுவடிகளைத் தேடுவதைத் தேசிய இயக்கம் ஊக்குவித்தது. இதன் தாக்கம் தமிழகத்திலும் பெரும் வீச்சாய்ப் பரவியது.

தமிழகத்தில் ஓலைச் சுவடிகளைத் தேடி அச்சுக்குக் கொண்டுவரும் பணியில் உ.வே.சாமிநாதையர், சி.வை. தாமோதரம் பிள்ளை முதலானோர் முன்னிலையில் நின்றனர். இதன் காரணமாகச் சங்க இலக்கியங்கள் வெளிவந்தன. தேசிய இயக்கத்தின் தாக்கம் சங்க இலக்கிய ஆய்வுகளிலும் வெளிப்பட்டது.

அனைத்து இந்திய ஒருமைப்பாட்டு உணர்வினை உருவாக்கும் வகையிலான செயல்பாடுகள் ஆயிரத்தெண்ணூற்று இருபதுகளில் இருந்தே இந்தியாவில் தொடங்கிவிட்டன. இதனைச் சமய மறுமலர்ச்சி இயக்கங்களும், சீர்திருத்த இயக்கங்களும், அரசியல் இயக்கங்களும் தொடர்ந்து செய்தன. இதுபற்றி ஆர்.எஸ். சர்மாவின் கூற்று இவ்விடத்தில் குறிப்பிடத்தக்கதாகும்.

"1870 முதல் 1900 வரை அக்காலத்திய அரசியல் சமூக இயக்கங்களில் பெரிதும் கலந்துகொண்ட பகவான்லால் இந்த்ரஜி, ஆர்.ஜி. பந்தார்க்கர், ஆர்.எல். மித்ரா, பால கங்காதர திலகர் ஆகியோர், ஏகாதிபத்தியக் கருத்து பொய்யானது என்பதை அம்பலப்படுத்த முயன்றனர். தங்கள் நாட்டின் கடந்த கால வரலாற்றின் மிகப் பல கூறுகளை ஆராய்ந்ததன் மூலம் அவர்கள் தங்கள் காலத்திலேயே, அரசியல் சமூகத் துறைகளில் நாடு முன்னேறுவதற்குச் சிறந்ததொரு சூழ்நிலையை உருவாக்க முயன்றனர். அதுமுதல், இந்தியாவின் கடந்த காலத்தைப் பற்றிய ஆய்வு தேசியக்

கண்ணோட்டத்துடனேயே நடைபெற்றிருக்கிறது."[21]

இப்படி இந்தியா முழுவதிலும் தேசியம் பற்றிய சிந்தனையுடன் ஆய்வுகள் நடைபெறத் தொடங்கின. இதனை வரலாற்றாய்வாளரான டி.டி. கோசாம்பி,

"ஆங்கிலேயர்களின் காலனி ஆதிக்கத்தை அசைப்பதற்கு நடத்திய போராட்டத்தில் அவர்கள் தேசபக்தி, தேசியப் பெருமை போன்ற உணர்வுகள் மிகவும் தேவைப்படுவதை உணர்ந்தனர். இதன் காரணமாகவே பாரத நாட்டின் பழமையில் நாம் பெருமை கொள்ளுமளவுக்கு ஏதும் புலப்படா விட்டாலும்கூட, இப்புதிய அறிவு ஜீவிகள் ஒரு புகழ்வாய்ந்த சரித்திரத்தைக் கடந்த காலத்திலிருந்து துருவித் துருவிக் கண்டுபிடித்தார்கள்" [22]

என்று குறிப்பிடுகிறார்.

## 2.4. இந்தியத் தேசியமும் தமிழ் இலக்கியங்களும்

இந்தியத் தேசிய இயக்கத்தின் தாக்கம் தமிழ்ப் படைப்பிலக்கியங்களிலும் வெளிப்பட்டது. கவிதை, கட்டுரை, கடிதம், சிறுகதை, புதினம் எனத் தமிழில் தோன்றிய அத்தனை இலக்கிய வகைகளிலும் விடுதலைப் போராட்ட உணர்வுகளும், இந்தியத் தேசியம் பற்றிய கருத்துக்களும் நிறைந்திருந்தன. இந்தியத் தேசியத்தை வளர்த்தெடுத்த பாரதி,

"பாரத பூமி பழம்பெரும் பூமி;
நீரதன் புதல்வர்; இந்நினைவகற்றாதீர்!

பிச்சைவாழ் வுகந்து பிறருடைய ஆட்சியில்
அச்சமுற் றிருப்போன் ஆரிய னல்லன்" [23]

என்று எழுதினார். இவருடைய தேசபக்தி நிறைந்த பாடல்கள், 'இந்தியா பழம் பெரும் நாடு, இந்திய மதம் ஆரியமதம், இந்திய நாடு ஆரியநாடு' என்று எடுத்தியம்பி, இந்தியத் தேசிய இயக்கத்தின் வளர்ச்சிக்கு உதவின. இன்னும், நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, வ. உ. சிதம்பரம் பிள்ளை, திரு. வி.கல்யாணசுந்தரம் பிள்ளை, ச. து. சுப்பிரமணிய யோகியார் முதலானோரின் எழுத்துக்களும், பேச்சுக்களும்

இந்தியத் தேசிய உணர்வை வளர்த்தெடுத்தன.

இந்தியத் தேசிய இயக்கம் தமிழ் மண்ணில் மலர்ந்தபோது, தமிழ் மண்ணில் ஏற்பட்ட அசைவுகளை 'மறுமலர்ச்சி' என்ற பெயராலேயே வ. வே. சு. ஐயர், சுதேசமித்திரன் 1918 ஆம் ஆண்டு அனுபந்தத்தில் எழுதிய 'மறுமலர்ச்சி' என்ற கட்டுரையில் காணமுடிகிறது. அவருடைய கூற்றாவது,

"நமது தமிழ் ஜாதியில், இப்பொழுது பத்து வருஷ காலமாக ஒரு புதிய ஜீவவேகம் தோன்றியிருக்கிறது. உலர்ந்துபோன எலும்புக் கூடுகளில் அசைவுண்டாகியிருக்கிறது. பட்டுப்போன கிளைகள் துளிர்க்கத் துவங்கியிருக்கின்றன. ஓய்ந்துபோன மரங்கள் மீண்டும் பழுக்க ஆரம்பித்திருக்கின்றன...

மரங்களில் புதிய மலர்கள் பூப்பதுபோல நமது ஜாதியிலும் புதிய வேகமும், புகழும் பிறக்கப் போகின்றன என்பதற்கு இந்த இயக்கங்கள் அறிகுறியாயிருப்பதால், இவற்றின் தொகுதிக்கு நாம் மறுமலர்ச்சி என்று பேரிடுகிறோம்..." [24]

என்பதாகும். இவ்வாறு, அக்காலத்தில் எழுதப்பட்ட கட்டுரைகள், கடிதங்கள், மேடை நாடகங்கள் மற்றும் நாட்டுப் பாடல்கள், திரைப்படங்கள், பத்திரிக்கைகள் என அனைத்திலும் தேசிய எழுச்சியின் வேகம் இருந்ததைக் காணமுடிகிறது.

அக்காலத்து எழுந்த சிறுகதைகளில் விடுதலைப்போரின் தாக்கம் நிகழ்ந்திருப்பதை அறியமுடிகிறது. மணிக்கொடி இதழில் வெளியான கதைகளில் இத்தாக்கம் மிகுதியாகத் தெரிகிறது. சான்றாக, 'கு. வா. என்பார் எழுதிய 'சேர்ந்து வந்து கேட்டால்' என்ற கதை வெள்ளையரின் சூழ்ச்சியை உருவக நிலையில் பேசுகிறது. வாணிதாசன் என்பாரால் எழுதப்பட்ட 'தேவநாதன்' என்ற கதை விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட வீரர்களுக்கு அக்காலத் தமிழ்ச் சமுதாயம் எங்ஙனம் மதிப்பளித்தது என்பதைச் சித்தரிக்கிறது. சி. சு. செல்லப்பா எழுதிய, 'வந்தே மாதரம்', 'சிப்பாய் இதயம்', 'பிரார்த்தனை', 'சட்டத்துக்கு மிஞ்சி', 'கனவு', முதலிய கதைகளில் நாட்டுணர்வின் எழுச்சியைக் காணலாம்'. [25]

இதே போன்று, புத்திலக்கிய வகைகளில் ஒன்றான நாவல்களில் அக்காலத்தில் தேசிய உணர்வு மையமாக இருந்து செயற்பட்டது. கா. சீ. வேங்கடரமணியின், 'முருகன் ஓர் உழவன்', 'தேசபக்தன் கந்தன்', கல்கியின், 'கள்வனின் காதலி', 'தியாக பூமி', ஆர். சண்முகசுந்தரத்தின்,

'நாகம்மாள்', 'அபலையின் கண்ணீர்', 'சோலைமலை இளவரசி', அகிலனின், 'பெண்' முதலான புதினங்கள் இதற்குச் சான்றாக விளங்குகின்றன.[26]

அக்காலத்தில் எழுந்த மேடைநாடகங்களும் இந்தியத் தேசிய எழுச்சியை அடிப்படையாகக் கொண்டு நடத்தப்பட்டிருக்கின்றன. கா. கோபாலாச்சாரின், 'ஆரிய சபா', தெ. பொ. கிருஷ்ணசாமி பாவலரின், 'கதரின் வெற்றி', 'தேசியக்கொடி', 'பதிபக்தி', சுப்பிரமணிய சிவாவின், 'வீர சிவாஜி', 'தேசிங்குராஜன்', 'திலகர்-காந்தி தரிசனம்', வெ.சாமிநாத சர்மாவின், 'பாணபுரத்து வீரன்', சி. ஏ. அய்யாமுத்துவின், 'இன்பசாகரன்', பம்மல் சம்பந்த முதலியாரின், 'மனோகரன்' முதலான நாடகங்கள் இதற்குச் சான்றுகளாகும்.[27]

இவ்வாறு, அனைத்து மட்டத்திலும் தேசிய இயக்கம் தனது செல்வாக்கைச் செலுத்தியது. இந்நிலை இலக்கிய ஆய்வுகளிலும் தொழிற்பட்டது. அக்காலத்தில் அச்சில் வெளிவந்த சங்க இலக்கியங்களை ஆராயப் புகுந்த தேசிய இயக்கச் சிந்தனையாளர்கள், அவற்றை தம் இயக்க வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டனர். சங்க இலக்கியங்கள் தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் இலக்கியங்களாக அவர்கள் பார்வைகளில் விளக்கம் பெற்றன எனலாம்.

## 2.5. இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கியமும்

அனைத்திந்திய தேசிய ஒருமைப்பாட்டு உணர்வினை ஏற்படுத்துவதிலும், பிரிட்டிஷ் அரசைக் காட்டிலும் பெருமை மிக்க அரசுகள் பழங்காலந் தொட்டே இந்தியாவில் நிலவி வந்திருக்கின்றன என்ற உணர்வை ஏற்படுத்துவதிலும் வரலாற்றாசிரியர்கள் தீவிரமாகச் செயல்பட்டனர். இத்தகைய வரலாறு எழுதும் நிகழ்வுகள் தென்னிந்தியாவில் ஆயிரத்து தொள்ளாயிரத்து முப்பதுகளில் தொடங்கியதாகச் சிவத்தம்பி குறிப்பிடுகிறார்.

"...அத்தகைய ஒரு வரலாறெழுது நெறி தென்னிந்தியாவில் முப்பதுகளிலேயே காணப்பட்டது. இராமச்சந்திர தீட்சிதர், கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார், நீலகண்ட சாஸ்திரி, மீனாட்சி, மகாலிங்கம், சத்திய நாதைய்யர், போன்றோரது நூல்களில் இப்பண்பினைக் காணலாம்.

....இவ்வாய்வுகள், சிறப்பாக நீலகண்டசாஸ்திரியினுடையவை, ஒரு புறம் தென்னிந்தியாவை இந்திய வரலாற்றுப் பெருவட்டத்தினுள் இணைப்பனவாகவமைந்த

அதே வேளையில், மறுபுறத்திற் பிரதேசத்தின் வரலாற்றுக் காலக்கட்ட அடிப்படையிலும் அரசப் பரம்பரைகளின் அடிப்படையிலும் தெளிவுபடுத்துபவையாகவும் அமைந்தன"[28]

என்பது சிவத்தம்பியின் கூற்றாகும்.

இந்தியா முழுவதிலும் இந்தியத் தேசியம் என்ற அடிப்படையில் கடந்த கால ஆய்வுகள் செய்யப்பட்ட வேளையில், தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் இந்த வரலாறெழுது நெறி இரண்டு வேறுபட்ட நிலைகளில் இயங்கியது. இதற்குத் திராவிடர்-ஆரியர் என்ற இன அடிப்படையிலான கருத்துக்களின் வளர்ச்சியே காரணமாக அமைந்தது. திராவிட இன அடிப்படையில் தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்த அறிஞர்கள் தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தங்கள் ஆய்வுகளை நிகழ்த்த, இதற்கு நேரெதிர் முறையில் இந்தியத் தேசியம் என்ற அடிப்படையில் வரலாற்றை எழுதியவர்கள் விளக்கிச்சென்றனர். இந்தியத் தேசியச் சிந்தனையுடன் வரலாற்றைக் கட்டமைக்க முனைந்த அறிஞர்கள் தமிழின் பெருமைகளை ஏற்றுக்கொண்ட அதே வேளையில் மிகப்பக்குவமாக இந்தியப் பெருவட்டத்தில் தமிழகத்தை இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனால் தென்னிந்திய ஆராய்ச்சி ஒரு வேறுபட்ட தளத்தில் இயங்க ஆரம்பித்தது. இந்த இரட்டைநிலைப் போக்குத் தமிழகத்தில் வேரூன்றியது. இந்நிலை சங்க இலக்கிய ஆய்வுகளிலும் வெளிப்பட்டது. இது பற்றி ந. சுப்பிரமண்யம்,

"...ஆயினும் தென்னிந்திய வரலாற்று ஆராய்ச்சி முற்றிலும், போகூழ் காரணமாக, ஒன்று நாட்டுப்பற்று நோக்குடையார் அன்றித் தமிழ்ப் பண்பாட்டினைப் பகைக் கண் கொண்டு நோக்குவார் என்போர் கையில் சிக்கிக்கொண்டு விட்டது. இவ்விரு நோக்குகளுமே பக்கவாதத்தின் பாற்பட்டவையாதலால் வரலாற்றைச் செம்மையாகக் கற்பார்க்கு உதவாதவை என்று கூறுதல் மிகையாகாது"[29]

எனக் குறிப்பிடுவார். ந.சுப்பிரமண்யனின் இக் கூற்றிலிருந்து, தமிழகத்தில் இரண்டு நெறிகளில் வரலாற்றுணர்வு இயங்கியதையும், இருவருமே தங்களுக்கான வரலாற்றை எழுதுவதிலும், அதனை நிலைநிறுத்துவதிலும் முனைப்பாகச் செயல்பட்டதை உணரமுடிகிறது. இதற்கு அவர்களுக்குச் சங்க இலக்கியம் சரியாகப் பயன்பட்டது. அதன் காரணமாகச் சங்க இலக்கியமானது துருவித் துருவி ஆராயப்பட்டது.

## 2.6. இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

### 2.6.1. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி

1922-இல் நடைபெற்ற சிந்து சமவெளி நாகரிகக் கண்டுபிடிப்பு திராவிட அறிஞர்களுக்கு மிகப்பெரிய உற்சாகத்தைத் தந்தபோது, அது பற்றி எழுதும் தென்னிந்திய வரலாற்றாசிரியர் கே.ஏ. நீலகண்டசாஸ்திரி,

"சிந்து நதிப் பள்ளத்தாக்கு அகழ்வுகள் எத்தனை பிரச்சனைகளுக்குத் தீர்வு கண்டனவோ அவற்றைவிட அதிகமான புதிய பிரச்சனைகளைக் கிளப்பியிருக்கின்றன. அங்குக் கிடைத்திருக்கும் ஏராளமான முத்திரைகளிலிருக்கும் எழுத்துக்களைப் படித்துப் பொருள்காணும் வரையில் அந்த நாகரிகம் இந்தோ ஆரியர்களுடைய நாகரிகத்தோடும் 'திராவிடர்கள்' என்று சொல்லப்படுகிறவர்களுடைய நாகரிகத்தோடும் எவ்வகையில் தொடர்புடையது என்பதைத் தீர்மானிப்பது எளிதன்று" [30]

என எழுதிச் செல்கிறார்.

சங்க இலக்கியங்களின் வருகை தமிழர்களின் தனித்தன்மையான நாகரிகவரலாற்றைப் பறைசாற்றுவதாகத் திராவிட இயக்கத்தினர் கூறிவந்த வேளையில், சாஸ்திரியார்,

"பண்டைக்காலத்தில் தனித்தனியாக இருந்த தமிழ்ப் பண்பாடும் ஆரியப் பண்பாடும் ஒருங்கிணைந்த இனிய கலவையே சங்க காலத் தமிழ்ப் பண்பாடு என்பது தெளிவாகத் தெரிகின்ற உண்மை" [31]

என்று எழுதுகிறார். திராவிடச் சிந்தனையின் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த அறிஞர்கள் ஆரியக் கலப்பற்ற தூய தமிழினத்திற்கான இலக்கியமாகச் சங்க இலக்கியத்தைக் கண்டனர். அதற்கு நேரெதிராக வட இந்தியப் பண்பாடும் தென்னிந்தியப் பண்பாடும் சேர்ந்த கலவையைச் சங்க காலப் பண்பாடு என்று சாஸ்திரியார் மதிப்பிடுகிறார். இப்படிப் பார்ப்பதன் மூலம், 'இந்தியப் பண்பாட்டின் ஓரங்கமே தமிழ்ப் பண்பாடு' என்ற கருத்தையும், ஆரிய மேன்மைக் கோட்பாட்டை நிலை நிறுத்தவும் சாஸ்திரியரால் முடிகிறது. அவருடைய கூற்றாவது,

"பிற்காலத்தில் இயற்றப்பட்ட வேதத்தைச் சார்ந்த நூல்களும் இதிகாசங்களும் வட இந்தியாவில் தோன்றியவை. அந்தப் பகுதிச் செய்திகளே அவற்றில் மிகுதியாக இடம்பெறுகின்றன. எனினும் தென்னிந்தியாவில் வட இந்தியச் செல்வாக்கு எவ்வாறு பரவியது என்பது பற்றிய தெளிவான குறிப்புகளை அவற்றில் நாம் காண்கிறோம். இந்தப் பண்பாட்டு இயக்கத்திற்கு அவற்றைத் தவிர வேறு ஆதாரங்கள் இல்லை. தமிழகத்தின் மிகப் பழைய நூல்களாகிய சங்க நூல்களில் அந்தப் பண்பாட்டு இயக்கத்தின் விளைவுகளைத் தெளிவாகக் காண்கிறோம். தமிழகத்தின் பண்பாட்டியல்புகளோடு தெற்கு நோக்கிப் பரவிக் கொண்டிருந்த வட இந்தியப் பண்பாட்டியல்புகளில் பல முரண்பாடின்றி ஒருங்கிணைந்ததன் பயனாக நல்ல வளர்ச்சி பெற்ற ஒரு நாகரிகத்தின் தன்மைகளைச் சங்க நூல்கள் நமக்குக் காட்டுகின்றன," [32]

என்பதாகும். இப்படிப் பக்குவமாக, ஆரியக் கலப்பே தமிழ்ப்பண்பாட்டை வளர்த்தெடுத்ததாகச் சாஸ்திரியார் மதிப்பிடுவதைக் காணமுடிகிறது.

**2.6.2. கே.ஜி. சேஷையர்**

பழம்பெரும் நூல்கள் பற்றிய கால ஆய்வுகள் பெரும் விவாதத்திற்கு உரியதாகத் தென்னிந்திய வரலாற்றாய்வாளர்களிடையே இருந்து வந்திருக்கிறது. பழைய இலக்கியங்களின் கால நிர்ணயம் தொடர்பாக நிலவிய உளவியல் தன்மைகள் பற்றிய கே.ஜி. சேஷையர் கருத்து இவ்விடத்தில் குறிப்பிடத்தக்கதாகும்.

"அறிஞர்கள் தாங்கள் தங்கள் கற்பனையினால் எதனைக் கூறலாமென உந்தப்படுகிறார்களோ அதனை எடுத்துக்கூறுவதற்குத் தமக்குச் சுதந்திரம் உண்டென்று இன்னும் கருதிக் கொண்டிருப்பது தென்னிந்திய வரலாற்றின் ஒரு விநோதமான அமிசமாகும். இத்தகைய ஒரு நிலையினாலேதான், ஒரு அறிஞரால் கிறித்துவுக்குப் பின் முதலாம் நூற்றாண்டுக்கு உரியவர் என நிர்ணயிக்கப்பட்ட ஒரு தமிழ்க்கவிஞரை, இன்னொருவர் எவ்விதத் தட்டுத் தடங்கலுமின்றிக் கிறித்துவுக்குப் பின் 14-ம் நூற்றாண்டுக்குரியவர் எனக் கூறக்கூடிய நிலைமை ஏற்படுகின்றது. இந்த அபூர்வமான நிகழ்வினை வரலாற்றாய்வுப் பெரும்புலத்தில் தென்னிந்தியாவைத் தவிர வேறெங்கும் காண்பது முடியாது." [33]

என்கிறார். இதற்குக் காரணம் தங்கள் இலக்கியங்கள் மேல் கொண்ட அளவுகடந்த பற்றுதான் என்பதையும் கே.ஜி. சேஷ ஐயர் எடுத்துக்காட்டத் தவறவில்லை.

> "இந்திய அறிஞரைப் பொறுத்த வரையில், அவரது இலக்கியத்தை வளப்படுத்தியோருக்கு, எத்துணை முந்திய ஒரு காலத்தை வழங்க முடியுமோ அதனை வழங்கும் தன்மை அல்லது பண்பு ஏற்றுக்கொள்ளப்பட்ட விதியாக, சட்டமாக ஆகிவிட்டது எனலாம். புராதனமான ஒரு நாகரிகத்தின் புகழும் கவர்ச்சியும் இயல்பாகவே ஏற்படுத்திவிட்ட ஒரு தூண்டுதல் காரணமாக ஏற்பட்ட, பெறுமதியும் தொன்மையும் இணைந்தே செல்வன என்ற ஒரு பொதுவான நம்பிக்கையே இதற்கு ஒரு வேளை காரணமாகவிருக்கலாம். மறுபுறத்தில், ஐரோப்பிய அறிஞர்களிடத்தில் நிலவும் தன்மையோ நேர் மாறானதாகும். தமிழ் இலக்கியத்திற்குரியதென விதந்தோதப்பெறும் பழைமையானது ஒரு பக்திப் பூர்வமான கட்டுக்கதையே என்பது அவர் மதத்தின் மூல வாசகங்களில் ஒன்றாம். அவர்களைப் பொறுத்த வரையில், தமிழிலக்கியம் ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே வளர்ந்து செழித்தது என்பது முடிந்த முடிபாகும்." [34]

இப்படிப் பல்வேறு காரணங்கள் தொழிற்பட்டன.

கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, "சங்க காலம் கிறித்து ஆண்டு தொடக்க நூற்றாண்டுகளில் அமையும் என்று நாம் கருதலாம்"[35] என்றும், "சங்க இலக்கியம் கிறித்து ஆண்டு தொடக்க நூற்றாண்டுகளைச் சேர்ந்தது"[36] என்றும், குறிப்பிடுகிறார். மேலும், தமிழக வரலாற்றின் நன்கு விளக்கமுறும் காலம் கி.பி. முதல் மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகளைச் சார்ந்ததே என்பதைச் சங்க இலக்கியத்தின் மூலம் அறியலாம்"[37] என்கிறார்.

### 2.6.3. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்

எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், கடை வள்ளலார் காலம் என்ற நூலில், "ஆகையால் மூன்றாம் சங்கம் நிலைபெற்ற காலம் கி.பி. இரண்டு மூன்றாவது நூற்றாண்டுகளேயென்று கொள்வது இது வரைக்கும் நமக்குக் கிடைத்த சாதனங்களுக் கிணங்கிய கொள்கையாகும்"[38] என்று குறிப்பிடுகிறார். இந்நூலில் அவர் நான்கு கொள்கைகளை அறுதியிடுகிறார். அவையாவன,

"(1) தொன்று தொட்டு வழங்கும் மூன்றாஞ் சங்கமென்னுமொரு கல்விக் கழகம் இருந்திருக்கக் கூடுமென்ப தொன்று.

(2) இச்சங்கம் மிக உயர்ந்த நிலைமையிலிருந்த காலம், சேரன் செங்குட்டுவன் காலமே யென்பது மற்றொன்று.

(3) இச் செங்குட்டுவன் காலம் இதுகாறும் தெரிந்தமட்டில் கி.பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டாயிருத்தல் வேண்டும்.

(4) இம்மூன்று கொள்கைகளும் இன்றுமட்டும் தெரிந்துள்ள நம் தேயச் சரித்திரக் கொள்கைகளுக் கிணங்கியவைகளேயாகும்"[39] என்பனவாகும்.

வி.ஆர். ராமச்சந்திர தீட்சிதர், "சங்கத்தின் தொடக்கத்தை கி.மு. ஐந்தாம் நூற்றாண்டாகவும், முடிவை கி.பி. 5ஆம் நூற்றாண்டாகவும் கொள்ளுவார்".[40] கே.ஆர். சீனிவாச ஐயங்கார், "கி.மு. 500-யும் கி.பி. 500-யும் சங்க காலத்தின் இருகோடுகளாக அமைத்தால் நாம் தவறிவிடமாட்டோம்"[41] என்கிறார். பொதுவாகத் தேசிய இயக்கச் சிந்தனையாளர்கள் காலத்தைக் கூடிய அளவிற்கு திராவிட இயக்கச் சிந்தனையாளர்களைக் காட்டிலும் பின்னோக்கிக் கூறினர் எனக் கருதலாம்.

**2.6.4. எம். சீனிவாச ஐயங்கார்**

திராவிட இயக்கத்தினர் தமிழிலக்கியத்தில் வைதீக மதக் கலப்பற்ற இலக்கியமாகச் சங்க இலக்கியத்தை முன்வைத்து மொழித் தூய்மைவாதம் பேசினர். அவ்வேளையில் தேசிய இயக்கத்தினர் அதனை மறுக்கும் செயல்களில் ஈடுபட்டனர். எம். சீனிவாச ஐயங்கார் தமிழின் தொன்மையையும், சீரிய தன்மைகளையும் ஏற்றுக்கொள்ளும் அதே வேளையில்,

"தமிழில் ஒழுக்கவியல் அன்றேல் மதம் சாராத இலக்கியங்கள் இல்லை. ஆரியச் செல்வாக்கில்லாத ஒழுக்கவியலோ மதமோ இந்தியாவில் இல்லை"[42]

என்று எழுதுகிறார். இதிலிருந்து ஆரியக் கோட்பாட்டை மேல்நிலைப்படுத்தும் தேசியவாதிகளின் செயல்பாட்டை அறிய முடிகிறது.

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினருக்குக் கால்டுவெலின் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' பெரும் மகிழ்ச்சியைக் கொடுத்த வேளையில் அதனை மறுக்கும் வேலையைத் தேசியவாதிகள் செய்தனர். இதனை ஆர்.சுவாமிநாதையரின், 'திராவிடியன் தியரிஸ்' என்ற ஆங்கில நூல் தெளிவுபடுத்துகிறது. "கால்டுவெல்லின் திராவிட மொழிக் கொள்கையானது சம்பந்தப்பட்ட உண்மையான விடயங்களைத் தப்பர்த்தம் செய்து கொண்டுள்ளது. தவறானவை என மிகச் சுலபமாக நிரூபிக்கப்படத் தக்க எடுகோள்களை ஆதாரமாகக் கொண்டுள்ளது என்ற அடிப்படையில் அந்நூலைச் சுவாமிநாத ஐயர் எதிர்த்தார்"[43] என்பதன் மூலம் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியின் இருதுருவச்செயல்பாட்டினை விளங்கிக் கொள்ள முடிகிறது. இப்படியாக வளர்ந்த சங்க இலக்கிய ஆய்வுகள், சங்க கால மன்னர்களைப் பற்றியும், புலவர்களைப் பற்றியும், சங்க கால ஊர்கள் பற்றியும், சமயம், பண்பாடு, நாகரிகம் எனப் பல்வேறு வகைகளில் விரிந்தன.

### 2.6.5. ரா. இராகவையங்கார்

1915-இல் ரா.இராகவையங்கார் சேரன் செங்குட்டுவன் பற்றிய ஆய்வு நூல் ஒன்றை வெளியிட்டார். இந்நூலில் செங்குட்டுவனின் வரலாற்றை விரிவாக ஆராய்கிறார். இதற்கு ஆதாரமாகச் சிலப்பதிகாரம், மணிமேகலை, பதிற்றுப்பத்து, சங்க இலக்கிய நூல்கள் என எடுத்துக்கொண்டு விளக்குகிறார். இந்நூலில் சேரர் தலைநகரான வஞ்சி, திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள கருரே என முடிவு கட்டுகிறார். அத்துடன் செங்குட்டுவன் காலம் கி.பி 5ஆம் நூற்றாண்டு என்ற முடிவுக்கு வருகிறார். இதிலிருந்து சங்க இலக்கியங்களின் காலத்தைப் பின்னோக்கிக் கொண்டுவருகிறார்.[44]

'வஞ்சி மாநகர்' என்னும் நூலை எழுதிய ரா. இராகவையங்காரும் கருரே சேரர் தலைநகரான வஞ்சி என்ற முடிவுக்கு வருகிறார். ரா.இராகவையங்காரின் கருத்தையே இவரும் ஆதரித்து முடிவுகட்டுகிறார். "தமிழ்கூறும் நல்லுலகத்தில் மூவேந்தருட் குடதிசையாளுங் கோமக்களாகிய பழைய கோச்சேரர் நாடு முழுதுங் குடபுலமாமேனும், அதன்கட் குடபுலமென்று சிறப்பித்துப் பெயர் பெறுவது கொங்கு நாடேயென்றும் அது சேரரிருந்தரசாண்ட மலையமானாடாகிய கொல்லிமலைப்பக்கத்து நாடு முதலாகப் பலநாடுகளையுடைய தென்றும் அதன்கணுள்ள ஆன்பொருநைக் கரையிலுள்ள கருவூரே 'வருபுனனீர்த் தண்பொருநை சூழ்தரும்' வஞ்சியென்றும் ஐயந்திரிபறத் தெளிந்து கொள்க"[45]

என்று கூறுவதின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

இந்த இருவர் கூற்றையும் மறுத்து எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் 'சேரன் வஞ்சி' என்ற நூலை எழுதினார். அந்நூலில் சேரநாடும் அதன் தலைநகரமான வஞ்சியும் மேற்குத்தொடர்ச்சி மலைக்கு அப்பாற்பட்டவை. சேரநாடு என்பது இன்றைய மலையாள நாடு; வஞ்சி என்பது மேற்குக் கரையில் இருப்பது என்னும் கொள்கையை நிலைநாட்டுகிறார். [46]

ரா. இராகவையங்கார் 'பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும்' என்னும் நூலில், பெரும்பாணாற்றுப்படைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையனைத் துரோணர் மரபினராக நிறுவுகிறார். ஆரிய மேன்மைக் கோட்பாட்டை நிலைநிறுத்தும் போக்கு இங்கே தெளிவாகிறது. "துரோணர்க்கும் க்ருதாசி என்ற நீரர மகட்கும் பிறந்தவன் அசுவத்தாமன் என்றும், அசுவத்தாமனுக்கும் மதனி என்ற அரமகட்கும் தோன்றியவன் பல்லவன் என்றும், போத்து என்பது பல்லவர்க்குரிய இடபக் கொடியையே குறிக்கும் என்றும், தொண்டை என்பது குடிப்பெயர் என்றும், பல்லவப் பெயர்க்கு முன்பே தொண்டையன் என்ற பெயர் உண்டாகியிருக்க வேண்டும் என்றும், துரோணம் என்ற பதமே தொண்டை என மருவிற்றென்றும், பல்லவ குலம் கடல்கெழு செல்வி வழியாக வந்த துரோணன் மரபென்றும்" [47]

பல்வேறு ஆதாரங்கள் காட்டி எழுதுகிறார். அவரது கூற்றாவது,

"இப்பல்லவர் விரைவிற் றம் வேத வழக்கொடுபட நல்லொழுக்கத்தாலும் கேள்விகளாலும் தானதருமங்களாலும் பிற நற்செயல்களாலும் இத்தமிழரின் வேறாகாமை புலப்படுத்தியதனொடு தம் குடித்தலைமையைப் பாரத காலத்துப் பெருவிற் புலவனாகிய துரோணனிடம் வைத்துக்காட்டி இத்தமிழரால் எல்லா வேந்தரினுஞ் சிறப்பித்துப் போற்றப்படும் பெரும்பேறு பெற்று வாழ்ந்தன ரென்று நினையத்தகும்" [48]

என்ற கூற்றிலிருந்து ஆரியக் கூட்டுறவுக்குட்பட்டதே தமிழிலக்கியம் என்ற தேசியவாதிகளின் மேலாண்மை நிலைநிறுத்தப்படுகிறது எனலாம்.

ரா. ராகவையங்கார் சங்க இலக்கியத்தில் இடம் பெறும் வேளிர், கோசர்களை தமிழகத்திற்கு வெளியில் இருந்து வந்தவர்களாகக் குறிப்பிடுகிறார். இவருடைய எழுத்தில் எல்லாவற்றையும் வடமொழியோடு இயைபுபடுத்தும் போக்குக் காணப்படுகிறது. கோசர் பற்றிய இவரின் ஆராய்ச்சி நூலில், "கோசர் முதலிற் கொங்கில் வதிந்தவர் என்றும், பின்னர் குடகடற் புறத்து மலைநாட்டிற் குடியேறினர் என்றும், நான்மொழி நாடு என்ற தொடர், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் என்ற திராவிட மொழிகள் நான்கும் ஒருங்கே வழங்கப்பெற்ற சேலம் ஜில்லா நாமக்கற் சீமையையே சுட்டும் என்றும், அவர்கள் தொன்று தொட்டு வந்த தமிழ்க் குடிகள் அல்லர் என்றும், வத்ஸம் என்னும் வட சொல்லுக்கு இளைமை எனப் பொருளுண்டாகலின் வத்ஸ கோசரே இளங்கோசர் என வழங்கியிருத்தல் கூடும் என்றும், எஞ்ஞான்றும் ஒரு படித்தாக ஒருவற்கிளைமை யெய்தா தாகலின், இளங்கோசர் என்னும் பெயர் இளமைப் பருவம் குறித்து வந்த பெயர் அன்றென்றும், கோசம் என்ற ஓர் அரிய சூள் முறையைக் கையாண்டதனால் அவர்கள் கோசர் எனப்பட்டனர் என்றும் அவர்கள் வன்கட் சூழ்ச்சியில் வல்லுநர் என்றும் 'தொன்மூதாலத்துப் பொதியில்' என்ற குறுந்தொகையிற் காணப்படும் 'பொதியில்' மதிமிகு குறுமுனி வதிந்த பொதியில் அன்றென்றும், அது மோகூரையடுத்துள்ள ஆம்பலமேயாகும் என்றும், கோசர் காஷ்மீர நாட்டிலிருந்து வேளிரை அடுத்துத் தமிழ்நாடு போந்தவர் என்றும், வம்ப மோரியர் சேனைக்கு முன்னனியாக நின்று மோகூர் மன்னனை எதிர்த்தவர் அன்றென்றும், அதற்கு மாறாக மோகூர் மன்னர்க்கு உற்ற துணையாக மோரியரை எதிர்த்த பெருவீரர் என்றும், வேளிர்க்கும் கோசர்க்கும் நீடித்த பகைமை உண்டென்றும், அகுதை, திதியன், குறும்பியன், ஆதனெழினி, தழும்பன் முதலிய வீரர்கள் கோசர் மரபினரென்றும், கோசர் புத்தூரே கோயமுத்தூர் எனத் திரிந்தது" [9] என்றும் பல்வேறு சான்றுகள் காட்டி விளக்கிச் செல்கிறார்.

பண்டைச் சோழ மன்னர்கள் (முதற்பாகம்) என்ற நூலை எழுதிய ல.ஸ்ரீநிவாஸ ஐயர் வடமொழி புராண கதைகளுடன் இயைபுபடுத்திச் சோழ மன்னர்களின் கதையைக் கூறுகிறார். புராண கால மன்னர்கள், சங்க கால மன்னர்கள் என இரு பிரிவாகப் பத்துச் சோ மன்னர் வரலாறுகளை எழுதுகிறார். புராண கால மன்னர்களாக முசுகுந்த சோழன், மனுநீதிச் சோழன், சிபிச் சோழன், தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன் காந்தமன் அல்லது காவிரிச் சோழன் ஆகிய ஐவரையும், சங்க கால மன்னர்களாகச் சோழன் கரிகாற்பெருவளத்தான், கிள்ளிவளவன், கோப்பெருஞ்சோழன், புகழ்ச்சோழ நாயனார்,

சோழன் செங்கணான் ஆகியோர் வரலாறுகளையும் தொகுத்தளிக்கிறார்.[50]

### 2.6.6. எஸ். வையாபுரிப்பிள்ளை

ஆராய்ச்சி நெறிமுறைப்படி திறனாய்வு செய்யும் திறனாய்வாளராகத் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்ட எஸ். வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியம் பற்றிய கருத்துக்கள் தேசியவாதிகளுக்கு மிகுந்த தெம்பூட்டின. பழம்பெரும் நூல்களின் காலத்தை அவர் மிகவும் பின்னுக்குத் தள்ளியதன் மூலம் மிகப் பெரிய சர்ச்சைகளைத் தமிழ்த் திறனாய்வு உலகில் கிளப்பினார். திராவிட இயக்க அறிஞர்கள் தமிழின் தூய்மைவாதத்தைப் பேசிக் கொண்டிருந்த சூழலில் வையாபுரிப்பிள்ளை,

> "தொகை நூல்களுள், முற்சங்க இலக்கியங்களுள், ஆரியரது கூட்டுறவு காணப்பெறாத நூல்களே இல்லை. சங்க இலக்கியங்கள் அனைத்திலும் இது காணப்படுகிறது."[51]

என்று எழுதினார்.

ஆரியரது கூட்டுறவே தமிழ்ச் சமுதாயத்தின் நலனுக்குக் காரணம் எனக் கூறும் வையாபுரியார்,

> "இந்திரன், வருணன் முதலிய வேதத் தெய்வங்கள் தமிழ்நாட்டிலும் இடம் பெற்றன. தமிழ்நாட்டில் அநாதி காலந்தொட்டு வணக்கம் பெற்றுவந்த சிறு தெய்வங்களைத் தங்கள் தெய்வக் கோஷ்டியில் சேர்த்து ஒற்றுமையுண்டுபண்ணினர். தங்கள் நாற்குலப் பண்பாட்டைத் தென்னாட்டிலும் கைகொள்ளச் செய்தனர். தங்கள் மணச் சடங்கு முதலியவற்றைத் தமிழ் மக்களும் விரும்பி மேற்கொள்ளச் செய்தனர். இவை இரண்டினாலும் தமிழ்ச் சமுதாயம் சீர்திருந்தி நலம் பெற்றது"[52]

என்று எழுதுகிறார்.

கால ஆய்வு குறித்து எழுதிய வையாபுரிப் பிள்ளை, தமிழிலக்கியங்களின் தொன்மையை மிகவும் முன்னுக்குக் கொண்டு செல்வதைச் சாடுகிறார். இதனை,

> "தற்காலத்தில் நம்மவர்களுள் சிலர், ஆதாரம் யாதுமின்றி, தமிழ் இலக்கியம் பதினாயிரம், இருபதினாயிரம் ஆண்டுகளாகப் பயின்றுவந்துள்ளது என நெகிழ்ந்து

எழுதி வருகிறார்கள்; சிலர் உறுதியாகவே இக்காலக் கணக்கைத் துணிந்து வற்புறுத்துகிறார்கள். ஆதாரமில்லாத இந்தக் கொள்கை மிகவும் கேடு தருவதாகும். அறிஞர்கள் எவரும் இதனை ஒப்புக் கொள்ளமாட்டார்கள். கீழ்நாட்டவர்களுக்கு இயல்பாக உரிய மிகைநவிற்சி என்று இதனை ஒதுக்கிவிடுவார்கள். நாம் கூறும் பிற உண்மையுரைகளையும் கூட நம்பாமல் தள்ளிவிடுவார்கள். ....தமிழ் இலக்கியம் மிகை நவிற்சி யாதுமின்றியே நாம் போற்றத்தகும் தொன்மை வாய்ந்தது. இப்போதுள்ள மிகவும் பழைமையான தமிழ் இலக்கியம் கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியது"[53]

என்ற கூற்றிலிருந்து அறியலாம்.

வையாபுரிப் பிள்ளை, சங்க காலத்தை முற்சங்க காலம், பிற்சங்க காலம் எனப் பாகுபாடு செய்கிறார். இவருடைய பாகுபாடு வருமாறு,

"1. முற்சங்க காலம் : கி.பி. 100-350. தொகைச் செய்யுட்கள், பத்துப்பாட்டிற் பல பண்டைத்தமிழ்.

2. தொகை செய் காலம் : கி.பி. 400-500. முற்சங்கப் பாடல்களைத் தொகையாகத் தொகுத்தது. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, அகம், புறம் என்பன.

3. பிற்சங்க காலம் : கி.பி. 600-750. கலித்தொகை, பரிபாடல்"[54]

இப்படி இலக்கியச் சான்றுகள், மொழிநடை, வான நூற் குறிப்புகள் முதலியவற்றைக் கொண்டு பாகுபடுத்துகிறார். உதியஞ்சேரல் பற்றிய வையாபுரியின் கணிப்பு வருமாறு,

"உதியஞ் சேரலது காலத்தை ஒருவாறு அறுதியிடக்கூடும். இவன் பதிற்றுப்பத்தில் 5-வது பத்திற்கு உரியவனான செங்குட்டுவனுக்குப் பாட்டனாதல் வேண்டும். செங்குட்டுவனும் இலங்கை அரசனான முதலாம் கஜபாகுவும் ஒரே காலத்தினர். எனவே செங்குட்டுவன் காலம் கி.பி. 170-25 என்று கொள்ளலாம். உதியஞ்சேரலின் காலம் சுமார் கி.பி. 100 என்று கொள்ளுதல் வேண்டும். இக்காலத்திற்கும் பாரதயுத்தம் நிகழ்ந்ததாகக் கணிக்கப்படும் காலத்திற்கும் எத்தனையோ நூற்றாண்டுகள்

இடைப்பட்டன ஆதல் வேண்டும். ஆதலால் பாரதப்படைகளுக்கு இவன் சோறளித்திருத்தல் இயலாது. மேலும் தென்னாட்டிலிருந்து அரசனொருவன் பாரதயுத்தம் நிகழ்ந்த குருஷேத்திரத்திற்கு உணவுப் பொருட்களையெல்லாம் எடுத்துச் சென்று அங்கே போரக்கூடியிருந்த படைகளுக்கெல்லாம் உணவளித்தான் எனல் சரித்திர முறையில் ஒப்புக்கொள்ளக் கூடியதன்று. ...வீரத்தாலும் கொடை முதலிய பிற தகுதிகளாலும் பெயர் சிறந்து விளங்கிய தேசிய வீரர்களோடு தொடர்புடையராக அரசர்களைக் கூறுதல் உலகம் முழுவதும் வழங்கிய மரபாகும். ...இது போன்ற ஒரு மரபினை மனத்துள் கொண்டே முடிநாகராயர் தமது அரசனைப் பாடினார் என்று நாம் கொள்ளுதல் வேண்டும்"[55]

என்கிறார்.

ஆரியரது கூட்டுறவும், கலைப் பண்பாடும் தமிழர்களைக் கவர்ந்தது எனக் கூறும் வையாபுரியாரின் கூற்று குறிப்பிடத்தக்கதாகும்.

"அந்தணரடைந்த பெருவெற்றியென்று கூறத்தகுவது ஒரு பாண்டியனைப் பல யாகங்கள் இயற்றும்படி செய்து அவனைப் 'பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்ற பெயராற் சிறப்பித்ததும் (புறம்-15), ஒரு சோழனை இராஜ சூய யாகம் புரியும்படி செய்து அவனை, 'இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி' என்ற பெயராற் சிறப்பித்ததும் (புறம்-16) பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்ற சேரனிடமிருந்து பாலைக் கௌதமன் தானும் தன் பத்தினியும் சுவர்க்கம் புகுதற்காக ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பெரும் பொருள் பெற்று, பின் அவனைத் துறவுபூண்டு காடு செல்லும்படி செய்ததும் (பதிற்றுப் பத்து, 3 பதிகம்) ஆம். இவ்வுதாரணங்களிலிருந்து ஆரியரது கலைப் பண்பாடு தமிழ்நாட்டில், தமிழ்ச்சமுதாயத்தில், உயர்ந்த படியிலுள்ள அரசர் முதலிய பெருமக்களையே முதன்முதலாக வசீகரித்தது என்பது விளங்கும். இவற்றிற்கும் மேலாகத் தமிழ்நாட்டரசர்கள் பாரத வீரர்களுக்கு உறவு எனவும் கருதி வந்தார்கள். அர்ச்சுனன் பாண்டியன் மகள் சித்திராங்கதையை மணந்தவன் என்ற வரலாறும் இதனை வற்புறுத்தும். 'பஞ்சவர்' (புறம்-158) 'கவுரியர்' (புறம்-3) என்னும் பெயர்கள் பாண்டிய மன்னர்களுக்கு வழங்கி வந்தமையால் இவ்வுறவு அறியப்படும்"[56]

என்று எழுதுவதன் மூலம் வேதப் பெருமை, வேதியர் பெருமை என்ற தேசியவாதிகளின் சிந்தனை வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

கடல்கோள் குறித்த வையாபுரிப்பிள்ளையின் கருத்தும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

"கலித்தொகை (104) தவிர, மற்றைத் தொகை நூல்களில் ஒன்றிலேனும் கடல்கோள்-செய்தி கூறப்படவில்லை. இறையனார் அகப்பொருள் உரையிலும் சிலப்பதிகார உரையிலும் காணும் கடல்கோள் வரலாறு மிகப் பிற்பட்டது;

கி.பி. 10-ம் நூற்றாண்டிலும், 14-ம் நூற்றாண்டிலும் இவை முறையே தோன்றியன. அன்றியும் ஒன்றோடு ஒன்று முரண்படுவன. இறையனார் அகப்பொருள் உரை இடைச்சங்கத்து இறுதியில் கடல்கோள் நிகழ்ந்ததாகக் கூறுகிறது. இதனைத் தழுவி எழுதியதாகக் கூறும் அடியார்க்கு நல்லார் உரை தலைச்சங்கத்து இறுதியில் நிகழ்ந்ததாகக் கூறுகிறது. முந்திய உரையில், அழிவுற்ற நிலங்களைப் பற்றியும் நாடுகளைப் பற்றியும் யாதும் கூறப்படவில்லை. பிந்திய உரையில் அழிவுற்ற நாடுகளின் கணக்கும் பெயர்கள் முதலிய விவரமும் விரிவாகக் கூறப்படுகின்றன. சிலப்பதிகாரத்திற் காணப்படும் வரலாறு (11:18-22) முதல் இடைச் சங்கங்களோடு இக்கடல்கோள் யாதோர் இயைபும் உடையதாகக் கூறவில்லை. ஒரு பௌராணிக வரலாறு போலவே இது தோன்றுகிறது. ஆகவே இக்கடல்கோளை ஆதாரமாகக் கொண்டு சரித்திரம் அமைத்தல் மண்குதிரையை நம்பி ஆற்றில் இறங்கிக் கடக்க முயல்வது போலாம்" [57]

என்று எழுதுகிறார். அறிவியல் நெறிமுறையிலான ஆய்வு என்று இவர் எழுதி வெளியிட்ட முடிவுகள் தேசிய இயக்கத்தினரின் கருத்துக்களுக்கு வலிமை சேர்த்தது எனலாம்.

### 2.6.7. சாமி. சிதம்பரனார்

தேசிய இயக்கக் கருத்தியலின் வளர்ச்சிக்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்தியவர்களில் சாமி. சிதம்பரனாரும் ஒருவராவார். தொல்காப்பியத் தமிழர், பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் முதலான இவரின் நூல்கள் தேசிய இயக்கத்தின் கருத்துப் பிரச்சாரமாக வெளிவந்தன. இந்தியா முழுவதும் ஒரே வித பண்பாடு நிலவியது என்ற தேசிய இயக்கக் கருத்தின் அடிப்படையில்

இவருடைய நூல்கள் எழுதப்பட்டன. இவருடைய எழுத்தில் இருந்து அக்காலத்தில் நிலவிய இருவேறுபட்ட கருத்தியல் மோதல்கள் வெளிப்படையாகத் தெரிகின்றன. சாமி. சிதம்பரனார்,

"தமிழகத்திலே இன்று இன வெறுப்புத் தலைவிரித்தாடுகிறது. மொழி வெறுப்பு முறுக்கேறி நிற்கின்றது. நாகரிக வெறுப்பு நடனமாடுகிறது. வரலாறு, நாகரிகம், பண்பாடு என்ற பெயர்களைச் சொல்லித் தமிழ் மக்களிடையிலே கலகத் தீயை மூட்டி விடுகின்றனர் சிலர். இத்தகைய வெறுப்புத் தீ அணைக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் தமிழர் முன்னேற்றமடைவர்; தமிழ் மொழி வளர்ச்சி அடையும்" [58]

என்று எழுதினார்.

திராவிட இயக்கத்தினரின் நோக்கமாகச் சாமி. சிதம்பரனார் கூறுவதாவது,

"பண்டைத் தமிழர் உன்னதமான உயர்ந்த வாழ்க்கையிலே இருந்தனர். அந்நியரால் அவர்களுடைய உன்னத வாழ்க்கை நாசமாக்கப்பட்டது. ஒற்றுமையும் நாகரிகமும் நிறைந்த தமிழர் சமுதாயம் வேற்றாரால் உருக்குலைந்தது. தமிழர்களின் பண்டைப்பண்புகள் மறைந்தன. மாற்றார்களின் பண்புகள் தமிழரிடம் குடிகொண்டன" இக்கொள்கையைப் பரப்புவதே இந்தப் புதிய ஆராய்ச்சியாளர்களின் நோக்கம்" [59]

என்று கடுமையாகச் சாடுகிறார். இதற்குக் காரணம் வடமொழி வெறுப்புணர்வே என்று கூறுகிறார்.

"தமிழர்களிடம் எவ்விதமான பொருந்தாப் பழக்கமும் இருந்ததில்லை இன்றைய விஞ்ஞான அறிவு பெற்ற பகுத்தறிவாளர்களைப் போலவே அன்றும் வாழந்தனர். தமிழ் நாட்டிலே புகுந்த ஆரியர்கள்தாம் பொருந்தாப் பழக்கவழக்கங்களையும், குருட்டு நம்பிக்கைகளையும் தங்களிடம் புகுத்தினர்" என்று கூறுகின்றனர். இவர்கள் கூற்று வெறுப்பையே அடிப்படையாகக் கொண்டது. இவர்கள் வடமொழியில் கொண்டிருக்கும் வெறுப்பும் இதற்கொரு காரணம்" [60]

என்று எழுதுகிறார்.

இந்தியா முழுவதும் நிலவிய பண்பாடு ஒன்றுதான். அதற்குப் பண்டைய இலக்கியங்கள் சான்று பகர்வதாகச் சாமி. சிதம்பரனார் கூறுகிறார்.

"தொல்காப்பிய காலத்திலே தமிழர்களிடம் இருந்த நாகரிகம் தமிழர் நாகரிகம் என்றுதான் எண்ணவேண்டும். அந்த நாகரிகம் ஆரியருக்கும் தமிழருக்கும் ஒத்த நாகரிகமாகத்தான் காணப்படுகின்றது. தொல்காப்பியத்தில் ஆரியர் என்ற பெயரோ திராவிடர் என்ற பெயரோ காணப்படவில்லை. இந்தியாவின் அடிப்படை நாகரிகம் ஒன்றுதான் என்று கூறும் சரித்திராசிரியர்கள் உண்டு. "இந்திய மக்கள் வணங்கும் தெய்வங்கள், பிறப்பு, இறப்பு பற்றிய நம்பிக்கைகள், நீதி அநீதி இவைகளைப் பற்றிய முடிவுகள், பாவ புண்ணியம், மோட்ச, நரகம் பற்றிய கொள்கைகள், இவைகள் எல்லாம் ஒன்றாகவே யிருக்கின்றன. இந்திய மக்கள் அனைவர்க்கும் இவைகளைப் பற்றிய கருத்து ஒன்றுதான். இவைகள்தான் பண்பாட்டுக்கு அடிப்படையானவை. அவரவர்கள் வாழும் இடத்தைப் பொறுத்து நடை, உடை பாவனைகளும், மொழிகளும் வேறுபட்டிருக்கலாம். இதனால் இந்திய மக்களின் பண்பாடு வெவ்வேறு என்று சொல்லிவிட முடியாது" என்பதே இச்சரித்திராசிரியர்களின் கொள்கை. இந்தக் கொள்கைக்குத் தொல்காப்பியம் ஆதரவளிக்கிறது."[61]

இப்படி இந்தியாவில் உள்ள மக்களின் நடை, உடை பாவனைகள், மொழிகள் வேறுபட்டிருந்தாலும் இந்திய மக்கள் பண்பாட்டால் ஒன்றுபட்டவர்கள் என்பதை இலக்கியத்தின் வழியாக நிறுவும் பணியைச் செய்வதைக் காணமுடிகிறது. வகுப்புப் பிரிவுகள் தமிழர்களிடம் தாமாகவே தோன்றியதாகக் குறிப்பிடும் சாமி. சிதம்பரனார்,

"பிறப்பினால் உயர்வு தாழ்வுண்டு என்ற கொள்கை தமிழ்நாட்டில் இல்லை. ஒழுக்கம், தொழில் முதலியவைகள் காரணமாகவே வகுப்புப் பிரிவுகள் தோன்றின. இவைகள் தமிழகத்திலே தாமே தோன்றியனவேயன்றி யாராலும் புகுத்தப்பட்டவையல்ல"[62]

என்று எழுதுகிறார். தமிழில் பிறமொழிச் சொற்கள் கலத்தல் கூடாது என்று தனித்தமிழ் வாதம் பேசியவர்களுக்குப் பதிலளிக்கிறார் சாமி. சிதம்பரனார்.

"தமிழிலே பிறமொழிச் சொற்கள் கலக்கக்கூடாது என்ற பிடிவாதம் பழந்தமிழ் மக்களிடத்தில் இருந்ததில்லை. இன்றியமையாத இடங்களிலே திசைச் சொற்களோ,

வடசொற்களோ தமிழுடன் கலந்து வருவது மொழி வளர்ச்சிக்கு இடஞ்செய்யுமேயன்றித் தடை செய்யாது. இதுவே பழந்தமிழர் கருத்து. பழந்தமிழ் செல்வமாகிய தொல்காப்பியத்திலேயே பல வடசொற்கள் கலந்திருப்பதைக் காணலாம். அக்காலத்தில் மொழி வெறுப்போ, சாதிவெறுப்போ, இனவெறுப்போ தமிழரிடம் சிறிதும் தலைகாட்டியதே இல்லை. இதனால் தமிழும் வளர்ந்தது. தமிழரும் இன்பமும் புகழும் பெற்று வாழ்ந்தனர்" [63]

எனத் தனித்தமிழ்க் கொள்கையை மறுத்து தேசிய நீரோட்டம் பற்றி விளக்குவதைக் காணமுடிகிறது.

திராவிட இயக்கத்தினர் தமக்குத் தேவையானபடி சங்க இலக்கியம் பற்றி விளக்கும் போக்கைக் கண்டித்து எழுதும் சாமி. சிதம்பரனார்,

"இன்றைய சமுதாய முன்னேற்றத்திற்கு, ஏற்ற கொள்கைகள் எவையெவையென்று தாம் எண்ணுகின்றனரோ, அவைகள் எல்லாம் தமிழ் இலக்கியங்களிலே இருக்கின்றன என்று சொல்ல முன் வருகின்றனர். எழுதியும் தீர்த்துவிடுகின்றனர். ஆரியர்-தமிழர் என்ற வேற்றுமையைக் கிளப்பும் ஒரு கும்பல் தங்கள் வெறுப்புக் கிளர்ச்சிக்குத் தமிழையும், தமிழ் இலக்கியங்களையும் பயன்படுத்திக் கொள்ளுகின்றது. பழந்தமிழ் இலக்கியங்களில் பாரத நாட்டுப் பண்பாட்டில் வேற்றுமை இல்லை என்பதற்கான ஆதரவுகள் நிறைந்திருப்பதை இக்கும்பல் மறைத்துவிடுகின்றது" [64]

என்று எழுதுகிறார். இன்னும்,

"தெய்வங்கள்; தெய்வ வணக்க முறைகள்; இல்லற தர்மம், அரசியல் நீதி; சமுதாய உயர்வு தாழ்வு; இவ்வுலக, மறுவுலக வாழ்வு பற்றிய உண்மைகள்; போர் முறைகள்; புராணங்கள்; வேதம்; வேள்வி; தவம்; தவப்பயன்; பொது நீதி; ஆகியவை பற்றிய கருத்துக்கள் பாரதநாடு முழுவதும் ஒரே விதமாகவே பரவியிருந்தன. பண்டைத் தமிழ் நூல்களிலே இவைகளைப் பற்றிக் காணப்படும் கொள்கைகளுக்கும் வடமொழி நூல்களின் கொள்கைக்கும் முரண்பாடில்லை." [65]

என்று கூறுவதைக் காண முடிகிறது. இப்படி இவருடைய சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகள்

இந்தியத் தேசியக் கண்ணோட்டத்துடன் எழுதப்பட்டிருப்பதை அறியமுடிகிறது.

**2.6.8. எஸ். இராமகிருஷ்ணன்**

இந்தியத் தேசிய இயக்கச் சிந்தனையின் அடிப்படையில் சங்க இலக்கியத்தைத் திறனாய்வு செய்தவரான எஸ். இராமகிருஷ்ணன் பல்வேறு இனமக்களின் கூட்டுக் கலவையே பாரத சமுதாயம் எனக் குறிப்பிடுகிறார். அவருடைய கூற்றாவது,

> "இந்தியர்களாகிய நாம் ஒரே ஒரு மக்கட்குழுவின் மரபினரல்லர்; ஒன்றோடொன்று உறவு கொள்ளாத விதவித இனங்களின் வமிசங்களாக வேறுபட்டு வாழ்வோருமல்லர். வெவ்வேறான இனங்களின் பலவகையான குழுக்கள், பண்டொழிந்த காலத்திலேயே, கலப்புற்று உருவானதே பாரத சமுதாயம்"[66]

என்பதாகும்.

இனப்பெருமை பேசுவது ஒரு இயல்பாகத் திராவிட இயக்கச் சிந்தனையாளர்க்கு இருந்த நேரத்தில், திராவிடத்தின் பெருமையையும் தொன்மையையும், ஏற்றுக்கொள்ளும் இராமகிருஷ்ணன் பன்மையில் ஒருமை கண்ட பெருமையுடைய சமூகமாகப் பாரத சமூகத்தைக் காண்கிறார்.

> "ஐயாயிரம் ஆண்டுக்கு முன்பே, சிந்துவெளியில் தனக்கே உரிய இயல்புகளுடன் உதயமான இந்திய நாகரிகம், திராவிடரின் சாதனையே என்ற முடிவுக்கு வருகிறோம். மொழிவழியில் திராவிடராகத் திகழ்ந்த சிந்துவெளி மக்கள், இனவழியில், மத்திய தரையினர், ஆஸ்திரலாயிடுகள் ஆகியோரின் கூட்டமாக விளங்கினர். மேலும் ஆல்ப்பைன்களும் மங்கோலாயிடுகளும் கூட அச்சமுதாயத்தில் இடம்பெற்றனர். பின்னாளில் நார்டிக், ஆல்ப்பைன, தினாரிக் இனங்களைச் சேர்ந்த மக்கள் ஆரிய மொழியினராகப் பாரதம் வந்தனர். எம்மொழியினராகவோ, ஆர்மினாயிடுகளும், மத்திய தரையினரோடு எண்ணத்தக்க இரும்புயுகப் பெருகற் படையினரும் இந்தியாவுக்கு வந்தனர். இந்தப் பல்வேறு இனங்களின் கலப்பில் உருவானதே இந்தியச் சமுதாயம். வரலாற்றுக் காலத்திலும் புதிய மக்கட் கூட்டங்கள் வந்து இந்தியச் சமுதாயத்தில் கலந்தன. கிரேக்கர்கள், சகர்கள், குஷாணர்கள், ஹூணர்கள், துருக்கியர்கள் முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள்"[67]

என எழுதிய இராமகிருஷ்ணன்,

"ஒற்றுமையும் வேற்றுமையும் ஒருசேரப் பொருந்திய முரண்நிலைச் சேர்க்கையின் படைப்பாற்றலைப் பயன்படுத்தியது பாரதம். இதனையே பன்மையில் ஒருமை கண்ட பெருமை என்போம்"[68]

என்ற அடிப்படைக் கண்ணோட்டத்துடன் சங்க இலக்கியத்தை ஆராய்வதைக் காணமுடிகிறது. இமயமுதல் குமரிவரை மிகப் பழங்காலத்தே ஆண்ட பெருமை தமிழ் மன்னர்களுக்கு உண்டு என்றும், பாரத தேசம் முழுமையையும் ஒரு நாடாகப் பார்க்கும் ஒற்றுமைப் பார்வை அவர்களிடம் இருந்ததாகவும் ஆராய்கிறார்.

"இன்றுள்ள தமிழ் நூல்களில் தொன்மையானவை கி.மு. 50க்கும் கி.பி. 300க்கும் இடைப்பட்ட சங்க காலத்தில் தோன்றியவையாகும். அவற்றிலேயே, இமயம் முதல் குமரி வரையில் சக்கரவர்த்திக்கு எல்லை வகுக்கும் மரபு விளக்கம் பெற்றது.

ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங் குமரியொடு ஆயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே

பொலிந்தான் நெடுஞ்சேரலாதன் என்பார் குமட்டூர் கண்ணனார்"[69] எனக் குறிப்பிடும் இராமகிருஷ்ணன்,

"முனிவர் நிறைந்த இமயத்தைப் பெரும்புகழுக்குரியது என்றார் அவர். பரணரோ, கடவுள் வாழும் இமயம் என்று அதனைப் போற்றுவார். இமயத்துக்கும் குமரிக்கும் இடையிருந்த தொல்புகழ் வேந்தர்களையெல்லாம் வெஞ்சமரில் வென்று வாகை மாலை சூடினான் என்று சேரன் செங்குட்டுவனைப் பாராட்டுவார் பரணர்"[70]

என்று எழுதுகிறார். இன்னும்,

"பாரத நாட்டுப் பல்வகை நிலங்களும் ஒன்றுபட்டு வழிபாடு செய்யும் வகையில், அறம் பேணித் தீமை களைந்து, நடுநிலை நழுவாது நல்லரசு புரிந்த சக்கரவர்த்திகள் என்று சேரர் மரபினை விதந்தோதுவார் குறுங்கோழியூர் கிழார்"[71]

என்றெல்லாம் பாரதம் ஒரு நாடு என்ற சிந்தனையுடன் சங்கப் புலவர்கள் கூறியதாகப் பல்வேறு ஆதாரங்களைப் பட்டியலிடுகிறார். மேலும் அவர் கூறுவதாவது,

"நெடுஞ்சேரலாதனும் செங்குட்டுவனும் நெடுஞ்செழியனும் கரிகாலனும் பாரத தேசத்தின் சக்கரவர்த்திகளாக விளங்கினர் என்பதற்குச் சரித்திர சான்று இல்லை. ஆயினும் பரத கண்டம் முழுமையும் ஒரு குடை நிழலில் ஒன்றுபட்டு உய்ய வேண்டுமென்ற கருத்து தமிழர்களது உள்ளத்தையும் கொள்ளை கொண்டிருந்ததைப் புலவர்களது புகழுரை புலப்படுத்துகிறது" [72]

இப்படி எழுதுவதன் மூலம் இந்தியத் தேசியம் என்ற சிந்தனை இன்று நேற்று உருவானதல்ல. இரண்டாயிரம் ஆண்டுகளாக இருந்து வரக்கூடியதுதான் என்ற தேசிய இயக்கப் பார்வை வெளிப்படுவதைப் புரிந்துகொள்ள முடிகிறது எனலாம்.

## 2.7. கருத்துரை

1. தமிழகத்தில் வேரூன்றிய தேசிய இயக்கச் சிந்தனையின் அடிப்படையில் சங்க இலக்கியம் ஆராயப்பட்டது. அதன் காரணமாக, 'இந்தியப் பண்பாட்டின் ஓரங்கமே தமிழ்ப்பண்பாடு' என்றும், 'வட இந்தியப் பண்பாடும் தென் இந்தியப் பண்பாடும் சேர்ந்த கலவையே சங்க காலப் பண்பாடு' என்றும் விளக்கப்பட்டன.

2. மேலும், ஆரியச் செல்வாக்கில்லாத தமிழ் நூல்கள் இல்லை என்றும், ஆரியக் கூட்டுறவாலேயே தமிழ்ச் சமூகம் நலம் பெற்றது என்றும் சங்க இலக்கியம் விளக்கப்பட்டது. இத் தேசிய வாதிகள் ஆரிய முதன்மையை வலியுறுத்தியதால் சங்க இலக்கியத்தின் காலத்தை மிகவும் பின்னுக்குக் கொண்டுவந்தனர்.

3. இமயமுதல் குமரிவரை மிகப்பழங்காலத்திலேயே ஆண்ட பெருமை தமிழ் மன்னர்களுக்கு உண்டு என்றும், பாரத தேசம் முழுமையையும் ஒரு நாடாகப் பார்க்கும் ஒற்றுமைப் பார்வையானது சங்கப்புலவர்களிடம் காணப்பட்டது என்றும் தேசியவாதிகள் விளக்கினர்.

4. இவ்வாறு, இந்தியத் தேசிய இயக்கம் தனக்கான கருத்தாக்கங்களைப் புனைவதற்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்திக்கொண்டது. இதன் காரணமாகச் சங்க இலக்கியம் சமகாலத் தேவைக்கேற்ப புதுவிளக்கம் பெற்றது எனலாம்.

## அடிக்குறிப்புக்கள்

1. பெ.சு. மணி, இந்திய தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 75
2. எஸ்.வி. ராஜதுரை, இந்து இந்தி இந்தியா, பக். 41, 42
3. மேலது., ப. 36
4. மேலது., ப. 44
5. மேற்கோள், குணா, இந்தியத் தேசியமும் திராவிடத் தேசியமும், ப. 167
6. கவிதாசரண், அக்டோபர் - நவம்பர், 1997, ப. 63
7. குணா, மு.நூ., ப. 129
8. எஸ்.வி. ராஜதுரை, மு.நூ., ப. 45
9. மேலது., ப. 46
10. பெ.சு. மணி, மு. நூ., ப. 526
11. மேலது., ப. 526
12. மேலது., ப. 536
13. மேலது., ப. 369
14. மேலது., ப. 369
15. மேலது., ப. 370
16. மேலது., ப. 375
17. இரசனி பாமிதத், இன்றைய இந்தியா, பக். 405-406
18. மேலது., ப. 406
19. எஸ்.வி. ராஜதுரை, மு.நூ., ப. 66
20. பாரதியார், பாரதியார் பாடல்கள், ப. 27
21. ஆர்.எஸ். சர்மா, பழங்கால இந்தியாவில் அரசியல் கொள்கைகள் நிலையங்கள் சில தோற்றங்கள், ப. 3
22. டி.டி. கோசாம்பி, பண்டைய இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு, ப. 9
23. பாரதியார், பாரதியார் பாடல்கள், பக். 58, 59
24. அ. அருணகிரி, விடுதலைப்போரில் தமிழ் இலக்கியம், ப. 23
25. மேலது., ப. 472
26. மேலது., ப. 483
27. மேலது., பக். 519, 520

28. கா. சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப. 115
29. நா. சுப்ரமணியன், சங்க கால வாழ்வியல், ப. VII
30. கே.ஏ. நீலகண்டசாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, ப. 19
31. மேலது., ப. 204
32. மேலது., ப. 35
33. மேற்கோள், கா.சிவத்தம்பி, மு.நூ., பக். 107, 108
34. மேற்கோள், மேலது, ப. 108
35. மேற்கோள், ந. சுப்ரமண்யன், மு.நூ., ப. 30
36. K.A. Nilakanda Sastri, The Cholas, P. 3
37. K.A. Nilakanda Sastri, The History of South India, P. 110
38. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், கடை வள்ளலார் காலம், ப. 6
39. மேலது., ப. 2
40. மேற்கோள் ந. சுப்ரமண்யன், மு.நூ., ப. 30
41. மேற்கோள், மேலது, ப. 30
42. மேற்கோள், கா. சிவத்தம்பி, மு.நூ., ப. 110
43. மேற்கோள், மேலது, பக். 110, 111
44. மு. இராகவையங்கார், மு. சேரன் செங்குட்டுவன், ப. 199
45. ரா. இராகவையங்கார், வஞ்சி மாநகர், ப. 165
46. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், சேரன் வஞ்சி, ப. 111
47. ரா. இராகவையங்கார், பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், இ.செ.வரதராஜையர், பதிப்புரை, ப. இ.
48. ரா. இராகவையங்கார், பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், ப. 49
49. ரா. இராகவையங்கார், கோசர், இ.செ.வரதராஜையர், முன்னுரை, ப. இ.
50. ல. ஸ்ரீநிவாச ஐயர், பண்டைச் சோழ மன்னர்கள், முதல் பாகம்
51. எஸ். வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், ப. 61
52. மேலது., ப. 67
53. எஸ்.வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், முகவுரை ப. VI
54. எஸ். வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், ப. 28
55. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், பக். 36, 37
56. எஸ். வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், ப. 62

57. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், ப. 41

58. சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப. 6

59. மேலது., ப. 6

60. மேலது., ப. 8

61. மேலது., ப. 9

62. மேலது., ப. 71

63. மேலது., ப. 142

64. சாமி சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப. 4

65. மேலது., பக். 4, 5

66. எஸ். இராமகிருஷ்ணன், இந்தியப் பண்பாடும் தமிழரும், ப. 9

67. மேலது., பக். 65, 66

68. மேலது., ப. 66

69. மேலது., பக். 78, 79

70. மேலது., ப. 79

71. மேலது., ப. 79

72. மேலது., ப. 81

இயல் : மூன்று



# சமய மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

# சமய மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

3.0 தனி மனித வாழ்விலும், சமூக வாழ்விலும் சமயம் இன்றியமையாத இடத்தை வகிக்கிறது. எனவே, சமயத்தின் தாக்கம் இலக்கியத்திலும் இடம் பெறுகிறது. ஐரோப்பியர் வருகையினால் ஏற்பட்ட புதிய மறுமலர்ச்சிக் காலக் கட்டத்தில் சமயத் துறையில் எற்பட்ட எழுச்சிகள் இலக்கியத்தையும், இலக்கியத் திறனாய்வையும் பாதித்தன. இச்சமய எழுச்சி, சங்க இலக்கியத் திறனாய்வுகளில் செயல்பட்டுள்ள தன்மையை இவ்வியல் ஆராய்கிறது.

அதற்கு உதவும் வகையில், சமயத்துக்கும் இலக்கியத்துக்குமான உறவு - இந்தியாவில் ஏற்பட்ட சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் - தமிழகத்தில் சமய எழுச்சி - சங்க இலக்கியத்தை அச்சில் கொண்டவரும் பணியில் சமய இயக்கங்களின் பங்களிப்பு - சங்கத்துக்கும் சமயத்துக்குமான தொடர்பு - சங்க இலக்கியத் திறனாய்வுகளில் சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் செலுத்தியுள்ள செல்வாக்கு முதலான உட்தலைப்புக்களில் ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

## 3.1. சமயத்துக்கும் இலக்கியத்துக்குமான உறவு

அநாகரிக நிலையிலிருந்து நாகரிக நிலையை நோக்கி வளர்ந்த மனித சமூகம் எத்தனையோ போராட்டங்களைத் தாண்டி வந்துள்ளது. இயற்கைச் சக்திகளோடு ஏற்பட்ட போராட்டம் மிகுந்த வாழ்க்கையில் சில நம்பிக்கைகள் தோன்றத் தொடங்கின. இந்த நம்பிக்கைகளே நாளடைவில் வளர்ந்து சமயங்களாக உருவெடுத்தன எனலாம். மதம் பற்றி விளக்கம் தரும் எரிதழல்,

> "மனிதனே மதத்தை உருவாக்குகிறான். மதம் மனிதனை உருவாக்கவில்லை. மனிதனின் அன்றாட வாழ்க்கையை மனிதனுக்கு வெளியே அந்நியமாக உள்ள இயற்கை, தனிச்சொத்துரிமை போன்ற ஆற்றல்கள் கட்டுப்படுத்துகின்றன. இந்த ஆற்றல்கள் மனித மனத்தில் ஏற்படுத்தும் பிரதிபலிப்பே மதம் ஆகும்"[1]

என்பார். இந்த மதமானது மனிதனது உள்ளும் புறமுமாக இயங்கி, மதமின்றி மனித வாழ்க்கையே இயங்க முடியாது என்ற நிலையை அடைந்தது. மதத்தின் இயக்கம் பற்றி விளக்கம் கூறும் க. பஞ்சாங்கம்,

"சாவு, விபத்து, முதுமை, பிரிவு முதலிய புரிதலுக்குட்படாத அதிசய நிகழ்வுகள் நிறைந்த மனித வாழ்வில் உருவாகிற ஒரு வெற்றிடத்தை 'மதம்' நிரப்புவதற்கு முன்வருகிறது. துடிப்புமிக்க மானுடத்தின் 'தளர்ச்சியான' இடத்தைத் தனக்கு வலுவாக மாற்றிக் கொண்டு, அதிகார பலத்தில் கொடு முடியையே எட்டிக் கொக்கரிக்கின்றன மதங்கள்"[2]

என்பார். இவ்வாறு மனித வாழ்க்கையில் புகுந்த மதம் அவனுடைய எல்லாச் செயல்களிலும் கலந்தது போலவே, கலை இலக்கியச் செயல்பாடுகளிலும் தன்னை வெளிக்காட்டிக் கொண்டது.

தொல்காப்பியத்தில் ஐவகை நிலத்தின் தெய்வங்களாகக் குறிக்கப்படும் கடவுள்கள், சங்க இலக்கியத்தில் வளர்ச்சி அடைந்திருப்பதைக் காணமுடிகிறது. சங்க காலத்தில் பல்வேறு மதங்கள் கால்கொள்ளத் தொடங்கியதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. சங்க இலக்கியத்தில் சமயக்கருத்துக்களை அடியொற்றிய பாடல்களும் பாடப்பட்டிருக்கின்றன. இவ்வாறு வளர்ச்சி அடைந்து வந்த சமயங்கள் பின்னாளில் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றும் நிலையை அடைந்தன.

சமயப் போராட்டங்கள் மிகுந்த வரலாறாகத் தமிழக வரலாற்றைக் காணவும் இடமிருக்கிறது. தமிழ் இலக்கியங்கள் முழுக்க சமயத்தின் தாக்கம் நிறைந்திருப்பதைக் காணமுடிகிறது. இவ்வாறு இலக்கியத்தில் தொழிற்பட்ட சமயத்தின் தாக்கம் இருபதாம் நூற்றாண்டில் இலக்கிய ஆய்வுகளிலும் தொழிற்பட்டன எனலாம்.

### 3.2. இந்தியாவில் ஏற்பட்ட சமய மறுமலர்ச்சி இயக்கங்கள்

ஐரோப்பிய அறிஞர்களின் மொழியியல் பற்றிய சிந்தனைகளும், இந்திய இலக்கியங்கள், குறிப்பாக வேதங்கள் குறித்த ஆய்வுகளும் இந்தியாவில் தேசம், தேசியம் குறித்த சிந்தனைகளுக்கு வித்திட்டன. பன்னிரண்டாவது நூற்றாண்டில் தோன்றிய பாரதப் பண்பாட்டு இயக்கங்கள் பத்தொன்பதாவது நூற்றாண்டில் சமகாலத் தேவைக்குத் தகுந்தவாறு மறுமலர்ச்சி அடைந்தன. இதனை இங்குச் சுருக்கமாகக் காணுதல் பொருத்தமுடையதாக இருக்கும் எனலாம்.

சர் வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones), வில்ஹெம் ஃபான் ஹம்போல்ட், மாக்ஸ் முல்லெர் (Wilhelm Von Humbolt) முதலானவர்களின் ஆய்வுகள், ஆரிய இனம்,

ஆரியப் பண்பாடு என்ற கருத்தாக்கங்களை உருவாக்கின. "சமஸ்கிருத மொழியறிவுடையவர்களை சமஸ்கிருத மரபினத்தவர் (Sanskritic Race) என ஹம்போல்ட் முதலில் வரையறுத்தார். பின்னர் ஆரிய இனத்தவர் (Ariyan Race) என்று மாற்றம் செய்தார். இந்த ஆரியர்கள் யார் என்ற கேள்வியை எழுப்பி, நவீன ஐரோப்பியர்கள், இந்தியப் பார்ப்பனர்கள் ஆகிய இருவருக்கும் அவர்கள்தான் மூதாதையர்கள் என்று ஜெர்மானிய ரொமாண்டிக் சிந்தனையாளர்கள் விடை வழங்கினர். அந்த ஆரிய இனத்தவரும் அவர்கள் பேசிய இந்தோ-ஜெர்மானிய மொழிகளும் உலக இனங்கள், மொழிகள் ஆகியவற்றில் மிகச் சிறுபகுதியே என்றாலும், ஆரிய இனத்தின் மேலாண்மைக்குக் காரணம் உலகின் அரசியல், இலக்கிய வரலாற்றின் மீது இந்தோ - ஜெர்மானிய மொழிகளும் பண்பாடும் மாபெரும் தாக்கம் ஏற்படுத்தியதுதான் என்று அவர்கள் கூறினர்".[3]

ஆரியப் பண்பாட்டின் ஆணிவேர் வேதங்கள்தாம் என்றும், இந்தோ-ஜெர்மானிய இனத்தவரால் படைக்கப்பட்ட வேறெந்த இலக்கியமும் வேதங்களுக்கு நிகராகாது என்றும் ஜெர்மானியச் சிந்தனையாளர்கள் கூறிய கருத்துக்கள் பார்ப்பனர்களுக்குத் தெம்பூட்டின. அவர்களின் மேலாண்மையை உறுதிப் படுத்துவனவாக அமைந்தன. பார்ப்பனர்களை மாக்ஸ்முல்லர்,

> "இன்றும் தமது சொந்த மொழி, இலக்கியம், மதம் ஆகியவற்றின் தாக்கத்திற்கு உட்பட்டிருக்கும் அந்த உன்னத இந்துக்கள்; சமஸ்கிருதத்திலிருந்து பிறந்த அல்லது வலுவான சமஸ்கிருதத் தாக்கம் பெற்ற மொழிகளைப் பேசுபவர்கள்"[4]

என்று குறிப்பிட்ட கருத்துக்கள் சமஸ்கிருத மொழி பற்றிய தன்னுணர்ச்சியையும், தேசிய இலக்கியம் குறித்த சிந்தனையையும் ஊக்குவித்தன. அக்காலத்தில் தோன்றிய மத இயக்கங்களும் தேசிய இயக்கம் குறித்த சிந்தனைக்கு வித்திட்டன.

இந்து மதத்தில் தோன்றிய குறிப்பிடத்தக்க இயக்கங்களாவன, பிரம்ம சமாஜம், பிரார்த்தனை சமாஜம், ஆரிய சமாஜம், இராமகிருஷ்ணா மிஷன், பிரம்ம ஞான சபை, சமரச சுத்த சன்மார்க்க சங்கம் என்பனவாகும்.

இஸ்லாம் மதத்தில் தோன்றிய இயக்கங்களாவன, வஹாபீ இயக்கம், அஹமதியா

இயக்கம், டியோபாண்ட் நகரில் தோன்றிய தத்துவ இயக்கம், அலிகார் இயக்கம் என்பனவாகும்.

இவற்றுள் இந்து மத இயக்கங்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கனவாகும். இவை இந்து மதத்தைப் புதுப்பிக்கச் செய்ததுடன் ஒன்றுபட்ட இந்தியாவின் உருவாக்கத்திற்கும் பெரும்பங்காற்றின. அந்த வகையில் இந்த இயக்கங்கள் பற்றிய செய்திகள் இங்கு முக்கியத்துவம் பெறுகின்றன எனலாம்.

### 3.2.1. பிரம்ம சமாஜம் [1828]

ராஜாராம் மோகன்ராய் 20-8-1828-ல் பிரம்ம சமாஜத்தைக் கல்கத்தாவில் ஆரம்பித்தார். கிறிஸ்தவ மிஷனரிகள் ஆற்றிய மதப்பிரச்சாரத்துக் கிடையே இந்துக்களை ஒன்றுபடுத்தும் பணியில் பிரம்ம சமாஜம் முன்னின்றது. சமூக சீர்திருத்தத்தில் அக்கறை கொண்டு இயங்கியது. வேதத்தை ஒப்புக் கொள்ளுதல், தேசபக்தி, இந்து-இஸ்லாமியரைச் சமமாகக் கருதுதல் என்ற நிலைகளில் அவர் இயங்கினார்.

"சாதி வேறுபாடுகள், கணக்கற்ற அதன் உட்பிரிவுகள் அனைத்தும் மக்களிடையே தேசபக்தி உணர்வு மலரத் தடைகளாய் உள்ளன. ஆகவே மதத்தில் ஏதாவதொரு மாறுதல் நிகழ வேண்டும்; அதுவும் அரசியல் சமூக நலன்களுக்கு ஏற்றதாக அமையவேண்டும்"[5] என்ற சீர்திருத்த நோக்கு உடையவராகத் திகழ்ந்தார் ராய்.

### 3.2.2. பிரார்த்தனை சமாஜம் [1867]

பிரம்ம சமாஜத்தின் கொள்கையைப் பிரதிபலித்து, பம்பாயில் 1867-ல் பிரார்த்தனை சமாஜம் ஏற்பட்டது. மகா கோவிந்தரானடே, சந்திரவார்கர், பண்டாரகர் போன்ற மேதைகள் பிரார்த்தனை சமாஜத்தைப் பலப்படுத்தினார்கள்.

### 3.2.3. ஆரிய சமாஜம் [1875]

சுவாமி தயானந்த சரஸ்வதி தமது கொள்கைகளைப் பரப்புவதற்கு என்று 10-4-1875-இல் பம்பாயில் ஆரிய சமாஜத்தை நிறுவினார். ஆரிய சமாஜம் வேத நெறியை, தேசியத்தின் மையமாக வைத்து இயங்கியது. சமஸ்கிருதம், வேதங்கள் இவைகளை இரு கண்களாகக் கொண்டு செயல்பட்டார் தயானந்தர். இவ்வியக்கம் இந்தியாவை ஆரிய நாடாகவும், மக்களைப் பாரதப் புத்திரர்களாகவும் கருதித் தேச பக்தியைத் தூண்டியது.

அரசியலில் நேரடியாக ஈடுபடாத தயானந்தர், பாரதத்தை, "ஸ்வர்ணபூமி", "ஆரிய வர்த்தம்", வேண்டியவாங்கு வழங்கும் பாரசமணி போன்றது என்று சிறப்பித்துத் தேச உணர்வை ஊட்டியவர். "வேத மந்திரங்களுக்கு வியாக்கியானம் செய்த சில விடங்களில், இந்தியாவின் சுதந்திரத்திற்குத் தெய்வத்தின் அருளை நாடும் வகையில் உரைகண்டார்"[7] என்ற கூற்றுக் குறிப்பிடத்தக்கதாகும். 1878 முதல் 1881 வரையில் ஆரிய சமாஜமும், தியோசாபிகல் சொஸைடியும் இணைந்து செயலாற்றின.

### 3.2.4. இராமகிருஷ்ணா மிஷன் [1886]

1897-இல் இராமகிருஷ்ணா மிஷன், சமூக, தேசியச் சேவையில் ஈடுபடுவதற்காக விவேகானந்தரின் முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டது. இந்த இயக்கத்தின் தோற்றம் குறித்த விவேகானந்தரின் கருத்தாவது, "இருளில் ஆழ்ந்து கிடக்கும் என் நாட்டு மக்கள் விழிப்புற்று எழுந்து, நெஞ்சில் உரத்துடன் தைரியமாக நின்று, கர்மயோக, உணர்வால் ஊக்குவிக்கப்படும் மக்களாகும்படி செய்ய முடியுமானால், நான் மகிழ்ச்சியுடன் ஆயிரம் நரகங்களுக்குக் கூடச் செல்லத் தயாராயிருக்கிறேன்"[8] என்பதாகும். விவேகானந்தர் இமயம் முதல் குமரி வரை சுற்றுப்பயணம் செய்து இந்து மதத்திற்குப் புத்துயிர் ஊட்டியவர் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

### 3.2.5. பிரம்ம ஞான சபை [1875]

1875-ல் அமெரிக்காவில், நியூயார்க்கில், தியோசாபிகல் சொஸைடி எனப்படும் பிரம்ம ஞான சபை நிறுவப்பெற்றது. இதன் தலைவர் கலோனியல் ஹென்றி ஸ்டீல் ஆல்காட் என்பவர். அமெரிக்க உள்நாட்டுப் போரில் அடிமை முறை எதிர்ப்பாளர் சார்பில் புகழ் கொண்டவர்; ஆன்மிக ஆராய்ச்சியில் ஈடுபாடுடையவர். அதன் செயலாளர் ஹெலினா பெட்ரோவ்னா பிளாவட்ஸ்கி என்பவர். ரஷ்யாவில் பிறந்து, வளர்ந்து அமெரிக்கப் பிரஜையாக மாறியவர். அமெரிக்காவில் நிறுவப்பெற்றாலும் அதன் தலைமையகம் 1879-இல் இந்தியாவில் பம்பாய் நகரில் அமைக்கப்பெற்று இந்தியாவின் தேசிய இலட்சியங்களுக்கு ஊக்கம் அளித்தது. ஆரியப் பண்பாட்டைக் கொண்டும், இந்தியா முழுவதற்கும் சமஸ்கிருதத்தைப் பொதுமொழியாக ஆக்குவதன் மூலமும் இந்தியத் தேசியத் தன்மையை, தேசிய உணர்வை உருவாக்கவும் வளர்க்கவும் முயன்றது.

இவ்வாறு இந்தியாவில் தோன்றிய சமய, சமூக இயக்கங்கள் இந்தியாவின்

ஒருமைப்பாட்டுக்கும் உருவாக்கத்திற்கும் காரணமாக அமைந்தன. "பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த சிலர் 1875-இல் இந்திய சங்கத்தை (Indian Association) நிறுவினர். அதன் உறுப்பினர்கள் என்ற முறையில் தென்னிந்தியாவிற்கு வருகை புரிந்த அவர்கள், இந்தியாவிலுள்ள எல்லா இன மக்களையும் பொதுவான அரசியல் நலன்கள், விருப்பங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஒன்றுபடுத்த வேண்டும் என உற்சாகமாக வாதாடினர். பெங்களூர் செல்லும் வழியில் சென்னைக்கு வந்து ஒரு கூட்டத்தில் பேசிய விபின் சந்திரபால், இந்தியா கடந்த காலத்தில் ஒரு புவியியல் பரப்பாகவே இருந்தது என்ற போதிலும் இப்போது அது ஒன்றுபட்ட, ஒரே சீரான தேசமாக மாறும் என்று கூறினார்".[9]

"இயக்கங்களாக இல்லாமல், தனி நபர்களாகக் கலாசார தேசியத்தின் மேம்பாட்டிற்கு உழைத்தவர்களில் வங்கத்தில் பங்கிம் சந்திர சட்டர்ஜி, ராஜ் நாராயண் வசு (அரவிந்தரின் பாட்டனார்), நாபகோபால் மித்திரர்; மகாராஷ்டிரத்தில் விஷ்ணுகிருஷ்ண சிப்லங்கர், தமிழகத்தில் மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை, கோபால கிருஷ்ண பாரதி, முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள்"[10] ஆவர்.

இப்படியாக, சமூக, சமய, பண்பாட்டு இயக்கங்கள் வாயிலாக "இந்தியா ஆரிய நாடு, இந்திய மதம் இந்து மதம், இந்தியப் பண்பாடு வேதங்களால் கட்டப்பட்டது" முதலான கருத்துக்கள் வலிமையாக முன்னிறுத்தப்பட்டன. இதுவே பின்னாளில் இந்தியத் தேசிய இயக்கத்தின் கருத்தாகவும் பின்பற்றப்பட்டு வளர்த்தெடுக்கப்பட்டது எனலாம்.

இதுபற்றிக் கூற வரும் பெ.சு.மணி, "அந்தக் காலத்தில் சமுதாய அரசியல், ஆற்றல்யாவும் மத இயக்கங்களின் வாயிலாகத்தான் வெளிப்பட வழியிருந்தது"[11] என்கிறார். இதே கருத்தைக் கைலாசபதி, "அந்நியருக்கு எதிரான எதிர்ப்பு எழுந்த வேளையில், அது சமயத் துறையிலேயே முதலில் வெளிப்பட்டது. ஆசிய நாடுகளிலே தேசியத்தின் துவக்க நிலைகள் சமய புத்துயிர்ப்பு, மறுமலர்ச்சி, சீர்திருத்த இயக்கங்களாக இருந்தமை மனங்கொள்ள வேண்டியது"[12] என்பார்.

### 3.3. தமிழகத்தில் சமய எழுச்சி

இந்திய அளவில் இவ்வாறு சமய எழுச்சி ஏற்பட்ட காலக்கட்டத்தில், தமிழ்நாட்டிலும் இவை பரவின; ஆனால் இங்குச் சமய மறுமலர்ச்சியின் தன்மை வேறாக இருந்தது; இந்தியா

முழுவதும் "இந்து சமயம்" என்ற ஒரு புதிய, பொதுமையான வடிவம் உருவாகிக் கொண்டிருந்த காலத்தில், தமிழ்நாட்டில் "சைவ எழுச்சி" தோற்றம் பெற்றது. சமரச சுத்த சன்மார்க்க சங்கம் (1865) என்ற சங்கத்தின் மூலம் ஆன்மநேய ஒருமைப்பாட்டை இராமலிங்க சுவாமிகள் வலியுறுத்தினார். பாரதியார் கூட இதைத் "தமிழ்நாட்டின் விழிப்பு" என்று பாராட்டுகிறார்." [13]

"சமுதாய ஒற்றுமை, மொழிப்பற்று, நாட்டுப்பற்று, சர்வதேசிய நோக்கு, எனப்படும் தேசியவாதத்தின் நான்கு படிகளும், வள்ளலாரின், "ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை" தத்துவத்தில் இடம்பெற்றுள்ளன" [14] என்பார் பெ.சு.மணி.

இராமலிங்க அடிகள் பரப்பிய இந்த இயக்கம் பின்னாளில் "சைவ சமய எழுச்சியாக" வடிவம் பெற்றது. இந்தியா முழுவதும் உயர்சாதியினரும், பார்ப்பனர்களும் இந்து மதத்திற்குப் புத்துயிர் அளித்தவேளையில், பார்ப்பனருக்கு எதிரான போக்கு வளர்ந்த தமிழகத்தில் அது சைவ எழுச்சியாகப் பரிணமித்தது. இந்து மதத்திலிருந்து வேறானதாகவும், தமிழர்க்கான பழம்பெருமை வாய்ந்த சமயமாகவும் சைவ சமயம் பேசப்பட்டது. இதனைத் தமிழக உயர்சாதியினர் குறிப்பாக வேளாளர்கள் முன்னின்று நடத்தினர்.

ஆல்காட்டும், பிளாவட்ஸ்கி அம்மையாரும் திருநெல்வேலியில் பார்ப்பனர்களிடம் பெற்ற ஆதரவு, சைவ வேளாளர்களை எதிரிடையாகச் செயல்பட வைத்தது. 1883இல் தூத்துக்குடிச் சைவ சபையும், 1886இல் பாளையங்கோட்டைச் சைவ சபையும் தொடங்கப்பெற்றன. பிரம்ம சமாஜியாக இருந்த மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை திருவனந்தபுரம் சைவ சபையைத் தொடங்கக் காரணமானவர்களில் ஒருவரானார். திராவிடம் என்ற சொல்லோடு, 'வடமொழி செத்த மொழி, தமிழ் வாழும் மொழி' என்ற கருத்தையும் முன் வைத்தார். [15]

தமிழ் மீட்பு நடவடிக்கையில் குறிப்பிடத்தக்க பங்கு வகித்த சைவ சமய எழுச்சிக்கு, ஆறுமுக நாவலர் பெரிதும் துணை நின்றார். ஈழத்துச் சைவ வேளாளரான ஆறுமுக நாவலர் குறித்துக் க. கைலாசபதி,

"இவ்வாறு நாவலர் சமயத்துறையில் தமக்கிருந்த ஆர்வங்களுடன் சமூகத்திற்கு அத்தியாவசியமாகத் தேவைப்பட்ட நடைமுறைச் செயற்பாடுகளை ஒன்றிணைத்தார்.

அவர் சமூக அரசியலையும் சமயத்தையும் ஒன்று கலந்தார். தமிழர் மத்தியில் ஏற்பட்ட கலாச்சார எழுச்சிக்கு மகத்தான பங்களிப்பாக இருந்தார்."[16]

என்று குறிப்பிட்டார். நாவலர் 'யாழ்ப்பாண சைவ பரிபாலன சபை'யை உருவாக்கிச் சைவ எழுச்சிக்குத் துணை நின்றவர் ஆவார்.

### 3.4. சங்க இலக்கியத்தை அச்சில் கொண்டுவரும் பணியில் சமய இயக்கங்களின் பங்களிப்பு

இக் காலக்கட்டத்தில் அதுவரை அச்சில் வெளிவராத பல தமிழ் நூல்கள் அச்சில் வெளிவரத் தொடங்கின. தமிழறிஞர்கள் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களைத் தேடித் தொகுத்து வெளியிட்டனர். தமிழறிஞர்களான, ஆறுமுக நாவலர், விசாகப் பெருமாள் ஐயர், திருமயிலை சண்முகம் பிள்ளை, மழலை மகாலிங்கய்யர் முதலிய சிலர் பதிப்புப் பணிகளில் ஈடுபட்டுத் தமிழ் இலக்கியங்களை அச்சிட்டனர். எனினும், பழந்தமிழிலக்கியங்களை அச்சில் கொண்டுவருவதில் பெரும்பங்காற்றியவர்கள் சி.வை. தாமோதரம்பிள்ளையும் உ.வே.சாமிநாதையரும் ஆவர்.

ஈழச் சைவ வேளாளரான சி.வை. தாமோதரம் பிள்ளை, தாம் பதிப்பித்த கலித்தொகை, வீரசோழியம் ஆகியவற்றுக்கு எழுதிய முன்னுரையில் தமிழ், திராவிடம் குறித்த உறுதியான கருத்துக்களை முன்வைத்தார். இவர்களைத் தொடர்ந்து தமிழ்ச்சைவ எழுச்சியின் அசைவுகள் வேகம் பெற்றன. இதன் காரணமாகத் தமிழகத்திலும், யாழ்ப்பாணத்திலும் சைவ சித்தாந்த மகா சமாஜங்களும், சைவ சபைகளும், சைவ சித்தாந்த சங்கங்களும், கழகங்களும், சைவப்பிரகாச சபைகளும் தோன்றிச் செயல்பட்டன. இது பற்றி ராஜ் கௌதமன்,

"சைவம், தமிழ், வேளாளர் ஆகிய மூன்றையும் இணைக்கும் வேலை மும்முரமாக நடந்தது. பழைய மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர் முதலான சைவ அடியார்கள், வேளாளப் பெருமையின் சின்னங்களாயினர். வேளாளத் தமிழ்ப் பண்டித மரபையும், சைவ மதத்தையும் வாழ்விக்கச் செய்வதற்காகச் சைவ மடங்களும், கரந்தைத் தமிழ்ச் சங்கமும், பாண்டித்துரைத்தேவரின் தமிழ்ச் சங்கமும், 'செந்தமிழ்ச் செல்வி' (பத்திரிகை), 'சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' (பதிப்பகம்) ஆகியவைகளும் முனைந்து செயல்பட்டன." [17]

எனக் கூறும் கருத்துக் குறிப்பிடத்தக்கதாகும்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் திருநெல்வேலியிலும், சென்னையிலும் இருந்து இயங்கித் தமிழ்ப் பணிகளைச் செய்தனர். இது பற்றி

"1940 முதல் 1960 வரையிலான பல்வேறு ஆண்டுகளில் சங்க இலக்கிய ஆராய்ச்சி மாநாடுகளைத் தமிழ்க் கல்வி வல்லாரைக் கொண்டு நிகழ்த்திக் கழகத்தினர் செய்த தொண்டால், தமிழைக் கற்றிருந்தும் சங்க இலக்கியங்களைக் கல்லாதிருந்த பலருக்கும் தமிழுணர்வும் தமிழறிவும் பெருகின" [18]

என்பர் இராம. தட்சிணாமூர்த்தி.

இம் மாநாடுகளில் நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவுகளைத் தொகுத்து நூல்களாக வெளியிடும் பணிகளையும் கழகத்தினர் செய்தனர். அதன் காரணமாக, நற்றிணைச் சொற்பொழிவுகள், குறுந்தொகைச் சொற்பொழிவுகள், ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், பதிற்றுப்பத்துச் சொற்பொழிவுகள், பரிபாடல் சொற்பொழிவுகள், கலித்தொகைச் சொற்பொழிவுகள், அகநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூற்றுச் சொற்பொழிவுகள், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் எனத் தமிழரின் பெருமை பேசும் நூல்கள் வெளிவரத் தொடங்கின.

ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையின் முயற்சியால் 1905-இல் தமிழ்நாட்டில் 'சித்தாந்த சமாஜம்' உருவாக்கப்பட்டது. ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்ட 'சித்தாந்த தீபிகை' இதழும், டி. சவரிராயப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்ட தமிழியன் ஆண்டிகுயரி (Tamilian Antiquary) இதழும் சைவ சமயத்தை வளர்ப்பதை முழு மூச்சாகக் கொண்டு செயல்பட்டன. இவ்விதழ்களில் சைவ சமயம் குறித்த கட்டுரைகளைப், பொன்.அருணாசலம், பொன்இராமநாதன், எஸ். டபிள்யூ. குமாரசாமி, முத்துத்தம்பிப்பிள்ளை, வி.ஜே. தம்பிப்பிள்ளை, தி. பொன்னம்பலப்பிள்ளை முதலான ஈழச் சைவ வேளாளர்கள் தொடர்ந்து எழுதினர்.

1892-இல் யாழ்ப்பாண 'ரிட்ஜ்வே' மண்டபத்தில் செ. கனகசபைப் பிள்ளையின் தலைமையில் நடத்தப்பட்ட இலக்கிய மாநாட்டில் "தமிழ் மொழியின் வளர்ச்சியைப் போன்ற

சமாந்தரப் போக்குத் தமிழரின் தேசிய சமயத் தத்துவமாகக் கொள்ளப்பட்ட சைவ சித்தாந்தத்திலும் காணப்படுகிறது" என்கிற கருத்து முன்மொழியப்பட்டது." தமிகத்தில் நாகை. வேதாசலம்பிள்ளையும் (மறைமலைஅடிகள்), க.சு. பிள்ளையும் தமிழர் மதம் குறித்து எழுதினர். இப்படி இந்தியத் தேசியத்திற்கு வெளியில் தமிழ் அறிவாளிகள் கூட்டம் ஒன்று தோன்றவும் வளரவும் செய்தது.

இதற்குக் காரணம், "இந்தியத் தேசியம் என அடையாளம் காட்டப்பட்ட மொழி, நிலம், பண்பாடு, ஆகியவை தமக்குரியவை அல்ல என எண்ணும் போக்கும், பார்ப்பனர் மீதான நம்பிக்கையின்மையும், தமிழ்நாட்டுப் பார்ப்பனரல்லாத மக்களிடத்திலே படிந்திருந்ததே" [20] ஆகும்.

இவ்வாறு இந்தியப் பண்பாட்டுத் தளத்திலும், அதற்கு எதிராக இயங்கிய சைவ எழுச்சித் தளத்திலும் எனக் கருத்தியல் மோதல்கள் தொடர்ந்தன. இதன் தாக்கம் பழந்தமிழ் இலக்கியங்களை ஆய்வதிலும் வெளிப்பட்டது.

### 3.5. சங்கத்துக்கும் சமயத்துக்குமான தொடர்பு

சங்கம் என்ற சொல் சமயத்துடன் தொடர்புடையதாகவே காணப்படுகிறது. சமண சங்கத்துக்குப் போட்டியாகச் சைவர்களால் உருவாக்கப்பட்டதே தமிழ்ச் சங்கம் என்ற கருத்து அறிஞர்களிடையே நிலவுகிறது. தமிழகத்தில் சங்கம் என்னும் சொல்லை மக்களிடையே பரப்பியவர்கள் புத்த, சமணத் துறவிகள் என்ற கருத்துத் தென்னிந்திய வரலாற்றாய்வாளர்களால் கருதப்படுகிறது. பி.டி. சீனிவாச ஐயங்கார், க.அ. நீலகண்ட சாஸ்திரி, வி.ஆர்.ஆர். தீக்ஷதர் முதலான அறிஞர்கள் இக்கொள்கை உடையவர்களாகவே காணப்படுகின்றனர். இது பற்றிக் கூறும் பி.டி. *சீனிவாச ஐயங்கார்,*

> "கி.பி. ஆறாம் நூற்றாண்டில், ஜைன பௌத்த சமயங்களோடு, மதுரையில் சைவ சமயம் போட்டியிடத் தொடங்கியபோது, அப்புறச்சமயவாதிகளின் சங்கங்களுக்குப் போட்டியாக, தங்களுக்கும் ஒரு சங்கம் உளது எனப் பெருமை கொள்ளச் சைவர்கள் இயல்பாகவே விரும்பினர். பழைய தொகை நூற் புலவர்களில், தங்கள் தொகை நூற் பாடல்களில் சிவனைக் குறிப்பிட்ட, அல்லது, சிவனோடு ஏதோ ஒரு வகையில், தொடர்புடைய, இறையனார், உருத்திரர், கபிலர், நக்கீரர், பரணர், மதுரைப்

பேராலவாயர் போலும் ஒரு சில புலவர்களை மட்டுமே உறுப்பினர்களாகக் கொண்டதாகத் திருவிளையாடல் புராணத்தில் விளக்கிக் கூறப்படும் சங்கம் போன்ற, தன்னைப் பற்றிய வழிபாட்டுப் பாடல்களைப் பாடும் அறிஞர்களும் புலவர்களும் கொண்ட சிவன், தானே தலைமை தாங்கும் ஒரு சங்கம் பற்றிய கட்டுக்கதை ஒன்றும் எழுந்தது" [21] என்பார்.

"கி.பி. 470 அளவில், வச்சிரநந்தி எனும் சமணத்துறவி மதுரையில் 'திரமிள (திராவிட) சங்கம்' ஒன்றை நிறுவி, சமயப் பணிபுரிந்துள்ளார். அது தமிழ்நாட்டில், சமண சமயத்தைப் பரப்புவதற்கு அமைக்கப்பட்ட சமயச் சார்பான சங்கம். இச்சங்கத்தினை முன் மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்டதாகத் தமிழ்ச் சங்கம் தோன்றுகிறது. எனவே, தமிழ்ச் சங்கம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் நிறுவனப்பட்டதாகும் என்பது பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையின் கருத்தாகும்" [22]

இடைக்காலத்தில் நிகழ்ந்த சமயப்போராட்டத்தில் சமணத்தை அழிப்பதற்காகச் சமண சங்கத்திற்குப் போட்டியாகச் சைவசங்கம் உருவாக்கப்பட்டதாகக் குறிப்பிடுவார் கோ.கேசவன்,

> "பாண்டி நாட்டில் பரவியுள்ள சமணத்தை ஒழிப்பதற்காகச் சோழ நாட்டிலிருந்து புறப்பட்ட பரசமயக் கோளரியான சம்பந்தர், பாண்டி நாட்டில் வஜ்ரநந்தி தொடங்கிய திராவிட சங்கத்தின் செல்வாக்கைக் கண்டு, அதற்கு மாற்றான சைவச் சங்கம் ஒன்றை எடுத்துச் சொல்கின்றார் எனலாம்" [23]

என்பர். இவ்வாறு குறிப்பிடும் கேசவன், சங்கம் பற்றிய கருத்து முதன் முதலில் சம்பந்தர் பெருமானின் பாடலிலேயே காணப்படுவதாகக் கூறுகிறார். இதுவே பின்னாளில் வளர்ந்து களவியல் உரையில் முழுமை பெறுவதாகக் கூறுகிறார். இதன் மூலம், சைவத்தின் வளர்ச்சிப் போக்குக் கேற்ப சங்கம் பற்றிய கருத்து வளர்த்தெடுக்கப்பட்டதை அறிய முடிகிறது.

இக்கருத்தை இன்னும் விரிவாகச் சிவத்தம்பி விளக்குவதைக் காணமுடிகிறது. சங்கத்துக்கான சைவத் தொடர்பை விளக்குவதோடு அதில் காணப்படும் அரசியல் இயங்குதளத்தையும் கணக்கிடுகிறார்.

"இறையனார் களவியலுரையிலே தரப்பட்டுள்ள சங்கம் பற்றிய கட்டுக்கதை, தமிழை இந்துமயப்படுத்துவதற்கான, முக்கியமாக அதனைச் சைவ மரபின் ஓரங்கமாக ஆக்குவதற்கான ஒரு முயற்சியே யாகும். ...வெளிப்படையாகச் சமண, பௌத்தச் சார்புள்ள ஒரு நிறுவனத்தினை ('சங்க'த்தினை) எடுத்துக் கொண்டு அதற்கு ஓர் இந்து உருவும் பொருளும் கொடுக்கும் முயற்சினை இக்கதையிலே காணலாம்" [24]

என்று சமண பௌத்த சமயங்களுக்குப் போட்டியாக இயங்கும் சைவர்களின் எழுச்சியைக் குறிப்பிடுகிறார். அத்துடன் அதனை அரசியல் படுத்துவது பற்றி,

"இதனிலும் பார்க்கச் சுவாரசியமானது, அக்கதைக்குள் அரசர்கள் கொண்டுவரப்படும் முறைமையாகும். கதையின் அமைப்பை நோக்கும்பொழுது, அவ்வச் சங்கங்களின் காலத்திலே ஆண்ட அரசர்களின் தொகையும் இலக்கிய நடவடிக்கைகளில் (பாட்டுக் கட்டுவதில்) ஈடுபட்ட அரசர்களின் தொகையும், கதையோட்டத்துக்கு அத்துணை முக்கியமானவையல்ல. ஆனால் அதுவே கதையின் சீவாதாரமான பகுதியாக்கப்பட்டுள்ளது. உண்மையில், சங்கம் பற்றிய கதை தொடங்கும் பகுதி பின்வருமாறு தொடங்குகின்றது.

"தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம்
என மூன்று சங்கம் இரீஇயனார் பாண்டியர்"

கடவுளர்களே பங்கு கொளும் ஒரு சங்கத்திற்கு ஓர் அரச தளத்தைக் கற்பிப்பதன் மூலம், அப்பொழுது மேற்கிளம்பும் பாண்டிய ஆட்சியை, சந்தேகத்துக்கு அப்பாலான ஒரு முறைமையில் முறைவழிப்பட்டதாக்குவதற்கான முயற்சி இக்கதையில் மேற்கொள்ளப்பட்டுள்ளது" [25]

எனக் குறிப்பிடுகிறார். இவ்வாறு 'சங்கம்' பற்றிய கருத்தியலுக்குள் அடங்கியிருக்கும் அரசியலை பல்வேறு பார்வையில் அறிஞர்கள் வெளிக்கொணர முயன்றுள்ளனர்.

வையாபுரிப்பிள்ளையின் கருத்தை மறுத்தெழுதும் கே.கே. பிள்ளை, சமணர் தொடங்கிய சங்கத்துக்கு இலக்கிய வளர்ச்சியில் ஈடுபாடு கிடையாது என்பார். அவருடைய கூற்றாவது,

"வச்சிர நந்தி என்ற சமணர் தொடங்கிய 'திரமிள' சங்கமே தமிழ்ச் சங்கம் என்று வழங்கி வந்ததென்றும், அச்சங்கம் கி.பி. 470ல் செயல்படத் துவங்கிற்றென்றும், அதனின்றும் வெளியான முதல்தமிழ்நூல் தொல்காப்பியம் என்றும் வையாபுரிப்பிள்ளையவர்கள் தம் தமிழாய்வின் பயனாய் மற்றொரு வியப்பூட்டும் கருத்தினை வெளியிட்டுள்ளார். இவற்றை வரலாற்றுண்மைகளாக ஏற்றுக்கொள்வார்கள் ஆய்வாளர்கள். தமிழ்நாட்டில் சமணத்தை வளர்ப்பதற்காகவே அமைக்கப்பட்டது அச்சமண சங்கம். தமிழில் இலக்கியமோ இலக்கணமோ தோற்றுவிப்பதில் அதற்கு ஈடுபாடே கிடையாது" [26] என்பதாகும்.

### 3.6. சங்க இலக்கிய ஆய்வுகளில் சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் செலுத்தியுள்ள செல்வாக்கு

தமிழரின் மொழி, இனப்பெருமிதம் குறித்த கருத்துக்களின் வளர்ச்சிக்கும், ஐரோப்பிய அறிஞர்களே காரணமாக அமைந்தனர் எனலாம். திராவிட மொழிகள் குறித்த மேலை நாட்டினரின் ஆய்வுகள் குறிப்பிடத்தக்க எழுச்சியினைத் தமிழ் அறிஞர்களிடம் தோற்றுவித்தது. பெர்சிவல், வின்சுலோ, கால்டுவெல், போப் முதலிய அறிஞர்களே இத்திராவிட மொழி குறித்த உணர்வுந்துதலுக்கு உரமூட்டினர். தமிழ் அறிஞர்களும், எழுத்தாளர்களும் தமிழ்மொழி குறித்த தொல்பழம் பெருமைகளைக் கண்டறியவும், கண்டறிந்தவற்றை விளக்கவும் இவ்வறிஞர்களின் கருத்துக்கள் பெருமளவுக்குத் தூண்டுதலாய் அமைந்தன. இது குறித்துக் கா. சிவத்தம்பி,

"தமிழ் மேன்மை பற்றிய சமூக உணர்வுக்குத் தமிழ்நாட்டினுள் வந்து கிறித்துவம் பரப்பிய பாதிரிமாரின் பணியும் முக்கியமானதாகும்"[27] என்பார்.

#### 3.6.1. கால்டுவெல்

சமயம் பரப்ப வந்த கிறித்துவத் தந்தைமார்களில் குறிப்பிடத்தக்கவர் இராபர்ட் கால்டுவெல் ஆவார் இவர் 1856-இல் எழுதி வெளியிட்ட திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற நூல் மொழி குறித்த பல்வேறு சர்ச்சைகளுக்கு இடமளித்தது. தமிழ் மொழியின் பெருமை பேசிய அறிஞர்களுக்கு ஊக்கத்தைக் கொடுத்தது எனலாம். இது குறித்து,

"தமிழின் தனித்தன்மை, தமிழ் இலக்கியத் தொன்மை, சிறப்பு, தமிழ்ப்பண்பாட்டுக் கூறுகள் பற்றிக் கால்டுவெல் எழுதிய செய்திகள் நிறைகுறைகள் இருப்பினும் அந்த நூல் பிற்கால ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்பட்டது என்பதில் ஐயமில்லை. இன்றும் கூட, அதற்கு மாற்றாக ஒரு தனிப்பெரும் நூல் தோன்றவில்லை என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்" [28]

என்பர் இராம. சுந்தரம்.

வடமொழி உயர்வு பற்றிப் பேசிக்கொண்டிருந்த சூழலில் அதனை மறுக்கும் வேலையைக் கால்டுவெல் செய்தார்.

"திராவிட மொழிகள் வடஇந்திய மொழிகளிலிருந்து பற்பல இயல்புகளில் வேறுபடுகின்றன. இவ்வாறிருந்தும் அத்திராவிட மொழிகள், வட இந்திய மொழிகளைப் போலவே சமஸ்கிருதத்திலிருந்து பிறந்தனவாகச் சமஸ்கிருதப் பண்டிதர்களால் கருதப்பட்டன. தாங்கள் அறிந்த எப்பொருளுக்கும் பார்ப்பன மூலம் கற்பிக்கும் இயல்பினர் அப்பண்டிதர்கள். அவர்கள் கூறும் அம்முடிவை முதன் முதலில் வந்த ஐரோப்பிய அறிஞர்களும் அவ்வாறே ஏற்றுக்கொண்டனர்" [29]

என்று ஐரோப்பிய சிந்தனையாளர்களின் கருத்துக்கும் காரணம் கூறுகிறார் கால்டுவெல். இன்னும் அவ்வறிஞர்கள் திராவிட மொழிகளை அறிந்தவர்கள் அல்ல என்பதை,

"திராவிடம் சமஸ்கிருதத்திலிருந்து பிறந்தது என்ற கருத்து, முந்திய தலைமுறையினரால் மொழிநூல் வல்லுநர்க்கு ஏற்புடையதாய் விளங்கினும் இக்கலை அறவே அடிப்படையற்றுப்போன கட்டுக்கதையாகிவிட்டது. மேலே கூறிய பண்டிதர்கள், சமஸ்கிருத மொழியை ஆழக் கற்று, வட இந்திய மொழிகளை விளங்க அறிந்தவரேனும், அவர்கள் திராவிட மொழிகளை அறவே கண்டறியாதவராவர்; அல்லது ஒரு சிறிதே அறிந்தவராவர்" [30] என்கிறார்.

இந்திய மொழிகள் அனைத்தும் சமஸ்கிருதக் கலப்புடையவை; சமஸ்கிருதத்தின் துணையின்றி வாழமுடியாது எனக் கருதிக் கொண்டிருந்த சூழலில் அக்கருத்தையும் உடைக்கும் வேலையைச் செய்தார் கால்டுவெல்.

"திராவிட மொழிகள் அனைத்திலும், உயர்தனிச் செம்மொழியாய் நிலைபெற்று விளங்கும் தமிழ், தன்னிடையே இடம்பெற்றிருக்கும் சமஸ்கிருதச் சொற்களை அறவே ஒழித்துவிட்டு உயிர்வாழ்வதோடு அவற்றின் துணையை ஒரு சிறிதும் வேண்டாமல் வளம் பெற்று வளர்வதும் இயலும்" [31]

எனத் தமிழ் மொழியின் தனித்தியங்கும் தன்மை பற்றிக் குறிப்பிடுகிறார். அத்துடன் தமிழர்களின் தொன்மை குறித்தும் குறிப்பிடத் தவறவில்லை கால்டுவெல்.

"திராவிடம் என்ற சிறப்புப் பெயரிட்டு அழைக்கப்பெற்ற மக்கள், ஆரியப் பார்ப்பனர்கள் தங்களிடையே வந்து வாழத்தொடங்குவதற்கு முற்பட்ட காலத்திலேயே நாகரிக வாழ்வில் அடியிட்டிருந்தனர் என்பதில் சிறிதும் ஐயமில்லை". [32]

இவ்வாறு, தமிழ் மொழியின் ஆற்றல், தமிழர்களின் தொன்மை குறித்துச் சந்தேகத்திற்கு இடமற்ற கருத்துக்களைக் கால்டுவெல் முன் வைத்தது தமிழறிஞர்களைச் சுறுசுறுப்புடன் இயங்கவைத்தது எனலாம்.

### 3.6.2. வின்சுலோ

இதேபோல், தமிழ் மொழியின் சிறப்புக் குறித்து வின்சுலோ என்ற ஐரோப்பிய அறிஞரின் கருத்தும் குறிப்பிடத்தக்கதாகும். இவர் 1862இல் ஒரு தமிழகராதியைத் தொகுத்து வெளியிட்டார். அவ்வகராதியின் முன்னுரையில்,

"தமிழ் ஒரு கொச்சை மொழியன்று. ஆங்கில மொழி எழுத்து வடிவம் பெறுவதற்கு முன்னரே தமிழ் மிகுந்த பண்பட்ட மொழியாக விளங்கியது. அதன் பெயரே இனிமையைக் குறிக்கிறது. தெலுங்குமொழியளவிற்கு இசையினிமையுடைய தன்றாயினும் குறிப்பாக அதன் பாவடிவில் இன்னோசைக் கவர்ச்சியும், இனிமையும் பெற்றுள்ளது" [33]

எனத் தமிழ் மொழியைச் சிறப்பிக்கிறார். இன்னும்,

"சமற்கிருதக் கலப்பில்லா பண்டை இலக்கியம் தமிழில் இருந்தது என்பது தெளிவு. இப்போது கலை, அறிவியல், சமயக் கலை சொற்களையும், சில நுண்மைக் கருத்து

வடிவங்களையும் தவிரக் குறிப்பிட்ட சில அறிவுத் துறைகளில், நாம் தூய சாக்சன் மொழியில் எழுதுவது போலத் தூய தமிழில் எழுத முடியும். உண்மையில் நாம் செந்தமிழ் நோக்கிச் செல்கையில் சமற்கிருதத் தேவை குறைவாகிறது. இலத்தீன் உதவியின்றி ஆங்கிலம் இயங்குவதைவிடச் சிறப்பாகச் சமற்கிருதத் துணையின்றித் தமிழ் விளங்க முடியும் என்பது உறுதி"[34]

எனத் தமிழின் ஆற்றல் குறித்துப் பேசுவதைக் காணமுடிகிறது.

**3.6.3. ஜி.யு.போப்,**

இதே போன்று ஜி.யு.போப்,

"சமஸ்கிருதத்திற்கு நிகரான தமிழ் மொழியின் தொல்பழமை மிகத் தெளிவான ஒன்றாகும். தமிழில் உள்ள தொன்மையான இலக்கணங்களும் அவற்றின் யாப்பு முறையும், தமிழின் நெடுங்காலமாகத் தொடர்ந்து வளர்ந்த வளத்தினைக் காட்டுவனவாகும்"[35]

எனத் தமிழின் பழம்பெருமையைப் பேசுவதைக் காணமுடிகிறது.

மேலும் வி.ஏ. ஸ்மித் என்பவர்,

"மிகச் சிறந்த தமிழ்ப்பாக்கள் முந்திய காலத்தவை என்று கருதும் அறிஞர்கள் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதே; அன்றியும் தமிழிலக்கியத்தின் 'அகஸ்த' காலம் (பொற்காலம்) கிருத்து ஆண்டு முதல் மூன்று நூற்றாண்டுகளில் அமைதல் வேண்டும்"[36] என்பார்.

இவ்வாறு, சமயம் பரப்ப வந்த ஐரோப்பிய அறிஞர்களின் கருத்துக்கள், ஆரியம் கடந்த தமிழ் என்ற முறையில் சமூகத்தின் அனைத்துத் துறைகளிலும் தமிழறிஞர்களை இயங்கச் செய்தது எனலாம்.

**3.6.4. மு. வரதராசனார்**

சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளில் 'சங்கம்' குறித்த செய்திகள் குறிப்பிடத்தக்க இடத்தை வகிக்கின்றன எனலாம். சங்க இலக்கியங்கள் என்று இன்று நாம் கருதும் நூல்களில்

'சங்கம்' என்ற சொல்லைக் காண முடியவில்லை. பக்தி இயக்கக் கால இலக்கியங்களிலேயே 'சங்கம்' என்ற சொல்லின் ஆட்சியையும் வளர்ச்சியையும் காணமுடிகிறது. இருபதாம் நூற்றாண்டு மறுமலர்ச்சி இயக்கங்களின் தாக்கத்தினால், சங்கம் குறித்தும், சங்க காலம், சங்க இலக்கியம் குறித்தும் உணர்ச்சிப் பூர்வமான கருத்து மோதல்கள் நடந்தேறின. இதன் காரணமாகத் தமிழ் மக்களின் ஒரு குறிப்பிட்ட கால இலக்கியத்தைச் சங்க இலக்கியம் என்று சொல்லும் வழக்கம் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டு நிலைபெற்றுவிட்டது எனலாம்.

இது குறித்து மு. வரதராசனார்,

"மூன்று சங்கங்கள் இருந்தனவா என்பதை வலியுறுத்தும் சான்றுகள் போதுமான அளவில் இல்லை. புலவர்கள் கூடி ஆயும் கூட்டங்கள் இருந்தன என்பதை மட்டுமே பழைய சங்க இலக்கியச் சான்றுகள் அறிவுறுத்துகின்றன. ஆயினும், ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்கு உட்பட்ட நூல்களைச் சங்க இலக்கியம் என்றும், அக்காலத்தைச் சங்க காலம் என்றும் வழங்கும் மரபு பயனுள்ளதாகி விட்டது"[17]

என்று குறிப்பிடுவதைக் காணமுடிகிறது.

1979இல் 'சங்கம்' குறித்து நீண்ட கட்டுரை ஒன்றை எழுதி வெளியிட்ட கோ. கேசவன்,

"கி.பி. 7ஆம் நூற்றாண்டளவில் ‹ ரவி விடப்பட்டு கி.பி. 10ஆம் நூற்றாண்டு அளவில் நிறுவனமான பொய்ம்மையான கருத்துகள் இன்றளவும் தமிழ்ச் சமுதாயத்திலும் இலக்கியவுலகிலும் ஆளுமை பெற்ற கருத்துகளாகவே இருக்கின்றன. ஆனால் 'சங்கம்' தனது பழமையான சைவத் தொடர்பைக் கொஞ்சம் நெகிழவிட்டு இன்று அரசியல் போர்வையை அதிகமாகப் போர்த்திக்கொண்டது. இதனுடைய இன்றைய தன்மையை ஆராயப்புகுந்தால் அது நம்மைத் தமிழகத்தின் கடந்த ஐம்பது ஆண்டுக்கால அரசியல்-பொருளாதார-சமூக ஆய்வுக்குள் கொண்டு செல்லும் என்பதில் ஐயமில்லை"[18]

என்று குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. மேலும், "இது ஒரு பிரிவினரின் தேவை கருதிய வலுக்கட்டாயமான திணிப்பு ஆகும்"[19]

என்று எழுதுகிறார். இதன் மூலம், இருபதாம் நூற்றாண்டில் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் தங்களின் தேவை கருதி இச்சங்கம் குறித்த சொல்லாடலை நிகழ்த்தியிருப்பதை அறிய

முடிகிறது. தமிழ்ச் சைவ எழுச்சி இயக்கத்தினருக்குச் 'சங்கம்' என்ற அமைப்பின் உறுதிப்பாட்டை நிலைநிறுத்த வேண்டிய அரசியல் தேவை இருந்தது. சங்கம் என்ற அமைப்பு ஏற்கனவே சைவத்துடன் தொடர்புடையதாகக் கூறப்பட்டிருந்ததும் இதற்கு ஒரு காரணமாகும். எனவே சங்கம் குறித்து அவர்கள் தொடர்ந்து எழுதினர். இதன் காரணமாக, இந்து மதத்தை முன்னிறுத்திய இந்தியத் தேசிய இயக்கத்தினர் இவர்களுக்கு எதிராக இயங்கவேண்டிய சூழல் ஏற்பட்டது. இதன் காரணமாகச் சங்கத்தின் உண்மை, இன்மை குறித்து நீண்ட நெடும் விவாதங்கள் தமிழ்ச்சூழலில் எழுந்தன. இவற்றின் பயனாகச் சங்க இலக்கியம் என்ற கருத்து நிலைபெற்றது. எனவே, சமயமறுமலர்ச்சி இயக்கங்கள் குறித்து ஆராயும் சங்கம் குறித்த அவர்களது எழுத்துக்கள் முதன்மை பெறுகின்றன எனலாம். எனவே, இனி இச்சங்கம் குறித்த கருத்துக்களைக் காணும் முயற்சியை மேற்கொள்ளலாம்

### 3.6.5. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி

சங்கம் பற்றி ஆராயும் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி,

"மதுரையில் அரசனின் ஆதரவோடு தமிழ்ப் புலவரவை ஒன்று சில காலம் உண்மையாகவே இருந்து இருக்கலாம். ஆனால், அதைப் பற்றிய முதற்குறிப்பு சுமார் கி.பி. 750-ஐச் சார்ந்த இறையனாரகப் பொருளுரையின் முன்னுரைப் பகுதியில் அமைந்திருக்கிறது. அக்குறிப்பு, பொய் மலிந்த புராணப் போர்வையுள் மூடிக் கிடக்கிறது. 9000 ஆண்டுகளாகிய நீண்ட கால இடைவெளியில் மூன்று சங்கங்கள் நிலவியதாக அவ்வுரை குறிப்பிடுகிறது. (சைவ சமயச் சார்புடைய சில கடவுளர்கள் உள்ளிட்ட) 8598 புலவர்கள் உறுப்பினராகவும் 197 பாண்டியர்கள் புரவலராகவும் இருந்ததாக அது குறிக்கிறது. அது குறிக்கும் பேர்களுள் கடுங்கோன், உக்கிரப் பெருவழுதி, போன்ற அரசர்களின் பெயர்களும் மற்றும் சில புலவர்களின் பெயர்களும் சாசனங்களிலும் தக்க பிற ஆவணங்களிலும் காணப்படுகின்றன. இச்சிறுபான்மை உண்மையை வைத்து நோக்கினால், பெரும் பகுதிக் கற்பனையில் ஒரு சிறிது உண்மையும் கலந்திருக்கிறது. எனவே, அதிலிருந்து பொருளுடையதாக மதிக்கத் தகுந்த எவ்வகை முடிவும் கொள்ள முடியாது"[40]

என்று கூறுகிறார். இதன் மூலம் சங்கம் பற்றிய வரலாற்றைக் கற்பனை மிகுந்த கதையாகக் கருதுவதைக் காணமுடிகிறது. எனினும் சங்கம் பற்றிய குறிப்புகளைக் கொண்டு கே.ஏ.

நீலகண்ட சாஸ்திரியார், ஒரு சங்கமாவது இருந்திருக்கலாம் என்ற முடிவுக்கு வருகிறார்.

### 3.6.6. பி.டி. சீனிவாச ஐயங்கார்

தமிழர் வரலாறு என்னும் நூலை எழுதிய பி.டி. சீனிவாச ஐயங்கார் சங்கச் செய்யுள் என்ற தொடரையே பொருளற்ற தொடர் என்று கூறுகிறார். சங்கச் செய்யுளை இவர் 'சான்றோர் செய்யுள்'[41] எனக் குறிப்பிடலாம் என்கிறார். இந்நூலில் சங்கம் குறித்து விரிவாக ஆராய்கிறார். சங்கம் குறித்த இறையனார் அகப்பொருள் செய்திகளை நம்புதற்கு இயலாதன; நகைப்பிற்கு உரியன என மதிப்பிடுகிறார். இதனை,

"இதில் கூறப்பட்டிருக்கும் சில செய்திகள் மேலெழுந்தவாரியாக நோக்கினும் நம்புதற்கு இயலாதன: சில நகைப்பிற்கு உரியன. மூன்று சங்கங்களுக்கும் ஒதுக்கப்பட்ட ஆண்டுகள், அச்சங்கங்களுக்குக் கூறிய கால நீட்சியால் மட்டுமல்லாமல், அவ்வெண்களுக் கிடையே காணப்படும் ஒரே மாதிரித் தன்மையாலும் நம்பக்கூடியனவாக இல்லை. ஒவ்வொரு சங்கத்திற்கும் கூறிய ஆயுட்காலம் 37-ன் பெருக்குத் தொகையாக அமைகிறது. அவற்றின் மொத்த ஆயுட்காலம் முறையே, 37X120=4440 ; 37X100 = 3700; 37X50 = 1850. இது, அவ்வெண்கள் எத்துணைச் செயற்கையானவை என்பதைக் காட்டுகிறது. மற்றுமொரு காரணத்தாலும், இவ்வெண்கள் நம்பத் தக்கனவாக இல்லை. அப்பழங்காலத்தில் உண்மையில் கூறப்போனால், எட்டாம் நூற்றாண்டு வரை, கிறித்துவ ஆண்டு போலும், ஆண்டுக் கணிப்பு முறை, தமிழ் நாட்டில் கண்டு பிடிக்கப்படவில்லை. அல்லது பின்பற்றப்படவில்லை. ஆகவே, ஆண்டுகளைப் பெருமெண் அளவில் எண்ணிக்காணும் வழிமுறை இடம்பெறவில்லை"[42] என்ற கூற்று தெளிவாக்குகிறது. இக்கருத்தை மறுக்கும் கா. கோவிந்தன்,

"முச்சங்கங்களின் ஆயுட்காலம் முறையே 4400, 3700, 1850 என, அவற்றின் ஆயுட்காலந்தான் கூறப்பட்டுள்ளதேயல்லாது கிறித்து பிறப்பதற்கு முன்னர் (கி.மு.) அதற்குப் பின்னர் (கி.பி.) என்பது போல் இன்னார் பிறப்பதற்கு முன் இத்தனை ஆண்டுகள் என்றோ, அதற்குப் பின் இத்தனை ஆண்டுகள் என்றோ ஆண்டுக் கணிப்பு நிலையில் கூறப்படவில்லை; ஆகவே, அப்பழங்காலத்தில், தமிழகத்தில் ஆண்டுக்

கணிப்பு முறை இருந்ததா இல்லையா என்பது பற்றிய ஆய்வுக்கு இங்கு இடம் இல்லை"[43]

என எழுதித் தமிழர்கள் எண்ணிக்கை முறையை அறிந்தவர்கள் என அதற்கான சான்றுகளைப் பட்டியலிடுகிறார். இதன் மூலம் இந்தியத் தேசியச் சிந்தனையாளர்கள் சங்கம் பற்றிய செய்திகளை மறுத்து எழுதுவதையும், தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் உடன்பட்டு எழுதுவதையும் அறிய முடிகிறது. தொடர்ந்து எழுதும் பி.டி. சீனிவாச ஐயங்கார்,

"முதல் இரு சங்கங்களைச் சார்ந்த புலவர்கள் பாடிய பாக்களையும், இத்தொகை நூல்கள் கொண்டிருக்கும் போது, அத்தொகை நூல்களைக் கண்முன் வைத்துக்கொண்டே, இவையெல்லாம் கடைச்சங்கப் புலவர்களால் பாடப்பட்டன எனக் கூறுவாரேயானால், அவ்வகப் பொருள் உரையாசிரியர், அறவே நம்பிக்கைக்கு உரியரல்லாதவர் என்ற முடிவிற்கு நாம் வரவேண்டியவராகிறோம்"[44]

என அகப்பொருள் உரையாசிரியரை நம்பிக்கைக்கு உரியவர் அல்ல என்ற முடிவுக்கு வருகிறார். பாண்டியர்களுக்கு மூன்று தலைநகர்கள் இருந்தன என்பதை ஒப்புக்கொள்ளும் பி.டி. சீனிவாச ஐயங்கார்,

" மூன்று தலைநகர்கள் இருந்தன என்ற உண்மை, முச்சங்கங்கள் குறித்த கட்டுக்கதையினைத் தோற்றுவித்தது"[45] என எழுதுகிறார்.

### 3.6.7. கே.என். சிவராஜப்பிள்ளை

சங்கம் என்பது வரலாற்றில் வலுக்கட்டாயமான திணிப்பு எனக் கருதும் கே.என். சிவராஜப்பிள்ளை,

"சங்க இலக்கியம் என்று சொல்லப்படும் எந்நூலிலும் புலவர்கள் கூடித் தமிழாய்ந்த சங்கம் இருந்ததாக அகச் சான்றுகள் கிடையாது. எந்நேரத்தும் போர் மேகம் சூழ்ந்திருந்த ஒரு கால கட்டத்தில், அரசியல் பின்னல் வளைகளால் சமூகம் அமைதியற்றுக் கிடந்த கால கட்டத்தில் இத்தகைய அமைப்பு ரீதியான சங்கம் என்பது சாத்திய மில்லாததாகும். மேலும் புலவனின் நோக்கம், தன் பாடலைப் பாடி பரிசில் பெற்று பசி நீக்க வேண்டும் என்பதுதானே தவிர, அவையில் வைத்து ஆராய்ந்து

சீர்தூக்கிப் பார்க்கவேண்டும் என்பதல்ல"[46]

என்று எழுதுவதுடன் சங்கம் என்ற அமைப்பே இல்லை என்று மறுக்கிறார்.

### 3.6.8. எஸ். வையாபுரிப்பிள்ளை

சங்கம் என்ற அமைப்புப் பற்றிய செய்திகளில் மிகுந்த கற்பனை கலப்புள்ளதாக எஸ் வையாபுரிப்பிள்ளை கருதினார். அவருடைய கருத்தாவது,

"இவ்வரலாறுகளை வாசித்து நோக்கிய அளவில், தலை இடைச்சங்கங்கள் முழுக் கற்பனை என்பது புலனாகும். எனவே, இவற்றை ஆராய்ந்து உண்மைகாண முயல்வது பயனற்ற செய்கை. தமிழின் தொன்மையையும் அதன் தெய்வத்தன்மையையும் வற்புறுத்துதற்கு எழுதி வைத்த கற்பிதக் கதை என்றே இவை கொள்ளத்தக்கன. கடைச் சங்கத்தைப் பற்றிய வரலாறு அங்ஙனமன்று. இதிற் கூறிய புலவர்களில் பெரும்பாலரது செய்யுட்கள் இப்போதும் உள்ளன. இதில் ஆராய்ந்தனவாகக் கூறும் நூல்களிற் பெரும்பாலனவும் இப்போதும் அகப்படுகின்றன. ஆனால், இவ்வரலாற்றிலும் கற்பனை கலப்புள்ளது என்று கருத இடமுண்டு"[47]

என்பதாகும். இப்படி எழுதிச் செல்லும் வையாபுரிப்பிள்ளை, கடைச் சங்கம் பற்றிய செய்தியையும் மறுப்பதைக் காணமுடிகிறது.

"...மேலும், எட்டுத்தொகையைச் சார்ந்த நூல்களுள், தொகுப்பு வரலாறுகள் கிடைப்பனவற்றுள் ஒன்றிலேனும் மதுரையில் கடைச்சங்கம் கூடித் தமிழ் ஆராய்ந்ததாகக் காணப்படாமை ஊன்றி கவனிக்கத்தக்கது. தொகை நூற் புலவர்களுள்ளும் ஒருவரேனும் சங்கம் ஒன்று இருந்ததாகக் கூறினாரல்லர்"[48] எனக் குறிப்பிடும் வையாபுரியார்,

"... ஆனால், இச்சங்க வரலாற்றில் சில உண்மைகள் உள்ளன. இதன்கண் 'நானூற்று நாற்பத் தொன்பதின்மர் பாடினார் என்ப' என்று காணப்படுகிறது. இந்த எண், தொகைநூற் புலவர்களின் எண்ணோடு பெரும்பாலும் ஒத்துள்ளது. ...ஆனால் இப்புலவர்கள் வாழ்ந்த காலம் 1850 ஆண்டுகள் என்பது முதலியன கற்பிதங்கள் என்றே கொள்ளத்தக்கன. இவர்களது காலம் சுமார் ஒரு நூற்றாண்டின் எல்லையேயாம் என்பது எளிதில் காட்டுதல் கூடும். இப்புலவர்களின் எண்ணேயன்றி, வேறு சில

உண்மைகளையும் அடிப்படையாகக் கொண்டு இவ்வரலாறு புனையப்பட்டுள்ளது"[49]

என்பார். மேலும்,

"பௌத்த சங்கமும் சைன சங்கமும் அங்கங்கே தோன்றித் தத்தம் சமய நூல்களை ஆராய்ந்து வருவது பெருவழக்கமாயிருந்தது. இச்சங்க உணர்ச்சியும் முற்கூறிய உண்மைகளோடு கூடித் தமிழ்ச் சங்கம் ஒன்று மதுரையில் நிறுவப்பட்டிருந்தது என்ற பரம்பரை வரலாற்றுக்குக் காரணமாய் முடிந்தது. எட்டுத்தொகை நூல்களும் தொகுக்கப்பட்ட காலத்திற்குப் பின் அதாவது சுமார் 5-ம் நூற்றாண்டுக்குப் பின் இவ்வரலாறு தோன்றியிருக்க வேண்டும். இது நாளடைவில் பெருகி வளர்ந்தது"[50]

என்று குறிப்பிடுகிறார் வையாபுரியார். இவ்வாறு வையாபுரிப் பிள்ளை, வாதங்களை அடுக்கிக் கூறும் தருக்க முறையிலான ஆய்வு நெறிப்படி சங்கம் பற்றிய செய்திகளை மறுக்கிறார். இப்போக்குத் தேசிய இயக்கச் சிந்தனைக்கும் வலுவூட்டுவதாக அமைகிறது.

**3.6.9. கே.கே. பிள்ளை**

சங்கம் பற்றிய வரலாறு உண்மையும் கதையும் கலந்து உருவானது என மதிப்பிடுகிறார் வரலாற்றுப் பேராசிரியர் கே.கே பிள்ளை. அவருடைய கருத்தாவது,

"புகழ் பெற்ற புலவர் குழு ஆகிய சங்கத்தின் பிறப்பு வரலாறு தானும் புரியாத மறை பொருளாக இருந்தது. சங்கத்தின் ஆதிவரலாறு 'இறையனார் களவியல்' என்னும் அகப்பொருள் இலக்கண நூலின் விரிவுரை அகத்தே வெளிப்படுகின்றது. ...மேலும் மனித எல்லை மீறிய தெய்வீக சக்தியில் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. அதனுள், ஒன்றின் பின் ஒன்றாக எழுந்த மூன்று சங்கங்கள் கூறப்பெற்றுள்ளன. அவை மொத்தம் 9,990 ஆண்டுகள் நிலைபெற்றிருந்தன. அக்காலத்தில் 8,598 புலவர்கள் கூடி அரிய நூல்கள் இயற்றி சங்கத்தில் அரங்கேற்றியுள்ளனர். அப்புலவர்களில் கடவுளரும் சிலர் இருந்தனர்! இத்தகைய வரலாறு நம்புதற்குரியதன்று என்பது தெளிவு. எனினும் பன்னூற்றாண்டுகளாக வழி வழியே வழங்கி வருகின்ற சங்க வரலாறு முற்றிலும் வெறும் கதை எனத் தோன்றவில்லை. சங்கத்தைப் பற்றிப் பிற்கால நூல்களில் பல்வேறு குறிப்புகள் உள்ளன. சங்க நூல்கள் சிலவற்றில் அரசர் புலவர் சிலர் செய்திகள் காண்கிறோம்.

அவற்றை வைத்து நோக்குங்கால், சங்கத்தைப் பற்றிய வரலாறு உண்மையும் கதையும் கலந்து உருவானதென நினைக்க இடம் உள்ளது"[51]

என்பதாகும். இதே போன்று சங்கத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது க.த.திருநாவுக்கரசு, "இயற்கை இகந்த நிகழ்ச்சிகளையும், நம்ப இயலாக் கற்பனை எனச் சில செய்திகளையும் நீக்கி விட்டுப் பார்ப்போமானால், "மூன்று சங்கங்கள் இருந்தன. அவை பாண்டியரின் கோநகர்களில் நிறுவப்பட்டு இருந்தன; அவற்றில் பல புலவர்கள் உறுப்பினர்களாகவும், அலுவலர்களாகவும் இருந்து தமிழை வளர்த்தனர்" எனும் உண்மைகள் மறுக்கவோ, மறைக்கவோ, மறக்கவோ இயலாது என்பது புலப்படும்[52] என்கிறார்.

### 3.6.10. சூரிய நாராயண சாஸ்திரி

சங்கம் பற்றிய செய்திகள் நம்புதற்குரியன எனக் கருதும் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியின் கருத்துக்கள் குறிப்பிடத் தக்கவையாகும். அவர்,

"இக்கூற்றுக்களை யாம் ஆராய்ந்து பார்க்குமிடத்து, தலைச் சங்கத்தை ஒவ்வொரு பாண்டியனும் ஏறக்குறைய ஐம்பதைம்ப தாண்டுகள் நடாத்த அது நடந்து வந்திருத்தல் வேண்டு மென்பதும், இடைச் சங்கத்தை ஒவ்வொரு பாண்டியனும் ஏறக்குறைய அறுபத்து மூன்றறுபத்து மூன்றாண்டுகளாக நடாத்த அது நடந்து வந்திருத்தல் வேண்டுமென்பதும் போதருகின்றன. இச்சங்கங்களிரண்டும் நீடித்த காலம் நடந்து வந்திருக்க வேண்டுமென்பதிலும் பல நூல்களியற்றப்பட்டன வென்பதிலும், பாவலர் பலர் சங்கத்தை யொட்டி வாழ்ந்தன ரென்பதிலும், சங்கமிரண்டும் முறையேயிருந்த மதுரையும், கபாடபுரமுங் கடல் கொள்ளப் பட்டன வென்பதிலும், அது காரணமாகப் பல அரிய தமிழ் நூல்கள் அழிந்துபட்டன வென்பதிலும் ஐயப்பாடில்லை யென்னலாம்" [53]

எனக் குறிப்பிடுவார். தேசிய இயக்கச் சிந்தனையாளர்கள் ஐயம் கொள்ளும் அதே கருத்தை, நம்புதற்குரியன என இவர் குறிப்பிடும் பாங்கு எண்ணத்தக்கதாகும். தொடர்ந்து எழுதும் சூரிய நாராயண சாஸ்திரி,

"மற்றுப் பாண்டியரசர்கள் முறையே ஐம்பதாண்டும் அறுபத்து மூன்றாண்டுமாக ஆண்டுவந்தன ரென்றுரைத்தல் ஐயுறற் பாலதே. ஆயினும், பாண்டியர்

எண்பத்தொன்பதின்மரும் பாண்டியர் ஐம்பத் தொன்பதின்மரும் ஒரே தொடர்ச்சியாக ஆண்டுவந்தனரென்று கருதாது, நடுவில் இடையீடுபட்டு அரசின்றிக் கழிந்த ஆண்டுகளும் இவ்வாண்டுகளுடன் கூட்டிக் கொள்ளப்பட்டிருத்தல் வேண்டுமென்று கருதுக. இவ்வாறு தலைச் சங்கமிருந்த நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டில் இடையீடுபட்டுக் கழிந்தன எத்துணை யாண்டுகளோ? இடைச் சங்கமிருந்த மூவாயிரத்தெழுநூற்றியாண்டில் இடையீடு பட்டுக் கழிந்தன எத்துணையோ? இவற்றிற்கும் ஒருவாறு உத்தேச வகையால் தக்க கணக்கிட்டுக் கொள்ளின் மேற்கூறிய பாண்டியர் எண்பத் தொன்பதின்மரும் பாண்டியர் ஐம்பத் தொன்பதின்மரும் ஆண்ட காலத்தின் அளவு குறைந்து நம்புதற் பாலதாகுமென்க. இத்துணை யுய்த்துணர மாட்டாத சிலர் வேறுபடக் கூறுவர்"[54]

என்பார். முதலிரு சங்கங்கள் பற்றி இவ்வாறு எழுதும் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி, கடைச் சங்கம் பற்றிய கூற்றைப் பின்வருமாறு எழுதுகிறார்.

"இக் கூற்றை யாராயு மிடத்துப் பாண்டியர் நாற்பத் தொன்பதின்மரும் ஆண்ட காலம் இடையீடுபட்டுக் கழிந்த காலத்தொடுங்கூடி ஆயிரத்தெண்ணூற் றைம்பதிற்றியாண்டாகின்றது. பாண்டிய ரொவ்வொருவரும் (இடையீட்டுக் காலத்தொடுங் கூட்டி) முப்பத் தெட்டாண்டுகள் அரசாட்சி செய்தவராகின்றனர். இது நம்புதற்பாற்றே"[55]

என்று இறையனார் களவியல் உரை குறிப்பிடும் சங்க வரலாறு நம்பிக்கைக்கு உரியது என மதிப்பிடுகிறார். மேலும்,

"தலைச் சங்கமிருந்த நாலாயிரத்து நானூற்று நாற்பது வருஷங்களும், இடைச்சங்கமிருந்த மூவாயிரத் தெழுநூறு வருஷங்களும், கடைச்சங்கமிருந்த ஆயிரத் தெண்ணூற்றைம்பது வருஷங்களுமாகக் கூடி ஒன்பதினாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூறு வருஷங்களாகின்றன. இதனை கி.பி. நூற்றிலிருந்து பிற்கணக்கிட்டுச் சென்றால் தலைச் சங்கம் கி.மு. ஒன்பதினாயிரத் தெண்ணூற்றுத் தொண்ணூறு வருஷங்கட்கு முன்னர்த் தாபிக்கப்பட்டிருத்தல் வேண்டும். தமிழ் மொழியின் தொன்மை மாட்சி கூறி வந்த விடத்துக், கி.மு. 8000 ஆண்டுகட்கு முற்பட்டு எழுத்துச்

சாதனங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள வென்றமையால் அதனினும் ஏறக்குறைய பத்தொன்பது நூற்றாண்டுகள் முன்னரே தலைச் சங்க மேற்பட்டுவிட்ட தென்றல் சாலாதென வாதித்தற்கும் இடமுண்டு. எனினும் காலாந்தரத்தில் ஆராய்ச்சிகளால் இவ்விடர்ப்பாடு களையப்பட்டு உண்மை வெளிப்பட்டு மேற்கூறிய கூற்றுக்கள் வலியுறினும் உறலாம்" [56]

என்று எழுதுகிறார். இவ்வாறு, சங்கம் பற்றிய வரலாறு குறித்து விரிவான விவாதம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிகழ்த்தப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. இதன் மூலம், சங்கம் பற்றிய வரலாற்றின் தேவை தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் அரசியலில் பெரிய இடம் வகித்திருப்பதை உணரமுடிகிறது எனலாம். தமிழரின் தொன்மை குறித்த ஆய்வுக்கும், சைவத்தின் பழமை குறித்த கருத்துக்கும், ஆரியக் கலப்பற்ற அரசியல் எனும் தனித்தன்மைக்கும், சமகால மக்களுக்கு வளமான பழைய தமிழகம் குறித்த கனவுகளை உருவாக்குவதற்கும் சங்கம் குறித்த கருத்தைத் துருவித் துருவி நிலைநாட்ட வேண்டிய தேவை தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினருக்கு இருந்ததை உணரமுடிகிறது.

### 3.6.11. அ. சிதம்பரனார்

சைவ எழுச்சியில் ஆர்வம் காட்டியவரான அ. சிதம்பரனார், 'தமிழ்ச் சங்கங்களின் வரலாறு' என்ற நூலில் 'சங்கம்' குறித்த செய்திகளை ஆராய்கிறார். சங்க வரலாற்றின் உண்மை குறித்து உணர்ச்சி நிலையில் நின்று பேசும் அவருடைய கூற்றுக் குறிப்பிடத் தக்கதாகும்.

"கடைச்சங்கப் புலவரான ஔவையாரும், தலையாளங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனும் கடைச் சங்கத்தைப் பற்றிப் பாடியிருப்பரேல், தமிழ்ச் சங்கம் நடைபெற்றதைப் பற்றி யாரேனும் ஐயம் கொள்ளுவார்களா? அப்படி கொள்ளுவார் ஆனால் அவர்களை என்னென்பது?

"உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையாய் வைக்கப் படும்" (குறள்-அரு)

என்னும் முதுமொழிக்கு இலக்காவான். அகம்-புறம் முதலிய தொகை நூல்களில், தமிழ்ச் சங்கங்களில் உறுப்பினர்களாயிருந்த புலவர்களுடைய பாட்டுக்களே உள்ளன. ஆதலின், சங்கங்கள் நடைபெற்றதைப் பற்றி ஐயுறக் காரணம் சிறிதும் இல்லை" [57]

என்று எழுதுகிறார். மேலும்,

"கடைச் சங்கம் அழிவெய்திய பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்த மாணிக்கவாசகர் (250-282A.D.) கடைச் சங்கத்தைப் பற்றிப் பேசுவாரானால், அவர் சொல்லிலும் ஐயம் உண்டோ? அவர் பாண்டியன் முதல் மந்திரியாய் இருந்து, கடைச் சங்கம் நடைபெற்று வந்ததற்கு ஆதாரங்களை அரசாங்க நூல் நிலையத்தில் இருந்து பார்த்தவர் அன்றோ? அதனால் அல்லவோ, "கூடலில் ஆய்ந்த ஒண் தீந்தமிழின், துறைவாய் நுழைந்தனையோ," என்று ஆனந்தக் கூத்தனைக் கேட்கிறார். ஆதலின், தமிழ்ச் சங்கங்கள் தமிழ்நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளாக, நடைபெற்று வருகின்றன என்பதற்கு ஐயம் கிடையாது"[56]

என்று குறிப்பிடுகிறார். இக் கூற்றுக்கள் சமய அடிப்படையிலான வாதமாகவும், உணர்ச்சி மிகுந்த கூற்றுக்களாகவும் அமைவதைக் காணமுடிகிறது.

'சங்கம்' என்பது தமிழ்ச்சொல் அன்று என்று கூறுபவர்களின் கருத்தை மறுத்து எழுதுகிறார் அ.சிதம்பரனார். இப்போது பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பியத்தில் தப்பாகப் பிரசுரிக்கப்பட்ட சூத்திரங்களை வைத்துக்கொண்டு 'சங்கம்' என்ற சொல் வடசொல் எனக் கூறுகின்றனர். உண்மையில் அது தமிழ்ச்சொல்லே என்று வாதிடுகின்றார். அவருடைய கூற்றாவது,

"க-த-ந-ப-ம எனு மாவைந்தெழுத்தும்
எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே.
சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அவை ஒள வெனும் ஒன்றலங் கடையே"
என்பதுதான் தொல்காப்பியர் சூத்தரித்தது.

ஆனால், இப்போது பதிப்பித்தவர்கள் இந்த ஒரு சூத்திரத்தை இரண்டு சூத்திரங்களாக்கி, கடைசி அடியை,

"அ-ஐ-ஒள- எனும் மூன்றலங் கடையே"
என்று பதிப்பித்துள்ளார்கள்.

ஏடு பெயர்த்து எழுதினவன் செய்த தவறானது பண்டிதர்களுடைய அறிவையே மயக்கிவிட்டது; தமிழ்நாட்டில் சங்கம் இருந்ததில்லை என்று தமிழுக்கு எதிரியாக உள்ளவர்கள் கூற ஒரு கருவியாக உபயோகப்படுகிறது"[59]

என்று எழுதுகிறார். மேலும்,

"தொல்காப்பியத்திலேயே இரண்டு சூத்திரங்கள் சகரத்தை மொழிக்கு முதலாக வைத்துச் செய்யப்பட்டுள்ளன. தொல்காப்பியர், "அ-ஐ-ஔ எனும் மூன்றலங் கடையே" என்று சூத்திரம் இயற்றி இருந்தால், அதற்கு முரணாகச் சகரத்தை மொழிக்கு முதலில் வைத்து இரண்டு சூத்திரங்கள் செய்வாரா? உன்னிப்பாருங்கள்"[60]

என்று கேட்கிறார். இவ்வாறு சைவ எழுச்சிப் பிரச்சாரத்திற்கு இயைந்த விதத்தில் சான்றுகளைத் தேடி வாதிடுவதைக் காணமுடிகிறது எனலாம்.

**3.6.12. கார்மேகக் கோனார்**

சங்கம் என்ற சொல்லைத் தமிழ்ச்சொல் என உரைக்கும் கார்மேகக் கோனார், மேற்கண்ட தொல்காப்பியச் சூத்திரத்தை ஏற்றுக் கொண்டு விடை பகருவார். அவருடைய கூற்றாவது,

"இனிச் சங்கம் என்னும் சொல் வடசொல் என்றும், அங்ஙனமாயின் தமிழ்ச் சங்கத்தைக் குறிக்க வழங்கிய சொற்கள் யாவை என்றும் உசாவுவர் சிலர். அங்ஙனம் உசாவுவதற்குக் காரணம், சகர ஒற்று, அ, ஐ, ஔ என்னும் மூவுயிரோடும் கூடி மொழிக்கு முதலில் தமிழ்மொழியில் வராது என்று உரைக்கும் தொல்காப்பிய விதி பற்றியேயாம் (எழுத்து:மொழிமரபு:சூத்:62). தொல்காப்பியர் காலத்து இச்சொல் வழக்கு இல்லாமையால் சங்கம் என்ற பொருளில், கடைச் சங்க நூல்களில் காணப்படும் நிலையம், புணர்ப்பு, அவை, கழகம், கூடல் முதலிய சொற்கள் வழங்கியிருக்கக் கூடும். கடைச்சங்க நூல்களுள் சகரத்தை முதலாகக் கொண்ட சவட்டுதல், சமழ்ப்பு, சந்து முதலிய சொற்களும் வழங்கப் பெற்றுள்ளமையின் அம்முறையில் பின்பு உண்டான தமிழ்ச்சொல்லே சங்கம் என்று கொள்ளினும் இழுக்காகாது. "புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க" என்று மணிமேகலை யாசிரியர் இச்சொல்லை எடுத்தாண்டிருத்தல் காண்க"[61]

என்பதாகும். இவ்வாறு கால வளர்ச்சி நிலையில் வளர்ந்த சொல் சங்கம் எனவும், அது தமிழ்ச்சொல்லே என்றும் விளக்குகிறார். இதே கருத்தை உடையவராகக் கே.கே.பிள்ளையும் விளங்குகிறார் 'சங்கம்' என்ற சொல் வடமொழிச் சொல் அன்று. அது பிற்கால வளர்ச்சி நிலையில் உண்டான சொல்லே எனக் குறிப்பிடும் கே.கே. பிள்ளை,

"சங்கம் என்ற பெயர் வடமொழியிலிருந்து வந்ததெனவும், ஆரியர் வட நாட்டிலிருந்து வந்து குடியேறிய பின்னரே தழைத்ததெனவும், கூறப்படுவது பொருத்தமற்றது. வச்சிரநந்தி தோற்றுவித்த சமணரது சங்கமே தமிழ்ச் சங்கம் என்ற கொள்கையும் ஒப்பத்தக்கதன்று. உண்மையில் தமிழ்ச் சங்கம் முதலில், 'கூடல்', 'மன்றம்' என்ற பெயர்களோடு திகழ்ந்திருக்கலாம். கி.பி. நான்காவது, ஐந்தாவது நூற்றாண்டுகளுக்குப் பின் வடமொழிச் செல்வாக்கு மிகுந்ததோடு தமிழர் கூடலுக்குச் சங்கம் என்ற பெயர் கற்பித்திருக்கக் கூடும். பாண்டியர்களுடைய கடுங்கோன், மாறன் சடையன் என்ற பெயர்களுக்குப் பின் இராஜ சிம்மன், சிரீமார சீவல்லப வரகுணவர்மன் என்ற பெயர்கள் வந்திருப்பதை இங்கு நோக்கலாம்" [62] என்கிறார்.

சங்கம் என்பது தமிழ்நிலையம் என வழங்கப்பெற்றதாகவும் விளக்குவார் கார்மேகக்கோனார். அவர்,

"சிறுபாணாற்றுப்படை மதுரையைப் பற்றிக் கூறுமிடத்து "தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின் மகிழ்நனை மறுகின் மதுரை" என்று குறிப்பிடுகின்றது. தமிழ் நிலை பெற்ற என்பதில் தமிழ்மொழி நிலைபெற்றிருந்ததென்னும் பொருள் தருவதன்றி தமிழ் நிலையம் என்னும் சங்கத்தின் பெயரே தமிழ்நிலை என்று குறையாக நின்ற தெனப் பொருள் கொள்ளவும் இடமிருத்தல் காண்க" [63]

என்று பாடலின் பொருளைத் தன் கருத்திற்கு ஏற்ப விளக்கம் கொடுத்து சைவ இயக்கத்தின் வளர்ச்சிக்கு அரண்சேர்ப்பதைக் காணமுடிகிறது. மேலும் கார்மேகக் கோனார்,

"தமிழ்கெழு கூடல் தன்கோல்வேந்தே" என்று புறநானூற்றிலும், "தமிழ் வையைத் தண்ணம் புனல்" என்று பரிபாடலிலும், "தென் தமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்" என மணிமேகலையிலும், இம்மதுரையைக் கூறுமிடமெல்லாம் தமிழோடு இணைத்தே கூறுவது அதன்கண் தமிழ்ச் சங்கம் இருந்த பெருமை பற்றியே யாம். அன்றியும்

சின்னமனூர்ச் செப்பேட்டில், "மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்" எனப் பாண்டியன் மெய்க்கீர்த்தியில் இம் மதுரைச் சங்கம் குறிப்பிடப்பட்டுள்ளது"[64]

என்று சங்கவரலாற்றை உறுதிப்படுத்துவதைக் காணமுடிகிறது. சங்கம் குறித்து இத்தனை வலிமையான விவாதம் நடைபெற்றிருக்கிறது. இதன் மூலம், அன்றைய தமிழ் மறுமலர்ச்சிக்கும், ஆரியக் கலப்பற்ற தமிழரின் கருத்தியலுக்கும் சங்க அரசியல் தேவைப்பட்டிருப்பதை உணர முடிகிறது எனலாம்.

**3.6.13 ந.சி. கந்தையா பிள்ளை**

சங்க வரலாற்றை உறுதிப்படுத்தும் ந.சி. கந்தையா பிள்ளையின் கூற்றுக் குறிப்பிடத்தக்கதாகும். முதலில் தலைச்சங்கம் குறித்து அவருடைய கருத்தைக் காணலாம்.

"சங்கம் 197 பாண்டியரால் ஆதரிக்கப் பட்டதென முன் கூறினோம். ஒரு அரசனின் ஆட்சிக் காலம் இருபது எனக் கொண்டால், 197 அரசனின் காலமும் 3940 ஆண்டுகளாகும். தென் மதுரையில் நடந்த சங்கம் 89 பாண்டியரால் ஆதரிக்கப்பட்டது. 89 பாண்டியரின் காலமும் 1780 ஆண்டுகளாகும். நாம் 3940 ஆண்டிலிருந்து 1780 ஆண்டுகளைக் கழித்தால் மீந்திருப்பன 2160 ஆண்டுகளாகும். இக்காலத்தில் தென் மதுரையைக் கடல் கொண்டிருக்கலாம். இக் கணக்கு கி.மு. 2105-ல் பெரிய வெள்ளப்பெருக்கு உண்டானது எனக் கூறும் யூதரின் காலக் கணக்கோடு ஏறக்குறைய ஒத்திருக்கின்றது. ஆகவே கி.மு. 3940ல் தலைச் சங்கம் தொடங்கிற்று எனக் கூறலாம்"[65]

என்று எழுதுவார். மேலும் தலைச் சங்கத்தை உறுதிப்படுத்தும் ந.சி.கந்தையாபிள்ளை,

"கி.மு. 3500-ல் சிந்துவெளித் தமிழரின் நாகரிகம் உச்சநிலையில் இருந்ததென்பதையும், அக்காலத்தில் இந்தியாவுக்கும், மேற்கு ஆசிய நாடுகளுக்கும், எகிப்துக்கும் வாணிகத் தொடர்பு இருந்த தென்பதையும் நோக்கும்போது, இது நிகழக்கூடாத ஒரு செயல் என நாம் நினைக்கமாட்டோம்"[66]

என்கிறார். இடைச்சங்கம் பற்றிச் சான்றாதாரங்களைத் தரும் ந.சி. கந்தையா பிள்ளை,

"தென் மதுரை, கடலுள் மறைந்து போகக் கபாடபுரம் பாண்டியரின் தலைநகரமாயிற்று. அங்கு இரண்டாவது சங்கம் நடைபெற்றது. இராமாயண காலத்தில் பாண்டியரின் தலைநகர் கபாடபுரமாக விருந்ததெனத் தெரிகின்றது. கபாடபுரம் தாம்பிரவர்ணி முகத்து வாரத்திலுள்ளது. இச்சங்கத்தை 59 பாண்டியர் ஆதரித்தனர். இவர்களின் ஆட்சிக் காலம் 1180 ஆண்டுகளாகும். ஆகவே, இரண்டாவது சங்கத்தின் இறுதிக் காலம் கி.மு. 980 வரையிலாகும். மூன்றாம் சங்கத்தின் ஆரம்பமும் இதுவேயாகும். கபாடபுரம் கடலால் அழிக்கப்பட்டதெனப் படுகின்றது. கபாடபுரத்தை ஆண்ட கடைசி அரசனே கூடலை அமைத்தான்" [67]

என்று குறிப்பிடுகிறார். கடைச்சங்கத்தைப் பற்றிக் கூறும்போது,

"மூன்றாவது சங்கம் 49 பாண்டியரால் ஆதரிக்கப்பட்டது. இவர்களின் காலம் 980 வரையில் இடைச் சங்க காலம் எனக் குறிக்கப்பட்ட கி.மு. 980லிருந்து 980 ஆண்டுகளைக் கழிக்க, கிறித்துவ ஆண்டின் தொடக்கம் ஆகின்றது. கபாடபுரம் கடல் வாய்ப் படுவதற்கும் மதுரைநகர் அமைக்கப்படுவதற்கும் சிலகாலம் ஆகியிருக்கலாம். ஆகவே கி.பி.30 முதல் கி.பி.50 வரையில் கடைச்சங்கத்தின் இறுதிக் காலம் எனக் கொள்ளுதல் பொருத்தமாகின்றது" [68]

என்று எழுதுகிறார். தமிழ்த்தொன்மையையும், சைவத்தின் மாண்பையும் நிலைநிறுத்தும் நோக்கத்தின் படி இவருடைய காலக்கணக்கு அமைவதைக் காணமுடிகிறது.ந.சி. கந்தையா பிள்ளை, தமிழ் இந்தியா என்ற தமது மற்றொரு நூலில் சங்கம் பற்றிய காலக்கணக்கை வேறு விதமாகக் குறிப்பிடுவார். வட மொழி புராணங்கள் கற்பனைக் கலப்பு மிகுந்தவை என்றும், தமிழ்ப்புலவர்கள் உள்ளதை உள்ளவாறு கூறும் இயல்புடையவர்கள் என்றும் தாம் சார்ந்த சைவ இயக்கத்துக்கு ஏற்ப விளக்கம் அளிக்கிறார். அவருடைய கூற்றாவது,

"புராணங்களில் உண்மை அணுவளவும் பொய் மலையளவும் காணப்படுவதை நோக்கிய சில ஆராய்ச்சியாளர் தமிழ்ப் புலவர்கள் கூறியுள்ள வரலாற்றுண்மைகளிலும் ஐயம் உறுகின்றனர். புராணங்களிலுள்ள கற்பனைக் கதைகளுக்குப் பொறுப்பு பிராமணரேயன்றித் தமிழ்ப் புலவர்களல்லர் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டால், இம்மயக்கம் எழ வாய்ப்பில்லை. தமிழ்ப் புலவர்கள் உள்ளவற்றை

உள்ளவாறே கூறும் இயல்பினரென்பது சங்கச் செய்யுட்களாற் தெளிவுறும். 'இராமர் 11 ஆயிரம் ஆண்டு அரசு புரிந்தார், தசரதன் அறுபதினாயிரம் ஆண்டு உயிர் வாழ்ந்தான்' என இயற்கைக்கு மாறான எதையும் இறையனார் களவியலுரை கூறாமை கருத்திற் பதிக்கத்தக்கது. கெரதோதக ஆசிரியர் ஓர் அரசனுக்குள்ள சராசரி காலம் 33 ஆண்டுகள் எனக் கணக்குச் செய்துள்ளார். மூன்று சங்கங்களும் நடைபெற்ற காலத்தில் இருந்த அரசரின் எண் 197. இவ்வரசர் ஒவ்வொருவருக்கும் முப்பது ஆண்டுகள் ஈந்தால் 5970 ஆண்டுகளாகும். இவ்வாண்டுகள் சந்திர அளவின்படி கணக்குச் செய்து சூரிய ஆண்டாக்கின் 5470 வரையிலாகும். இறையனார் களவியலுரையில் மூன்று சங்கங்களும் 9990 ஆண்டுகள் நடைபெற்றனவாகக் கூறப்பட்டுள்ளது. பழைய காலக் கணக்குகளில் இவ்வாறு சில பிழைகள் நேர்தல் இயல்பு"[69]

என்பதாகும். இவ்வாறு 'சில பிழைகள் நேர்தல் இயல்பு' என எளிதில் மறுத்து விட்டு தாம் சார்ந்த இயக்கத்தின் அரசியலுக்குத் தேவையான சங்க வரலாற்றை உறுதிப்படுத்துவதைக் காணமுடிகிறது.

### 3.6.14. ம.ரா.போ. குருசாமி

சைவ இயக்கச் சார்புடையவரான ம.ரா.போ. குருசாமி 'சங்க காலம்' என்ற நூலில் சங்கம் குறித்த செய்திகளை ஆய்வுக்கு உட்படுத்துகிறார். அதன் காரணமாகச் சங்கம் என்ற அமைப்புக் கட்டாயம் இருந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறார். அவருடைய கூற்றாவது,

"இறையனார் களவியல் உரை கூறுகின்ற செய்திகளில் ஏறுமாறுகளும் புனைந்துரைகளும் மிகைப்படக் கூறலும் மிகுந்துள்ளன என்பது ஏற்றுக்கொள்ள வேண்டிய ஒன்றே ஆயினும் களவியலுரைக் கூற்றுக்கள் அடிப்படையே இல்லாத பொய்கள் என்று கூறிவிடுதல் முற்றிலும் பொருந்தாத ஒன்றாகும். பழைய நூற்சான்றுகளையும், இடைக்காலத் தெழுந்த இலக்கியச் சான்றுகளையும், ஒருங்குவைத்து நோக்குவோமாயின், சங்கம் இருந்ததற்கான சான்றுகள் பல கிடைக்கின்றன. சங்கம் என்னும் அமைப்பு இருந்ததில்லை என முன்னோர் எவரேனும் கருதியிருப்பின் ஓரிடத்தேனும் அச்செய்தி காணப்படுதல் வேண்டும். சங்கம் இருந்தமைக்குரிய சான்றுகள் தவிர, அதன் உண்மையை மறுக்கும் சான்று ஒன்று

கூடக் காணக் கிடைக்கவில்லை. எனவே, இறையனார் களவியலுரை கூறுகின்ற அமைப்பிலே சங்கங்கள் இல்லாமல் இருந்திருக்கலாம்; ஆனால், சங்கம் என்னும் அமைப்புக் கட்டாயம் இருந்திருக்க வேண்டும்"[70]

என்பதாகும். தொடர்ந்து,

"... பிரஞ்ச்சு அக்காடமி என்று மேலைநாட்டில் அமைந்தது போல, மொழி நலம் பேணுதற்கேற்ற ஒரு தனித்த அமைப்பு, தமிழகத்தே இருந்திருக்க வேண்டும். அவ்வமைப்பினைத் தமிழகத்து ஏனை மன்னர்களைவிடப் பாண்டியர்கள் மிகுதியாகப் பேணி வந்திருக்கிறார்கள். ஆதலினால் தான் 'பாண்டிய நின் நாட்டுடைத்து நல்ல தமிழ்', 'முத்தும் முத்தமிழும் தந்து முற்றலால் ' என்றெல்லாம் பலவாறு தமிழோடு பாண்டிய நாடு இணைத்துப் பேசப் பெறுகின்ற மரபு ஏற்பட்டது"[71]

என்ற முடிவுக்கு வருவதைக் காணமுடிகிறது.

### 3.6.15. தமிழர்க்கான சமயத்தைக் கட்டுதல்

தமிழர்க்கான சமயம் குறித்து எழுதிய ம.ரா.போ.குருசாமி, சங்க காலச் சமுதாயத்தில் சமயம் சிறப்பிடம் பெற்று விளங்கியதாகக் குறிப்பிடுகிறார். அவருடைய கூற்றாவது,

"வாழ்க்கையில் தெய்வ வழிபாட்டிற்குச் சிறப்பான இடம் அளிக்கப்பட்டிருந்தது. ஆகையால்தான் பாடுவது அகப் பொருளாயினும் இறைவனைப் பற்றிய குறிப்புக்கள் தெய்வத் தொடர்பான புராணக் கதைகள் முதலியன இடம்பெறுவதைக் காண்கின்றோம். பாடுவது வீரத்தைப் பாராட்டியதானாலும் "முருகு ஒத்தீயே முன்னியது முடித்தலின்" எனவும், நெல்லிக்கனி ஈந்ததைப் போற்றுவதாயினும் "நீல மணி மிடற்றொருவன் போல மன்னுக" எனவும் தெய்வ இணைப்புடன் புலவர்கள் பாடுகின்றனர். மேலும் இல்லில் தெய்வங் கொண்டாடுதல் (பட்டினப்பாலை 159-160), ஆல மரத்தில் தெய்வம் உறைவதாக நம்புதல் (புறம் 199) போன்ற குறிப்புகள் சங்க காலச் சமுதாயத்தில் சமய ஊற்றம் பெற்றிருந்த நிலையினைத் தெளிவுறுத்த வல்லன"[72]

என்பதாகும். இவ்வாறு சைவத்தின் தொன்மையைக் குறிக்கும் நோக்கில் எழுதுவதைக் காணமுடிகிறது.

பழந்தமிழரின் சமயம் குறித்து ஆராந்த மயிலை. சீனி. வேங்கடசாமியின் கருத்துக் குறிப்பிடத்தக்கதாகும். அவர், கி.மு. 8-ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்திய தெய்வ வழிபாட்டை ஆராய்கிறார். இந்தக் காலக் கட்டத்துச் சமயத்தைத், தனித் தமிழ்ச் சமயம் என்றும், ஆரிய (வட இந்திய) கலப்புள்ள சமயம் என்றும் இரண்டாகப் பிரிக்கிறார். தனித்தமிழ்ச் சமயம் என்பது ஆரியக் கலப்பற்ற கி.மு. 3ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சமயம் என்றும், ஆரியக் கலப்புள்ள சமயம் என்பது கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட சமயம் என்றும் குறிப்பிடுகிறார். வட இந்தியச் சமயங்கள் தமிழகத்துக்கு வருவதற்கு முன்னே எழுதப்பட்ட நூலாகையால் தொல்காப்பியத்தில் கூறப்பட்ட தெய்வங்கள் தனித் தமிழ்த் தெய்வங்களாகும் என்கிறார். இத் தெய்வ நிலையை விரிவாகக் கூறும்போது,

> "கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியான கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வட இந்தியாவிலிருந்து சமணம், பௌத்தம், வைதிகம் ஆகிய சமயங்கள் தமிழகத்துக்கு வந்து சமண பௌத்த மதங்களைப் பிரசாரம் செய்தன. பௌத்த மதமும், சமண சமயமும், வைதிகப் பிராமண சமயத்துக்குப் பிறவிப் பகையுள்ள மதங்கள். வைதிக சமயம் தன்னுடைய பாதுகாப்புக்காகத் தன்னுடைய வைதிக சமயத் தெய்வங்களைத் திராவிடத் தெய்வங்களோடு சார்த்தி இணைத்துக் கொண்டது. இதைத்தான் நாம் சங்க நூல்களிலிருந்து அறிந்து கொள்கிறோம்" [73]

என எழுதுகிறார். இவ்வாறு ஒரு புறம் தமிழறிஞர்கள் தாம் எழுதும் நூல்களில் தமிழர்க்கான சமயத்தைக் கட்டமுயன்ற அதே வேளையில், அதற்கு எதிராக இந்து மதம் சார்ந்து தமிழர் சமயத்தை விளக்கினர் இந்தியத் தேசிய வாதிகள். சான்றாக, தமிழரின் சமயம் குறித்து ஆராயும் வையாபுரியார் வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் ஆதி காலம் தொட்டே தொடர்பு இருந்து வருவதாகக் குறிப்பிடுகிறார். 'மாயோன் மேய ' எனத் தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவைக் குறிப்பிட்டு விளக்கும் போது,

"இங்கே மயோன் என்றது கிருஷ்ணன், சேயோன் என்றது முருகக் கடவுள், வேந்தன் என்றது இந்திரன். இத்தகைய தெய்வங்களில் முருகன் தவிர பிறர் எல்லாம் வடநாட்டுத் தெய்வங்கள் என்பது நாம் அறியத் தக்கது. இதனால் ஓர் உண்மை விளங்குகிறது; தெய்வக் கொள்கையோடு வடநாட்டிற்கும் தென்னாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு ஆதிகாலம் முதற்கொண்டே இருந்து வந்திருக்கிறது என்பதே அவ்வுண்மை" [74]

என்றெழுதுகிறார். இவ்வாறு தமிழரின் சங்கம் குறித்தும், சமயம் குறித்தும் பல்வேறு விவாதங்கள் சமய மறுமலர்ச்சி இயக்கங்களின் தோற்றத்தால் நடைபெற்றன. இதன் காரணமாகச் சங்கம், சங்க காலம், சங்க இலக்கியம் முதலான கருத்துக்கள் தமிழ் மண்ணில் நிலைபெற்றன. சங்க இலக்கியம் புது விளக்கம் பெற்றது. சங்க இலக்கிய ஆய்வுகள் தொடர்ந்து நடைபெற்றன எனலாம்.

### 3.7. கருத்துரை

1. இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் உருவான சமய மறுமலர்ச்சி இயக்கங்கள், சமயத்தின் பெயரால் ஒன்றுபட்ட இந்தியாவின் உருவாக்கத்திற்குத் துணைபுரிந்தன. இவற்றில் குறிப்பிடத்தக்கன, பிரம்ம சமாஜம், பிரார்த்தனை சமாஜம், ஆரிய சமாஜம், இராமகிருஷ்ணா மிஷன், பிரம்ம ஞான சபை முதலானவையாகும்.

2. இந்தியா முழுவதும் இந்து மதத்தின் பெயரால் சமய எழுச்சி ஏற்பட்டபோது, தமிழகத்தில் சமய எழுச்சியின் தன்மை வேறாக இருந்தது. இங்குச் சைவ எழுச்சி மேற்கிளம்பித், 'தமிழர்க்கான மதம் சைவ மதம்' என்ற கருத்தியல் நிலைநிறுத்தப்பட்டது.

3. இவ்வாறு, மேற்கிளம்பிய சமய எழுச்சியானது சங்க இலக்கிய ஆய்வுகளிலும் தொழிற்பட்டது. அதன் காரணமாக இந்துமத அடிப்படையிலும், சைவ மத அடிப்படையிலும் சங்க இலக்கியம் விளக்கப்பட்டது.

4. 'சங்கம்' என்ற அமைப்புடன் தொடர்புடைய செய்திகள் சைவ மதத்துடன் இணைத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றில் கூறப்பட்டுள்ளதால், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களுக்கு அக்கருத்துப் பெரிதும் உதவியது. இதனால் 'சங்கம்' என்ற அமைப்பின் உண்மை இன்மை பற்றிய ஆய்வுகள் பெருமளவில் வெளிவந்தன.

5.சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் தங்களுக்குத் தேவையான கருத்தாக்கங்களைப் புனைவதற்குச் சங்க இலக்கியத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டன. இவ்வாறு ஆராய்ந்ததன் மூலம், 'எவ்வளவு தொன்மையான இலக்கியங்களையும் கூடத் தன் காலத் தேவைக்குத் தகுந்தவாறு வாசித்துப் பொருள்காண முடியும். அவ்வாறு காண்பதன் மூலம் அந்த இலக்கியத்திற்கு நிரந்தரத் தன்மையை வழங்க முடியும்' என்ற ஆய்வேட்டின் கருதுகோள் விளக்கம் பெறுகிறது எனலாம். அடுத்த இயலில், தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் சங்க இலக்கியதை ஆராய்ந்த நிலையை விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

## அடிக்குறிப்புக்கள்

1. எரிதழல், பண்பாடும் புரட்சியும், ப. 42
2. க. பஞ்சாங்கம், அதிகார அமைப்புகளும் கலகக் குரல்களும், அச்சில் வெளிவராத கட்டுரை, ப. 9
3. எஸ்.வி.ராஜதுரை, இந்து இந்தி இந்தியா, பக். 41,42
4. மேலது., ப. 42
5. பெ.சு. மணி, இந்திய தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 102
6. மேலது., ப. 91
7. மேலது., ப. 267
8. மேலது., ப. 133
9. எஸ்.வி. ராஜதுரை, மு.நூ., ப. 46
10. பெ.சு. மணி, மு.நூ., பக். 77,78
11. மேலது., ப. 75
12. மேற்கோள், க. பஞ்சாங்கம், சிலப்பதிகாரத் திறனாய்வுகள்-ஒரு பார்வை, ப. 61
13. மேலது., ப. 61
14. பெ.சு. மணி, மு.நூ., ப. 272
15. கவிதாசரண், அக்டோபர்-நவம்பர், 1997, ப. 66
16. அ. மார்க்ஸ், திராவிட இயக்கப் பாரம்பரியத்தில் 'தமிழர்கள்' கவனத்தில் கொள்ள வேண்டிய சில வரலாற்று உண்மைகள், அ. மார்க்ஸ், மற்றும் சிலர், (தொகு.ஆசி.), தேசியம் ஒரு கற்பிதம், ப. 143
17. ராஜ் கௌதமன், பார்ப்பனரும் வேளாளரும் தமிழரும், மேலது., ப. 168
18. இரா. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம், தமிழ்ப்பேராசிரியர்கள், (தொகு.), தமிழ் ஆராய்ச்சி வரலாறு முதல் தொகுதி, ப. 69
19. அ. மார்க்ஸ், திராவிட இயக்கப் பாரம்பரியத்தில் 'தமிழர்கள்' கவனத்தில் கொள்ள வேண்டிய சில வரலாற்று உண்மைகள், அ. மார்க்ஸ், மற்றும் சிலர், (தொகு. ஆசி.), மு.நூ., ப. 144
20. கவிதாசரண், அக்டோபர் - நவம்பர், 1997, ப. 67
21. பி.டி. சீனிவாச ஐயங்கார், தமிழர் வரலாறு, பக். 361,362
22. மேற்கோள், தமிழ்ப்பொழில், ஆகஸ்டு-செப்டம்பர், 1987, ப. 205
23. கோ. கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப. 139
24. கா. சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப. 65
25. மேலது., ப. 65

26. மயிலை. சீனி. வேங்கடசாமி, பழந்தமிழும் பல்வகைச் சமயமும், ந. சஞ்சீவி, (பதி.ஆ.), பல்கலைப் பழந்தமிழ், ப. 28
27. கா. சிவத்தம்பி, தனித் தமிழியக்கத்தின் அரசியற் பின்னணி, ப. 25
28. இராம. சுந்தரம், ஆராய்ச்சி, (தொகு.), முற்போக்கு இலக்கியத்திறன், ப. 74
29. இராபர்ட். கால்டுவெல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், ப. 63
30. மேலது., ப. 64
31. மேலது., ப. 69
32. மேலது., ப. 153
33. கு. திருமாறன், தனித்தமிழியக்கம், ப. 115
34. மேலது., ப. 116
35. மேலது., ப. 91
36. மேற்கோள், ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப. 29
37. ம.ரா.போ. குருசாமி, சங்க காலம், மு. வரதராசனார், முன்னுரை, ப. இ
38. கோ. கேசவன், மு.நூ., ப. 143
39. மேலது., ப. 143
40. கே.ஏ. நீலகண்டசாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, ப. 185
41. பி.டி. சீனிவாச ஐயங்கார், தமிழர் வரலாறு, ப. 335
42. மேலது., ப. 341
43. மேலது., ப. 368
44. மேலது., ப. 344
45. மேலது., ப. 354
46. மேற்கோள், கோ. கேசவன், மு.நூ., ப. 99
47. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், தொகுதி I, ப. 32
48. மேலது., ப. 32
49. மேலது., பக். 32,33
50. மேலது., ப. 33
51. கே.கே. பிள்ளை, தென்னிந்திய வரலாறு, முதற்பகுதி, பக். 65,66
52. தமிழ்ப்பொழில், ஆகஸ்டு - செப்டம்பர், 1987, ப. 197
53. வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி, தமிழ் மொழியின் வரலாறு, பக். 48,49
54. மேலது., ப. 49

55. மேலது., பக். 50,51

56. மேலது., ப. 51

57. அ. சிதம்பரனார், தமிழ்ச் சங்கங்களின் வரலாறு, ப. 5

58. மேலது., ப. 5

59. மேலது., ப. 7

60. மேலது., ப. 8

61. ஆ. கார்மேகக் கோனார், தமிழ்ச்சங்க வரலாறு, பி.டி. இராசன், (தொகு.ஆ.), மதுரைச் தமிழ்ச்சங்க மலர், பக். 12,13

62. கே.கே. பிள்ளை, பழந்தமிழ் இலக்கியங்கள் காட்டும் சமூக வரலாறு, ந. சஞ்சீவி, (பதி.ஆ.), மு.நூ., ப. 72

63. ஆ. கார்மேகக் கோனார், தமிழ்ச் சங்க வரலாறு, பி.டி.இராசன், (தொகு.ஆ.), மு.நூ., பக். 11,12

64. மேலது., ப. 12

65. ந.சி. கந்தையா பிள்ளை, முச்சங்கம், ப. 15

66. மேலது., ப. 16

67. மேலது., ப. 16

68. மேலது., ப. 17

69. ந.சி. கந்தையா பிள்ளை, தமிழ் இந்தியா, ப. 275

70. ம.ரா.போ. குருசாமி, சங்க காலம், ப. 11

71. மேலது., ப. 11

72. மேலது., ப. 76

73. மயிலை. சீனி. வேங்கடசாமி, பழந்தமிழும் பல்வகைச் சமயமும், ந. சஞ்சீவி, (பதி.ஆ.), மு.நூ., ப. 28

74. எஸ். வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், பக். 67,68

இயல் : நான்கு



# தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளும்

## தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

4.0. ஆங்கிலக் கல்வியும், கிறித்துவத் தந்தைமார்களின் இலக்கண இலக்கிய ஆய்வுகளும், பழம்பெரும் தமிழ்நூல்களின் அச்சேற்றமும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்கள் தோன்றுவதற்குக் காரணங்களாக அமைந்தன. இம் மறுமலர்ச்சி இயக்கங்கள், பழந்தமிழ் நூல்களில் பெருமை தேடின. அவ்வாறு தேடித் தொகுத்த பெருமைகளைத் தங்கள் இயக்கங்களின் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டன. அந்த வகையில் சங்க இலக்கியம், பிராமண எதிர்ப்பு இயக்கங்களுக்கு மூல ஆற்றலாக இருந்து செயல்பட்டுள்ளதையும், அவ்வாறு செயல்பட்டதன் காரணமாக இந்நூற்றாண்டின் புதிய மதிப்பீடுகளுக்கு ஏற்ப விளக்கம் பெற்றுள்ளதையும் ஆராயும் முயற்சி இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது.

அதற்கு உதவும் வகையில், 'கிருத்துவத் தந்தைமார்களின் ஆய்வுகள் - பிராமண எதிர்ப்பு இயக்கம் - சமூக, அரசியல் தளத்தில் பார்ப்பனர் அல்லாதார் என்ற அடையாளம் - தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் - நீதிக்கட்சி-சுயமரியாதை இயக்கம்-திராவிடர் கழகம் உருவாதல்-தனித்தமிழ் இயக்கம்-தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்' முதலான உட்தலைப்புக்களில் விளக்கப்படுகின்றது.

### 4.1. கிறித்துவத் தந்தைமார்களின் ஆய்வுகள்

இந்தியா முழுவதும் சமூக அரசியல் தளத்தில் பார்ப்பனர்களின் ஆதிக்கம் வலுவாக இருந்த நேரத்தில், தமிழகத்திலும் பார்ப்பனர்களின் செல்வாக்கு உயர்ந்திருந்தது. அதன் காரணமாகப் பார்ப்பனக் கருத்தியலே அனைத்துத் துறையிலும் மேல்நிலையில் இருந்தது. மொழி பற்றிய பார்வையிலும் வடமொழி உயர்ந்தது; தமிழ் தாழ்ந்தது என்ற கருத்தியல் பரவலாகக் காணப்பட்டது. ஆரியன், தமிழன் என்ற உணர்வு சமயக் காலத்திலேயே காணப்படுகிறது. 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய் என்பது திருநாவுக்கரசர் தேவாரம். இங்கே வடமொழியாளர் என்ற பொருளில் ஆரியன் என்ற சொல் கையாளப்பட்டுள்ளது. இதன் மூலம் வட மொழியாளர்Xதமிழர் என்று வேறுபடுத்திப் பார்க்கும் போக்கு நீண்ட நாட்களாக இருந்து வருவதைக் காணமுடிகிறது.[1]

'தமிழ்ச் சொல்லிற்கெல்லாம் வடசொல்லே தாயாகி நிகழ்கின்றது' என்றார் வீர சோழிய உரைப் பெருந்தேவனார். 'தமிழ்ச்சொல் வடபாடைக் கண் செல்லாது. வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொது' என்றார் சேனாவரையர். 'வடசொல் ஒரு நிலத்திற்கே உரித்தன்றிப் பதினெண் நிலத்திற்கும் விண்ணிற்கும் புவனாதிக்கும் பொதுவாய் வருவது' என்றார் இலக்கண விளக்க வைத்தியநாத தேசிகர். 'ஐந்தெழுத்தாலான ஒரு பாடை' எனத் தமிழைத் தாழ்த்தினார் இலக்கணக்கொத்து ஈசான தேசிகர்.[2] இப்படித் தமிழைத் தாழ்த்திப் பேசும் போக்குத் தமிழறிஞர்களைக் கொதிப்படையச் செய்ததுடன் அவர்களை எதிரிடையாகச் செயல்படவும் செய்தது.

இச்சமயத்தில்தான் ஐரோப்பிய அறிஞர்களின் மொழி, பண்பாடு பற்றிய ஆய்வு நூல்கள் வெளிவரத் தொடங்கின. கால்டுவெல் இயற்றிய, 'எ கம்பரேட்டிவ் கிராமர் ஆப் தி திராவிடியன் லாங்வேஜஸ்', கிரயர்சன் எழுதிய, 'தி லிங்குவிஸ்டிக் சர்வே ஆப் இண்டியா', எச்.எச். ரிஸ்லி எழுதிய, 'தி டிரைப்ஸ் அண்ட் கேஸ்ட்ஸ் ஆப் சௌத் இண்டியா', முதலான ஆங்கில நூல்கள், தமிழறிஞர்களை விழிப்படையச் செய்ததுடன் தமிழ்மொழி பற்றிய புதிய வெளிச்சங்களைத் தந்தன.

## 4.2. வடமொழி ஆதிக்க எதிர்ப்பு இயக்கம்

முதல் உலகப் பெரும்போர் ஏற்பட்ட நேரத்தில் ஆங்கிலேயர்கள் இந்தியரின் ஒத்துழைப்பை நாடினார்கள். "அந்த நிலையைப் பயன்படுத்திப் பார்ப்பனச் சமூகம் தனது மரபார்ந்த ஆதிக்கத்தை நிலைநாட்டப் பல தளங்களில் இயங்கத் தொடங்கியது. ஒரு பகுதி வெள்ளைக்காரனோடு சேர்ந்து ஆட்சிப் பீடத்தை இறுகப் பிடித்துக் கொண்டது. மற்றொரு பகுதி அன்னிபெசண்ட் அம்மையார், தலைமையில் தொடங்கிய 'சுய ஆட்சி' இயக்கத்தில் இடம்பிடித்துக் கொண்டது."[3]

1885 இல் தோன்றிய இந்தியத் தேசிய இயக்கம் 1885 முதல் 1905 வரை இருபது ஆண்டுக் காலம் அரசுப் பணிகளில் இடம் வேண்டுவது அரசு வாழ்த்துப் பாடுவது என்றிருந்த நிலையிலிருந்து மாறி அந்நியராட்சிக்கு எதிரான இயக்கமாக மலர்ந்தது.[4] இங்ஙனம் அரசியலில் முற்போக்குத் தன்மை பெற்ற இந்தியத் தேசிய இயக்கம், சமூக நடவடிக்கைகளில் மிகப் பிற்போக்குத் தன்மை கொண்டிருந்தது.

இக்காலத்தில் பிரம்ம சமாஜத்தினரும், 1875 இல் உருவாக்கப்பட்ட இறைநெறிக் கழகத்தினரும், அன்னிபெசண்டின் தன்னாட்சி இயக்கத்தினரும் "இந்தியா வேதப் பெருமையுடைய நாடு, இந்திய மதம் என்பது ஆரிய மதம், வடமொழி உயர்வானது"[4] என்ற அடிப்படையில் இந்தியத் தேசியம் பற்றிய கருத்துக்களை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

ஆல்காட்டும், பிளாவட்ஸ்கி அம்மையாரும் திருநெல்வேலியில் பார்ப்பனர்களிடம் பெற்ற ஆதரவு, சைவ வேளாளர்களை எதிரிடையாகச் செயல்பட வைத்தது. 1883- இல் தூத்துக்குடிச் சைவ சபையும், 1886-இல் பாளையங்கோட்டைச் சைவ சபையும் தொடங்கப் பெற்றன. பிரம்ம சமாஜியாக இருந்த மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை திருவனந்தபுரம் சைவ சபையைத் தொடங்கக் காரணமானவர்களில் ஒருவரானார்.'திராவிடம்' என்ற சொல்லோடு, 'வடமொழி செத்த மொழி, தமிழ் வாழும் மொழி' என்ற கருத்தையும் முன்வைத்தார்.[6] இப்படியாகத் தமிழகத்தில் பிராமண எதிர்ப்பு இயக்கம் உருவாவதற்கான சூழல் வந்து வாய்த்தது.

### 4.3. சமூக, அரசியல் தளத்தில் பார்ப்பனர் அல்லாதார் என்ற அடையாளம்

தமிழின் மேன்மையை எடுத்துச் சொல்லவும் சைவத்தின் சிறப்பினைப் பேசவும் சி.வை. தாமோதரம்பிள்ளை, கனகசபைப் பிள்ளை, ஜே.எம். நல்லுசாமிப் பிள்ளை, ஞானியார் அடிகள், மறைமலை அடிகள் என 'இந்தியத் தேசியத்திற்கு' வெளியில் தமிழ் அறிவாளிகள் செயல்படத் தொடங்கினர். இதன் காரணமாகப் பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதார் என்ற அடையாளம் தமிழகத்தில் உருவாக ஆரம்பித்தது.

1885-இல் அயோத்திதாசப் பண்டிதர் 'திராவிடம்' என்ற சொல்லைச் சமூக அரசியல் தளத்தில் வலிமையாக முன்வைத்துப் பார்ப்பனர் அல்லாதார் என்ற அடையாளத்தை உருவாக்கினார்.[7] இதற்கு இந்து சமய அடிப்படையிலான பார்ப்பனர்களின் செயல்கள் காரணமாக அமைந்தன.

பிராமணர் அல்லாதார் என்ற அடையாளம் உருவாக அயோத்திதாசர் தொடர்ந்து போராடிக் கொண்டிருந்தார். பிராமணர்கள் கடுமையாகவும், மிகக் கொடுமையாகவும் நடந்துகொண்ட சூழலை விளங்கிக் கொள்ள தமிழன் பத்திரிகைக்குத் தாழ்த்தப்பட்டவர்கள்

அனுப்பிய கடிதம் சரியான சான்றாகிறது. பார்ப்பனர்களின் பல்வேறு தொந்தரவுகளைக் குறிப்பிட்டுள்ள அக்கடிதத்தின் இறுதிப் பகுதியில்,

"எங்களை வாதை செய்வதின் காரணம் நாங்கள் நாளுக்கு நாள் சொந்த பூமியும் பயிரிடுஞ் சமுசாரிகளாகிவிடுகிறோம் என்றுதான். அன்றியும் சர்க்கார் தீர்வை(க்) கட்டப்போனால் அக்கிராரத்தைச் சுற்றிச் சுற்றி வரவேண்டியதாயிருக்கிறது. அப்படி அவதிப்பட்டு(ப்) பணம் வைத்துக்கொண்டு முன்சீப் ஐயரைக் கண்டால் அவர் வாங்கிக் கொள்ளாமல் கௌண்டனென்னுஞ் சாதியான் மூலமாய்(ப்) பெற்றுக் கொள்வது வழக்கம். இதுவும் தவிர போஸ்ட் பெட்டியை அக்கிராரத்துக்குள் வைத்துக் கொண்டிருப்பதால் எங்கள் அவசரக் கடிதங்கள் தாமதப்பட்டுப் போகிறது. இப்படி(ப்) பிராமணாளிடத்தில் பலவித ஹிம்சைகளை அனுபவித்து வரும் எங்களைக் கருணைதங்கிய பிரிட்டீஷ் கவர்மெண்டார் முன்னுக்குக் கொண்டுவரும் படியாயும், கனந்தங்கிய (தமிழன்) பத்திராதிபர் எங்கள் இடுக்கண்களை(க்) கவனித்து(க்) காருண்ணிய கவர்மெண்டாருக்கு(த்) தெரியப்படுத்தவும் இதனடியில் கையொப்பமிட்ட யாங்கள் தெரிவித்துக் கொண்டோம்.

எங்களுக்குள் வரதனென்பவன் இந்த எடஞ்சல்களைப் போய்(க்) கேட்டதின் பேரில் நாலு பாப்பார்கள் அவனைக் கல்லாலும், தடியாலும் அடித்து உதிரமே வரச்செய்துவிட்டார்கள். அவன் அதிகாரிகளிடம் பிரையாது செய்யப் போனப்பின் ஒரு வாழைக் குலையை வெட்டி வந்து முன்சீப் வீட்டுத் திண்ணையின் பேரில் வைத்து இந்த வாழைக்குலையைத் திருடினான் அடித்தோமென்று பொய்யைச் சொல்லுகிறார்கள்." [8]

என்று எழுதப்பட்டிருக்கிறது. மதுராந்தகம் தாலுக்கா ஓரத்தூர் கிராமத்தில் நடந்த (ஜனவரி 27, 1909) இந்நிகழ்வைக் காணும்போது அன்று நாடு முழுவதும் பார்ப்பனர்களின் ஆதிக்கம் வலிமையுடன் இருந்ததை உணரமுடிகிறது எனலாம்.

## 4.4. தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்

பிரிட்டிஷ் ஆட்சியில் பார்ப்பனர் ஆதிக்கம் வளர்வதும், கூடவே சுய ஆட்சி இயக்கத்திலும் அவர்களின் ஆதிக்கமே நிலவுவதும், பார்ப்பனர் அல்லாத மக்களின்

முன்னேற்றத்திற்குப் பெரிதும் தடையாக இருக்கும் எனச் சிந்திக்கத் தொடங்கினர் அரசியல் தெரிந்த பார்ப்பனர் அல்லாத தலைவர்கள். அதன் விளைவாக 1916-ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 20-ஆம் நாள், 'சர். பி.டி. தியாகராசனார் "பார்ப்பனரல்லாத மக்களே! விழித்தெழுங்கள்!" என்று கூவியழைத்தபோது அதற்கு நாடெங்கிலுமிருந்து நல்லதொரு எதிரொலி எழும்பியது. அவர் சென்ற இடமெல்லாம் பார்ப்பனரல்லாத மக்கள் அணி வகுத்து மரியாதை செலுத்தினர். இந்தப் பெரியாருக்கு உறுதுணையாக டாக்டர் டி.எம். நாயர் நின்றார். கேரளத்திலே பார்ப்பனர்கள் பிறர்க்குச் செய்யும் கொடுமைகளைக் கண்டு மனம் புழுங்கி, தன்னுடைய வலிமை மிகுந்த பேனாவினால் கருத்தாழத்தாலும் காரண காரியத்தாலும் படிக்கப் படிக்கத் தெவிட்டாத கட்டுரைகளை ஆங்கிலேயரே வியந்து போற்றும் ஆங்கிலத்தில் எழுதினார்.' '

"அன்னிபெசண்டு அம்மையார் சுய ஆட்சி இயக்கத்தை உறுதுணை கொண்டு இம்மாநிலத்தில் பார்ப்பனர்களின் நிரந்தர ஆதிக்கத்திற்கு அடிக்கல் நாட்டப்படுவதை உடைதெறிவதற்கென அதே ஆண்டில் "தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்"(South Indian Liberal Federation) என்னும் அமைப்பையும் சர். பி.டி. தியாகராசனாரும், டி.எம். நாயர் அவர்களுமாகத் தொடங்கினர்.[10]

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிடும் திருமாறனும் இதே கருத்தை எடுத்துரைப்பார். அவருடைய கருத்தாவது,

"இந்தியாவில் கலாச்சார ஒருமைப்பாடு உருவாக வாய்ப்பு ஏற்பட்ட போதெல்லாம்-அந்நாளில் சமய மொழியாகக் கருதப்பட்ட வடமொழி எனப்படும் சமற்கிருதம் தமிழ்மொழியை ஊடுருவித் தமிழர் மீது செல்வாக்கு பெற்று வந்தது. இதனால், ஆங்கில ஆட்சி நீங்கி இந்தியத் தேசியப் பேராயம் அதிகாரத்திற்கு வந்தால் தமிழ்நாட்டில் பார்ப்பனிய ஆட்சி நிலைபெற்றுச் சமற்கிருதத்தின் வல்லாண்மை மேலோங்கும் என்ற அச்சம் பெரும்பான்மை தமிழர்களிடையே தோன்றியது. இதனால், "பார்ப்பனர் தலைமையில் அமைந்த பேராயக் கட்சியும், அன்னிபெசன்ட் அம்மையாரின் உள்ளாட்சிக் கழகமும் பரப்பிய 'இந்தியத் தேசியம்' பார்ப்பனரல்லாதாரின் நலன்களைக் கெடுத்து அழிக்கும் என்று கருதிய" (குணா.ப.234) பார்ப்பனர் அல்லாதார் 1916-ஆம் ஆண்டு தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தைத் தோற்றுவித்தனர்.

பின்னாளில் நயன்மைக் கட்சி (Justice Party) என அழைக்கப்பெற்ற அவ்வியக்கத்தவர் ஆரிய எதிர்ப்பை ஓர் அரசியற் கருவியாக்கினர்." [13] என்பதாகும்.

## 4.5. நீதிக்கட்சி

பார்ப்பனர்களுக்குப் போட்டியாக வேலைவாய்ப்பில் பங்கீடு கேட்பதே தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தினரின் முதன்மையான நோக்கமாக இருந்தது. இச்சங்கத்தின் குறிக்கோள்களாவன,

> "இச்சங்கத்தில் பார்ப்பனரல்லாதார் மாத்திரமே உறுப்பினர் ஆகலாம்; படிப்படியாக ஆங்கிலேய அரசாங்கம் இந்தியாவிற்குக் குடியேற்ற நாட்டந்தஸ்தைத் தர வேண்டும். இந்துக்களில் பார்ப்பனர்-பார்ப்பனரல்லாதார் ஆகிய இரு பிரிவினருக்கும் மக்கள் தொகைக்கும், வரி செலுத்தும் விகிதாச்சார அடிப்படையிலும் தனித்தனியாக சட்டசபைக்குப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். உத்தியோகத்திலும் வகுப்பு வாரி பிரதிநிதித்துவம் ஏற்படவேண்டும்." [12]

என்பனவாகும். இக்கொள்கைகளை மக்களிடையே எடுத்துச்செல்ல மூன்று பத்திரிகைகள் ஆரம்பிக்கப்பட்டன. தமிழ்ப் பத்திரிகையின் பெயர் 'திராவிடன்'. தெலுங்குப் பத்திரிகையின் பெயர் 'ஆந்திரப் பிரகாசனி', ஆங்கிலப் பத்திரிகை 'ஜஸ்டிஸ்' என்பதாகும். பின்னாளில் 'ஜஸ்டிஸ்' என்ற பத்திரிகையின் பெயராலேயே தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், நீதிக்கட்சி (Justice Party) என அழைக்கப்பட்டது.

ஆரியர், திராவிடர் என்று வேறுபடுத்திப் பார்க்கும் போக்கு, தொடர்ந்து சமூகத் தளத்தில் இயங்கி வந்திருப்பதைக் காணமுடிகிறது. திராவிடம் என்ற சொல் பல்வேறுபட்ட பொருளில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. " 'பஞ்சத் திராவிட' எனத் தென்னாட்டுப் பிராமணர்கள் தங்களை அழைத்துக்கொண்டபோது 'திராவிடம்' என்ற சொல் தமிழ், தெலுங்கு, மலையாள, கன்னட, துளு நிலப்பகுதிகளைக் குறிக்கிறது. அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் 'ஆச்சார்ய ஹிருதயம்' என்ற வைணவ தத்துவ நூலில் (14 ஆம் நூற்றாண்டு) "வேதம் பஹுவிதம் இதில் ஆரியம் திராவிடம் என்கிற பிரிவு ருகாதி பேதம் போலே" என்று 'திராவிடம்' என்ற சொல் தமிழ்மொழியைக் குறித்திருக்கிறது. (ஸ்ரீ வசபூசனம் (மூலம் மட்டும்) சுதர்சனம் வெளியீடு, திருச்சி, 1977, சூர்ணை எண் : 40) கடந்த

நூற்றாண்டுகளில் கால்டுவெல் 'திராவிடம்' என்ற சொல்லை மொழிக்குடும்பத்தைக் குறிக்கப் பயன்படுத்தினார். ஆனால் அவருக்கு முன்னர் 1847-இல் 'திராவிட தீபிகை' என்ற பெயரோடு சென்னையில் ஒரு பத்திரிகை தொடங்கப்பெற்றுள்ளது".[13] 1917 (ஜூன் 1 ஆம் நாள்) வெளியிடப்பெற்ற திராவிடன் முதல் இதழ் 'பிராமணரல்லாத இதர இந்துக்களுடைய குறைகள்' என்றுதான் எழுதியது.[14] இதே காலப் பகுதியில் 'திராவிடம்' என்ற சொல்லைத் தன் பெயரில் கொண்ட இதழ்கள், பத்திரிகைகள் 13 வெளிவந்துள்ளன.[15] இப்படித் தொடர்ந்து 'திராவிடம்' என்ற சொல் சமூக, அரசியல் தளத்தில் இயங்கி வந்திருக்கிறது.

### 4.6. சுயமரியாதை இயக்கம்

இந்தியத் தேசியம் அடையாளம் காட்டிய மொழி, நிலம், பண்பாடு ஆகியவை மீதும் நம்பிக்கையற்ற போக்கு வளர்ந்து வந்தது. பார்ப்பனர் மீதான நம்பிக்கையின்மை தமிழ்நாட்டுப் பார்ப்பனரல்லாத மக்களின் மனங்களிலே பதியத் தொடங்கியது. இந்தியத் தேசிய இயக்கத்தில் இடம்பெற்றிருந்த பெரியார் பார்ப்பனத் தலைவர்களிடத்துத் தொடர்ந்து அச்சம் கொண்டிருந்தார். காங்கிரசில் பார்பனத் தலைவர்கள் அனுசரிக்கும் வர்ணாசிரம தர்மத்தையும், தீண்டாமைக் கொடுமையையும் தொடர்ந்து எதிர்த்து வந்தார். இந்தக் காலத்தில் பெரியார் சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கினார் (1926). காந்தியின் மீது தீவிரப் பற்றுக் கொண்டிருந்த பெரியார், காந்தியை வெளிப்படையாகவே விமர்சனம் செய்தார்.

> "ஸ்ரீமான் காந்தி என்றைய தினம் மக்களுக்குள் வருணம் நான்கு உண்டு, அதுவும் அவைகள் பிறவியில் ஏற்படுகின்றன. அந்தந்த வருணத்தானுக்கும் ஒரு தருமம் உண்டு, அதைத்தான் அவனவன் செய்தாக வேண்டும் என்று சொல்லுகிறார் என்பதாக நாம் உணர்ந்தோமோ, அன்றே அவரிடம் மகாத்மா தன்மை அங்கு இல்லை என்பதைத் தீர்மானித்துவிட்டோம்... அதிலும் சூத்திரன் என்பவன் அடுத்த ஜன்மத்தில்தான் பிராமணனாய்ப் பிறக்கலாம் என்கின்ற அவருடைய தீர்ப்பு சுத்த சுத்தமாய் நம்மை மாற்றியது (குஅ, 25.12.1927)"[46]

என்று எழுதினார் பெரியார். இதன் காரணமாகப் புதிய ஒரு பரிமாணம் தமிழ்ச் சமூகத்தில் உருவானது. சமூகச் சீர்திருத்த நடவடிக்கைகளில் ஈடுபட்ட பெரியார், மதத்தை முற்றிலும் நிராகரிக்கும் வேலையைச் செய்தார். இதன் காரணமாக நாத்திகம், பகுத்தறிவுவாதம் என

அவர் போக்கு மாறியது.

காங்கிரசில் பார்ப்பனரல்லாத தலைவர்களாக இருந்த திரு.வி.க., மறைமலையடிகள் முதலானோர் காங்கிரசிலிருந்து வெளியேறிய போதும் பெரியாரின் கொள்கைகளோடு ஒத்துப்போக இயலாதவர்களாகவே இருந்தனர். திரு.வி.க.வைப் பொறுத்தவரை காங்கிரசிலிருந்து வெளியேறிய பிறகும் தொடர்ந்து காந்தியவாதியாகவே இயங்கினார். மறைமலையடிகள் முதலான சைவ வேளாளர்கள் தமிழர்களுக்கான மதம், பண்பாடு எனப் புதிய இயக்கம் கட்டுவதற்கான வேலையில் ஈடுபட்டனர். இப்படித் தமிழ்ப் படித்த அறிஞர்கள் ஆரம்பம் முதலே பெரியாரிடமிருந்து சற்று விலகியே இருந்தனர். இதுபற்றிக் குறிப்பிடும் சிவத்தம்பி,

"சுயமரியாதை இயக்கம், பிராமணியத்தைச் சமூக நடவடிக்கை மட்டத்தில் எதிர்க்கும் சமூக சீர்திருத்த நடவடிக்கைகளை மேற்கொண்டது. இதன் அடிப்படையாக நாத்திகம், பகுத்தறிவுவாதம் என்பன அமைந்தன. இது மதத்தை முற்றிலும் நிராகரித்தது. இதன் காரணமாகச் சைவ-வேளாளப் பண்பாட்டு மேலாண்மைவாதம் பேசிய மறைமலையடிகளுக்கும் ஈவேராவுக்குமிடையில் வேறுபாடுகள் தோன்றத் தொடங்கின" [17] என்பார்.

சமய நம்பிக்கையுடைய சைவ வேளாளர்களுக்கும், சுய மரியாதை இயக்கத்தினருக்குமான கருத்துமோதல்கள் உருவாகத் தொடங்கின. "சுய் மரியாதை இயக்கத்தின் மேலோங்குகையுடன், தனித்தமிழ் வாதம் முன் வைத்த சில கருத்துநிலை எடுகோள்கள் (பிராமணர்களில்லாத சைவ மதப் பயில்வு, மொழித்தூய்மை பேசுதல்) நேரடியாகவும் மறைமுகமாகவும் நிராகரிக்கப்பட்டன. தமிழைச் சமயச் சார்பற்ற போக்குடையதாக்க வேண்டுமென்ற போக்கு மேலெழும்பத் தொடங்கிற்று".[18]

## 4.7. திராவிடர் கழகம் உருவாதல்

"இவ்வாறு வேகத்துடன் வளர்ந்த 'தன்மான இயக்கமும்' ஏற்கனவே ஆட்சியைப் பிடிக்கக்கூடிய அளவிற்குச் செல்வாக்குப் பெற்றிருந்த 'நீதிக்கட்சியும்' 1940-இல் திருவாரூரில் நடந்த மாநாட்டில் அறிஞர் அண்ணாத்துரை கொண்டுவந்த தீர்மானம் மூலமாக இணைந்து 'திராவிடர் கழகம்' உருவாயிற்று"[19] இத்திராவிடர் கழகம் தமிழக அரசியலிலும்,

பண்பாட்டிலும் பெருஞ்செல்வாக்கு செலுத்தியது. இக்காலத்தில் 'திராவிட நாடு' கோரிக்கை முன்வைக்கப்பட்டது.

பெரியாருடன் கருத்து முரண்பாடு ஏற்பட்டதன் காரணமாகத் திராவிடர் கழகத்தில் இருந்து பிரிந்தவர்கள் 1949 செப்டம்பர் 17 ஆம் நாள் சி.என். அண்ணாத்துரை தலைமையில் திராவிட முன்னேற்றக் கழகம் என்ற பெயரில் அரசியல் இயக்கத்தைக் கட்டினர். இக்கட்டத்தில்தான் தமிழ்த் தேசியப் பிரக்ஞை முற்று முழுதாக மேற்கிளம்புகின்றது எனலாம்.

## 4.8. தனித்தமிழ் இயக்கம்

இந்திய விடுதலை இயக்கத்தோடும் தமிழின் மறுமலர்ச்சியோடும் இணைந்தே தனித்தமிழ் இயக்கம் தோற்றம் பெற்றது. தனித்தமிழில் செயல்படவேண்டும் என்ற எண்ணம், தனித்தமிழ் இயக்கம் உருவாவதற்கு எட்டாண்டுகளுக்கு முன்பே இருந்திருக்கின்றது. "திருக்குற்றாலத்தில் 19-11-1908இல் விருதை சிவஞான முனிகள் (1840-1924) முயற்சியில் 'திருவிடர் கழகம்' என ஓர் அமைப்பு உண்டாயிற்று".[20] இக்கழகம் பற்றிக் குறிப்பிடும் இரா. இளங்குமரன்,

> "திருவிடர் கழக நோக்கம், குறிப்பு, கட்டளைகள் எனபளவெல்லாம் தனித்தமிழாகவே உள. 'தனித்தமிழ்' என்னும் தொடர் இல்லையேயன்றி அதனைச் செப்பமாகக் கடைப்பிடித்து எழுதப்பட்டுள்ளமை கண்கூடு. மறைமலையடிகள் 'தனித்தமிழ்' இயக்கம் தோற்றுவிக்கும் குறிப்பு ஏற்படுவதற்கு எட்டாண்டுகளுக்கு முற்பட்டது இம்முயற்சி" [21]

என்பார். எனினும் தமிழிலேயே எழுத வேண்டும், பேச வேண்டும் பிறமொழிச் சொற்களை விலக்க வேண்டும் என இயக்கம் கட்டியவர் மறைமலையடிகளே ஆவார்.

ஏற்கனவே பல்லவர் காலம் முதல் வடமொழி ஆதிக்கம் பெற்றிருந்த நிலையில் ஆங்கிலேயர் ஆட்சியில் ஆங்கிலம் கல்விமொழியானது. இதனால் மேலும் தமிழின் நிலை தாழ்ந்ததைக் கண்டு, தமிழ்ப் பற்றாளர்கள் தமிழ்மொழி வழியிலான தாய்மொழிக் கல்விக்குக் குரல் கொடுத்தனர். தமிழ்மொழியின் நிலைகுறித்து,

"பல்கலைக் கழகக் கல்வியில் தமிழ்ப் பயிற்று மொழியாகவில்லை யெனினும் ஒரு மொழியாகப் படிக்க ஆங்கில அரசு வாய்ப்பளித்திருந்தது. அந்த வாய்ப்பையும் நீக்கிப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்திலிருந்து தமிழை விலக்கிவிடச் சமற்கிருதப் பற்றாளர் ஆங்கில அரசிடத்தும், பல்கலைக் கழகத்தினிடத்தும் தமக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்தினர்" [22]

என்பார் ம.பொ. சிவஞானம்.

இப்படி வடமொழியாளர்கள் செய்த சூழ்ச்சிக்கு எதிராகத் தமிழறிஞர்கள் வெகுண்டெழுந்தனர். அக்காலச் சூழலை அறிந்து கொள்ள பரிதிமாற் கலைஞரின் கூற்றுத் துணைபுரிகிறது அவர்,

"சிலர் சுதேச பாஷைகளை யொழித்துவிட்டு அவற்றிற்குப் பிரதியாக வடமொழி பயிலுதலே சிறந்ததென்று முழங்கிய முழக்கம் தென்னாடெங்கும் நடுக்கம் விளைத்தது. பண்டிதர் பலர் ஏங்குவாராயினர். சாமானிய ஜனங்கள் எல்லாம் துன்பக்கடலில் ஆழ்ந்தனர்" [23]

எனக் குறிப்பிட்டார்.

எல்.எசு. சுப்பராய அய்யர், சுப்பிரமணிய சிவா நடத்திய ஞானபாநு இதழில்,

"அந்தோ! கோடிக்கணக்கான பிள்ளைகளைப் பெற்ற தமிழ் மாது தன் பிள்ளைகளால் தானறியப்படாமற் போனதன்றி, பிற சொற்களைப் பார்த்துத் தன் பெயராலே அழைக்கும் மதியற்ற குழந்தைகளைப் பெற்ற காலத்தின் விபரீதம் என்னே! இக்கொடுமையை மாந்தர் சகிப்பாரோ?" [24] என்று எழுதினார்.

சுப்பிரமணிய பாரதியாரின் கூற்றும் இங்கு நோக்கத்தக்கது. அவர்,

"தம்பி-நான் ஏது செய்வேனடா, தமிழைவிட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும் போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்குச் சம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம்

புண்படுகிறது... தம்பி, தமிழ்நாடு வாழ்க என்றெழுது. தமிழ் நாட்டில் நோய்கள் தீர்க என்றெழுது. தமிழ்நாட்டில் வீதிதோறும் தமிழ்ப் பள்ளிக் கூடங்கள் மலிக என்றெழுது"[25]

எனத் தமிழ்க் கல்விக்குக் குரல் கொடுப்பதைக் காணமுடிகிறது.

சுப்பிரமணிய சிவா,

"தமிழ்ப் பண்டிதர்களே! தமிழ் மகாஜனங்களே! ஜாக்கிரதை, ஜாக்கிரதை! உங்களுடைய பாஷையைக் காப்பாற்றுங்கள். ஒரு ஜன சமூகத்திற்கு உயிர் அதன் பாஷைதான். தமிழ்ப்பாஷையழிந்துவிட்டால் தமிழர்களின் சிறப்பும் சீரும் அழிந்து விடும்"[26] என்று எழுதினார்.

இவ்வாறு பல்வேறு அறிஞர்கள் தமிழ் மொழிபற்றிய பிரக்ஞை ஏற்படக் காரணமாயினர். வரலாற்றில் தனித்தமிழ் இயக்கம் தோன்றுவதற்கான சூழல் வந்து வாய்த்தது. இதுபற்றிக் கு.திருமாறன்,

"எனவே, மறைமலையடிகளின் தனித்தமிழியக்கம் திடுமெனத் தோன்றவில்லை! மாறாக, உரிய காலச் சூழலில் பரிதிமாற் கலைஞர், பாம்பன் சுவாமிகள், சுப்பிரமணிய சிவா ஆகியோர் அமைத்துத் தந்த களத்தில் மறைமலையடிகட்கு ஏற்பட்ட அக, புறத்தூண்டல்களின் விளைவால் 1916இல் இயக்கமாக மலர்ச்சியுற்றது எனலாம்"[27] என்பர்.

தனித்தமிழ் இயக்கத்தைப் பற்றிக் குறிப்பிடும் சிவத்தம்பியின் கருத்தும் இங்கு எண்ணத்தக்கது.

"மேனாட்டு ஆராய்ச்சி கண்டுபிடித்துக்கொடுத்த ஆரிய மேன்மைக் கோட்பாட்டை ஆதாரமாகக் கொண்டு தமிழைச் சமஸ்கிருதம் "சப்பி உமிழ்ந்த சக்கை" என்று கூறியவர்களுக்கெதிராகக் கொதித்தெழுந்தவர்கள் தமிழின் தனித்துவத்தை அதன் சுயாதீனத்தை நிலைநிறுத்தும் வகையில் தனித்தமிழியக்கத்தை நடத்தினர்"[28]

என்பார். தனித்தமிழ் இயக்கத்தின் செயல்பாடு குறித்துச் சிவத்தம்பி, "ஜஸ்டிஸ் கட்சியும் தனித்தமிழியக்கத்தின் தந்தை மறைமலையடிகளும் ஆங்கில ஆட்சியை

எதிர்த்தவர்களல்லர். ஆனால் இவர்களிடையே நிறுவன ரீதியான ஒருமைப்பாடு இருக்கவில்லை என்பது உண்மையே. ஆனால், திராவிடக் கருத்து நிலையின் ஒரு முக்கிய எடுகோளான ஆரிய மேன்மை நிராகரிப்பினைத் தனித்தமிழியக்கம் மிக வன்மையாக முன் வைத்தது. சைவ-வேளாளர் நிலை தமிழர் நாகரிகத்தின் ஆணிவேர் என்று எடுத்துக்கூறப்பட்டது"[29] என்பார்.

இருபதாம் நூற்றாண்டின் தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்கள் எனக் குறிப்பிடப்படும் நீதிக்கட்சி, சுயமரியாதை இயக்கம், தனித்தமிழ் இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் ஆகியவற்றினிடையே காணப்படும் ஒருமைப்பாட்டினைவிட வேறுபடும் கூறுகள் மிகுதியாக உள்ளன. இருப்பினும் ஆரியர்Xதிராவிடர் என்னும் முரண் எதிர்வைக் கட்டமைத்து, ஆரிய மேன்மைக் கோட்பாட்டை எதிர்த்தது என்கிற அம்சத்தில் ஓர் ஒற்றுமையைக் காணமுடிகிறது. எனவே, இம்மறுமலர்ச்சி இயக்கங்களைத் தனித்தனியாகக் குறிப்பிடும் போக்கை வெகுவாகத் தவிர்த்து, 'திராவிட இயக்கம்' அல்லது 'தமிழ் மறுமலர்ச்சி இயக்கம்' என்ற ஒற்றைப் பெயரிலேயே குறிப்பிடும் நிலையை இக்கட்டுரை மேற்கொள்கிறது.

தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்கள் குறித்து எழுதும் க.பஞ்சாங்கம்,

"அடிப்படையில் பார்ப்பனர்க்கு எதிரான இவ்வியக்கம் இன அடிப்படையில் திராவிடர் இயக்கமாகவும், சமய அடிப்படையில் சைவ சமய எழுச்சிக்கான இயக்கமாகவும், மொழி அடிப்படையில் தனித்தமிழ் இயக்கமாகவும், சாதி அடிப்படையில் தன்மான இயக்கமாகவும் பன்முகப்பட்டு விரிந்தது; வளர்ந்தது"[30]

என்பார். இவ்வாறு தமிழ்நாட்டு வரலாற்றின் போக்கிற்கு ஏற்ப தோன்றிய இத்திராவிட இயக்கத்தின் தாக்கம் பழந்தமிழ் இலக்கியங்களைத் திறனாய்வு செய்வதிலும் வெளிப்பட்டது. சங்க இலக்கியங்களே தூய தமிழினத்திற்கான இலக்கியம் என்ற கருத்து முன்வைக்கப்பட்டது.

## 4.9. தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

ஐரோப்பிய அறிஞர்களின் மொழி, பண்பாடு குறித்து வெளிவந்த ஆய்வுகளை அடுத்து பெ.சுந்தரம் பிள்ளை, மு.சு. பூரணலிங்கம் பிள்ளை, வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார்

ஆகிய அறிஞர்கள் தமிழ் மொழியியல், இலக்கியம், வரலாறு பற்றிய செய்திகளை வெளிக்கொணரும் முயற்சியில் ஈடுபட்டனர். ஆனால், இத்துறையில் பெரிய வழிகாட்டியாக விளங்கியவர் ஈழத்து அறிஞர் வெ.கனகசபை ஆவார். அவர் தமிழ் மொழி, பண்பாடு பற்றிய ஆய்வில் 1904 இல் முதன் முதலாகப் பெரியதொரு முயற்சியில் ஈடுபட்டார். 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' என்னும் அவரது ஆங்கில நூல் தமிழர்தம் பெருமை பேசும் முதல் நூலாக வெளிவந்து தமிழ் அறிஞர்களுக்கு ஊக்கமூட்டியது.

**4.9.1. வெ. கனகசபை**

சங்க இலக்கியத்தின் தனிச்சிறப்புக்களை வெளிக்கொணர்வதில் கனகசபையின் நூல், பெரும்பங்காற்றியது. அதுநாள் வரைச் சங்க இலக்கியங்கள் சமயச் சார்புடையனவாகக் கருதப்பட்டுத் தமிழறிஞர்களால் ஒதுக்கப்பட்டும் மறைக்கப்பட்டும் வந்திருப்பதை உணரமுடிகிறது. இதனைக் கனகசபையின் எழுத்துக்களில் காணமுடிகிறது. அவர்,

> "பண்டைத் தமிழிலக்கியம் அகல்பெரும் பரப்புடையது. அதே சமயம் அது முன்னால் வேறு எவர் காலடியும் படாத ஒரு புதுநிலப் பரப்புப் போன்ற இயல்புடையதாகவும் இலங்குகின்றது. ஆயினும் இப்பழம் பேரிலக்கிய ஏடுகள் அண்மையிலேயே வெளியீட்டொளி கண்டுள்ளன. இதுகாறும் அவை கையெழுத்துப் படிவங்களாகப் பனை ஓலைகளில் எழுதப்பட்டு, அவற்றைக் கைக்கொண்டிருந்த புலவர் பெருமக்களால் வேறு எவர் கண்ணிலும் படாமல் பூட்டி வைக்கப்பட்டேயிருந்து வந்தன. அவற்றின் மொழிநடை பழமைபடிந்ததாயிருந்தது. அவற்றின் சமயச்சார்போ அயல் சமயச் சார்பாய் அமைந்திருந்தது. இவ்விரண்டு பண்புகள் காரணமாகவும் அவை மாணவருலகின் மதிப்பார்வத்தைப் பெறமுடியாது போயின. உண்மையில் தமிழர் கல்விக் குழாங்கள் (Tamil Schools-இங்கே குறிக்கப்படுவது கோட்பாட்டுக் குழுக்கள்) பலவற்றில் அவை படிக்கத் தகாதவை என்றே ஒதுக்கிவைக்கப்பட்டிருந்தன. பள்ளி மாணவர்களுக்கு அவற்றைக் கற்பிப்பதென்பது மன்னிக்க முடியாத ஒரு பழிகேடாகும் என்றுதான் சைவ வைணவப் புலவர்கள் கருதி வந்தார்கள்"[31]

என்பார். இங்கே 'அயல் சமயச் சார்பு' என்று குறிப்பிடுவது சமண மதத்தையே எனக் கருத இடமளிக்கிறது. சமண சமய இலக்கியங்கள் எனக் கருதினதாலேயே அவற்றை மறைக்கும்

போக்குச் சைவ அறிஞர்களிடம் இருந்திருக்கிறது எனலாம். இதனை உறுதிசெய்ய இன்னொரு சான்றையும் இங்கே குறிப்பிடலாம்.

> "நமது சமாஜம் சங்க இலக்கியத்தை வெளியிடுதல் பொருத்தமாகுமா" என்று சிலர் ஐயுறுதல் கூடும். சங்க நூல்களெல்லாம் புத்த சமண சமயச் சார்புடையன; அவைகளைப் பயிலுதல் கூடாது என்று எனது இளமைப் பருவத்திற் சில சிவனடியார்கள் கூறியதுண்டு, இக்காலத்தின் நல்வினைப் பயனாக இக்கொள்கை மறைந்துவிட்டது"[32]

என்கிறார் ம. பாலசுப்பிரமணியன். இதிலிருந்து சங்க இலக்கியத்தை அயல் சமயச் சார்புடையதாகக் கருதி ஒதுக்கியதை அறியமுடிகிறது. இதனையே கனகசபையும் குறிப்பிடுகிறார் எனலாம். எனவே, ஒதுக்கப்பட்ட சங்க இலக்கியத்துக்கு உயிர்ப்பு தரும் வேலையைக் கனகசபை செய்திருக்கிறார்.

இந்நூலில் கனகசபையின் நோக்கமாக அறியப்படுவது, பண்டைத் தமிழ் நாகரிகத்தைப் பற்றித் தமிழ் இலக்கியத்தில் காணும் எல்லாச் செய்திகளையும் தொகுத்துத் தருவதற்கான முயற்சியாகும். இவ்வேலையைக் கனகசபை மிகத்திறம்படச் செய்திருக்கிறார். சங்க இலக்கியமே தூய தமிழினத்திற்கான இலக்கியம் என்ற கருத்தை,

> "கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியம் எதுவுமில்லை என்பதே இன்று மேலை அறிஞரின் பொதுக்கருத்தாக இருந்து வருகிறது. ஆனால், உண்மை இதற்கு நேர்மாறானது. தமிழிலக்கியத்தின் தலைசிறந்த, தற்பண்பு வாய்ந்த பகுதி முழுவதும் கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்குமுன் இயற்றப்பட்ட பகுதியே எனலாம். அதற்குப் பின் வந்தவை மிகப் பெரும்பாலும் சமஸ்கிருத ஏடுகளைப் பின்பற்றி இயற்றப்பட்ட கீழ்த்தரமான போலி பகர்ப்புகளாகவோ, மொழி பெயர்ப்புகளாகவோ மட்டுமே கொள்ளத்தக்கவையாயுள்ளன."[33]

என்ற கூற்றின் மூலம் முன்வைத்தார். இக்கருத்தே பின்னர் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினருக்குச் சங்க இலக்கியத்தை முன்னெடுத்துச் செல்ல உதவிற்று எனலாம். மேலும், கனகசபை,

"பண்டைத் தமிழ் இலக்கிய ஏடுகளை நான் கூர்ந்து ஆராய்ந்தபோது, எனக்கு ஏற்பட்ட கருத்து ஒன்றே ஒன்றுதான். அவற்றுள் ஒரு பெரும்பகுதி இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் இயற்றப்பட்டது என்பதில் சிறிதும் ஐயம் ஏற்பட வழியில்லை. ஏனெனில் அவை இயற்றப்பட்ட காலத்தில் தமிழர் அராபியருடனும் கிரேக்கருடனும், உரோமருடனும் ஜாவனியருடனும் இவர்களை ஒத்த மற்ற அயல்நாட்டவருடனும் வாணிகத் தொடர்பு கொண்டு இவை காரணமாக உயர்நாகரிகமும் பெருஞ்செல்வ வளமும் உடையவர்களாய் இருந்தார்கள். அக்காலப் பொருளியல் வளத்தில் ஏற்பட்ட முன்னேற்றமே இலக்கியத் துறையிலும் தமிழருக்குப் பேருக்கமும் தூண்டுதலும் தந்திருக்க வேண்டும் என்னலாம்"[34]

என்று எழுதுகிறார். இப்படித் தமிழரின் தொன்மைச் சிறப்பையும், பொருள் வளத்தையும் வியந்து எழுதிய எழுத்துக்கள் தான், பின்னாளில் திராவிட இயக்கத்தினர் சங்க காலத்தைப் பொற்காலமாக்கித் தங்கள் இயக்க வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டமைக்கு வழிகாட்டியாக இருந்தது எனலாம்.

வடமொழி அறிஞர்கள் தமிழைத் தாழ்த்தி வடமொழிதான் உயர்ந்தது என்று பேசிக்கொண்டிருந்த சூழலில், தமிழ்தான் தொன்மைச் சிறப்பு வாய்ந்தது என்று எழுதத் தமிழ் அறிஞர்கள் சான்றுகளைத் தேடிக்கொண்டிருந்த சூழலில் கனகசபை,

"இப்பேரிலக்கியம் கி.பி. முதல் ஒன்றிரண்டு நூற்றாண்டுகளுக்கே உரியது என்று வரையறுக்க நமக்குப் புறச் சான்றுகளின் உதவிகூட எதுவும் தேவையில்லை; அகச் சான்றுகளே அவ்வளவு மிகுதியாய் உள்ளன. ஏனெனில் தமிழ் மக்களின் சமயநிலை, சமுதாய பழக்கவழக்கங்கள் ஆகியவை பற்றி அது தரும் தகவல்களே அதை வரையறை செய்யப் போதியவை ஆகும்"[35]

என்று எழுதியது தமிழறிஞர்களுக்கு ஊக்கத்தைக் கொடுத்தது. மேலும்,

"கி.பி. 50க்கும் கி.பி. 150க்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த கவிஞர்களின் பாடல்களாக 25,000 அடிகளுக்குமேல் இன்றும் நம்மிடையே நிலவுகின்றன. பண்டைத் தமிழர் வரலாறும் நாகரிகங்களும் ஆய்ந்துணர இவை போதிய வாய்ப்பு வளங்கள் தருவன. அவர்கள் பழக்க வழக்கங்கள், அவர்கள் சமுதாய அரசியல் நிலைகள்

ஆகியவற்றின் ஓவியங்களை அவை நமக்குப் பேணித் தருகின்றன. கல்லிலோ, பித்தளையிலோ உருவாக்கினால்கூட இத்தனை அழியாத ஓவியங்களாக அவை இருக்கமுடியாது என்னலாம்" [36]

என்று எழுதும் கனகசபையின் எழுத்துச் சங்க இலக்கியம் பற்றிய காலத்தை நிர்ணயம் செய்வதாக அமைகிறது. வடமொழிச் சார்பற்ற தூய தமிழினத்திற்கான இலக்கியமாகச் சங்க இலக்கியத்தை அடையாளம் காட்டுகிறது. மேலும், இந்நூலில் தமிழகத்தின் நில இயல் பிரிவுகள், வெளிநாட்டு வாணிகம், சேர, சோழ, பாண்டியர், சிற்றரசர்கள் பற்றிய செய்திகள், தமிழரின் மெய்விளக்கக் கோட்பாடுகள், சமூக வாழ்வு, சமய வாழ்வு என விரிவாக எழுதிச் செல்கிறார். இது தமிழறிஞர்களிடையே புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சும் பணியைச் செய்தது. இந்நூல் வெளிவந்தவுடன் இதனை மறுத்தும், ஆதரவு காட்டியும் எனத் தொடர்ந்து தமிழ் மொழி, பண்பாடு, வரலாறு, குறித்த ஆய்வுநூல்கள் வேகமாக வெளிவரத் தொடங்கின. இக்காலக் கட்டத்தில்தான் சங்க இலக்கிய நூல்கள் தொடர்ந்து அச்சில் வெளிவந்துகொண்டிருந்தன. இப்பணியில் பெரிதும் ஈடுபட்டிருந்தவர்கள் சி.வை. தாமோதரம் பிள்ளையும், உ.வே. சாமிநாதையரும் ஆவர்.

### 4.9.2. கே.ஜி. சேஷ ஐயர்

எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் தமது, 'பிகினிங்ஸ் ஆப் சௌத் இண்டியன் ஹிஸ்டரி என்ற ஆங்கில நூலின் முகவுரையில் 'கனகசபையார் வரலாற்றுப் பிரச்சினைகளை நாட்டுப்பற்றோடு அணுகுகிறார்' என்று குறைகூறி அதற்கு நேர் எதிரான வேலையைத் தம்முடைய நூலில் செய்கிறார். வரலாற்றாசிரியரான கே.ஜி. சேஷ ஐயர், சங்க இலக்கியத்தின் பெருமதியைப் பின்வருமாறு மதிப்பிடுவார்.

"சங்க காலத்துத் தமிழ் இலக்கியமானது, பண்டைய தென்னிந்திய வரலாற்றுக்குத் தேவையான விடயங்களைத் தரும் மிகப் பழமையான சுதேசச் சான்று ஆகும். ஏனெனில், அது தென்னிந்திய மன்னர்கள் பற்றிய கால வரைவுள்ள கல்வெட்டுக்களின் காலத்துக்கு முற்பட்டது. புராதனத் தென்னிந்தியாவின் இழந்த வரலாற்றின் பருவரைவுகளை மீட்டுக் கொள்வதற்கும், கிறித்து அப்தத்தின் பூர்வ நூற்றாண்டுகளில் தமிழ் மக்களின் நாகரிக மட்டத்தை அவர்தம் சமூக, இலக்கிய அரசியல் வாழ்க்கையைப் பெற்றுக் கொள்வதற்கும் தம் பெரும் பணியினால் வழி வகுத்த மதிப்பிற்குரிய,

கற்றறிந்த மகா மகோபாத்யாய உ.வே. சாமிநாதையர் அவர்களுக்குத் தமிழ் இந்தியா பற்றிப் பயிலும் மாணவன் தனது கடனை இறுத்துவிடமுடியாதென்பது வெறும் மிகையுரையாகாது"[37]

என்று மதிப்பிடுவதிலிருந்து சங்க இலக்கியப் பதிப்புகளின் வரவு அன்றைய சூழலில் முக்கியத்துவமடைந்து இருந்ததைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

கால வரன்முறை அறிவு இல்லாது மொழியின் வளர்ச்சியைப் பற்றிய ஆய்வு சாத்தியமற்றது என்பதால் சங்க இலக்கிய வரிசையின் காலம் பற்றியத் தேடல்கள் தொடங்கின. திராவிடம் ஆரியத்திலிருந்து தனியானது, புறம்பானது என்ற கொள்கை நிலைப்பட்டதும், திராவிடத்தின் தனித்துவத்தைக் காண்பதற்கு, ஆரியச் செல்வாக்குக்கு முற்பட்ட திராவிடத்தைப் பற்றி அறிய முற்பட்டனர். இந்த வேளையில்தான், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கண்டுபிடிக்கப்பெற்ற சிந்துவெளிப் பள்ளத்தாக்கு நாகரிகம் பற்றிய முடிவுகள் வெளிவரத் தொடங்கின. இதனைத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் தங்கள் கொள்கை நிலைப்பாட்டுக்குச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டனர்.

**4.9.3. ந.சி. கந்தையா பிள்ளை**

உலகில் தோன்றிய முதல் இனம் தமிழினம் என்றும், தமிழர்கள் இந்தியாவின் பூர்வீகக் குடிகள் மட்டுமல்ல உலக நாகரிகத்திற்கு வழிகாட்டியாகவும் இருந்தவர்கள் என்ற கருத்துடையவர் ந.சி. கந்தையா பிள்ளை ஆவார். அவருடைய கூற்றாவது,

"1921-ஆம் ஆண்டு சிந்துவெளியில் புதையுண்டு கிடந்த தமிழரின் மொகஞ்சதரோ, ஹரப்பா என்னும் இரு பண்டைய நகரங்கள் கண்டுபிடிக்கப்பட்டு அவ்விடங்களிற் கிடைத்த பழம்பொருள்கள் ஆராயப்பட்டன. நுணுகி ஆராய்ந்த பின்னர் ஆராய்ச்சியாளர், அந்நகரங்களில் வாழ்ந்தோர் தமிழர்கள் என்றும், அவர்களின் நாகரிகம் மெசபெதேமியா, எகிப்து முதலிய நாடுகளின் பழைய நாகரிகங்களை ஒத்துள்ளதென்றும், அந்நகரங்கள் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டனவென்றும் நவின்றனர்"[38]

என்பதாகும். இங்குத் தமிழ் மக்கள் தொன்மைச் சிறப்புடைய நாகரிகத்தை உடையவர்கள் என்ற கருத்து முன்வைக்கப்படுவதைக் காணமுடிகிறது. இந்திய நாகரிகத்தைப் பற்றி

ஆராய்வோர் கங்கைச் சமவெளியில் இருந்து ஆராய்வதை விடுத்து வையை ஆற்றுப் பகுதியிலிருந்து தொடங்க வேண்டும் என்கிறார்.

"இந்திய மக்களின் பழைய நாகரிகத்தை அறியத் தொடங்குவோர், அதனைச் சமக்கிருத நூல்கள் மூலமாக ஆராய்வது மிகத் தவறான முறை; அறிவு முறையில் ஆராயப்புகும் ஒவ்வொருவரும் கிருட்டிணா, கோதாவரி, வையை ஆற்றுவெளிகளைப் பற்றி ஆராய்தல் வேண்டும். இதை விடுத்துக் கங்கைச் சமவெளிகளில் ஆரம்பித்து ஆராய்வதே நீண்டகாலக் கொள்கையாகிவிட்டது"[39]

என்று வரலாற்றைத் தெற்கிலிருந்து எழுதவேண்டும் என்கிறார். உலக நாகரிகத்தின் முதல் குடிகள் தமிழர்களே என்றும், அவர்களே இந்தியாவிலிருந்து உலகம் முழுவதும் சென்று பரவினர் என்றும் குறிப்பிடுகிறார்.

"மத்தியதரை நாடுகளில் வாழ்ந்து கொண்டிருந்த மக்களே கிழக்கு நோக்கிச் சென்று இந்திய நாட்டிற் குடியேறினார்கள் என வரலாற்று நூலார் சிலர் புகன்றனர். இது நேர்மாறாக நிகழ்ந்ததென்று வேறு சிலர் கருதினர். ஹெரஸ் பாதிரியார் மொகஞ்சரோ, ஹரப்பா என்னும் இடங்களில் கிடைத்த 1800 முத்திரைகளை நுணுகி ஆராய்ந்தார்; ஆராய்ந்த பின்னர் இதுவரையில் மத்திய தரை மக்களே வந்து இந்தியாவிற் குடியேறினார்கள் எனக் கருதப்பட்டு வந்த கொள்கை தவறுடையதென்றும், தமிழர்களே இந்தியாவினின்றும் சென்று மத்திய தரை நாடுகள் முதல் எகிப்து, ஸ்பெயின், அயர்லாந்து வரையிற் குடியேறினார்களென்றும் பல சான்றுகள் காட்டி எழுதியுள்ளார் (பக்கம் 188, கருணமிருத சாகரம் - ஆபிரகாம் பண்டிதர்)"[40]

எனத் தம் கொள்கைக்குத் தகுந்தவாறு சான்றுகளைத் தந்து கருத்துக்களை வடிவமைக்கிறார். மொகஞ்சொதரோ மொழிக்குத் தாய் தமிழ் மொழி என்பதை மிகப் பக்குவமாக வாதிடும் ந.சி.கந்தையாபிள்ளை,

"மொகஞ்சொதரோவில் வழங்கிய சொற்களில் பல திராவிட மொழிகளிற் காணப்படுகின்றன. ஆகவே திராவிட மொழிகளுக்குத் தாய் மொகஞ்சொதரோ மொழி எனக் கூறலாம். திராவிடமொழிகளிற் காணப்படும் மொகஞ்சொதரோ மொழிச் சொற்களில் பல தமிழிற் காணப்படுகின்றன. ஆகவே, தமிழ் மற்றைய திராவிட

மொழிகளிலும் மூப்பு உடையது என்று கருதப்படுகிறது"[41]

என எளிதில் தம் கருத்தை நிலைநாட்டி விடுவதைக் காண முடிகிறது. மேலும்,

"இன்று இந்திய மக்களிடையே காணப்படும் பழக்கவழக்கங்களும் பிறவும் பழைய தமிழர் நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்டனவென்று கருதப்படுகின்றன. சங்க காலத் தமிழர் நாகரிகம் கலப்பில்லாத பழந்தமிழ் நாகரிகமேயாகும்"[42] என்று எழுதுகிறார்.

ந.சி. கந்தையா பிள்ளை தம்முடைய நூல்களான தமிழகம் (1934), வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழந்தமிழர் (1943), தமிழ் இந்தியா (1945), முச்சங்கம் (1947), தமிழர் சரித்திரம் (1950) ஆகியவற்றில் இப்படிப் பொதுவாக இந்திய நாகரிகம், மொழி, மதம், சமயம் பண்பாடு, கடவுள் என அத்தனையும் தமிழர் உடையதாக எழுதித் தமிழ் வடமொழியைச் சார்ந்ததல்ல, தனித்தன்மையுடையது என்ற கருத்தை உயர்த்திப் பிடிப்பதைக் காணமுடிகிறது.

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் பழந்தமிழ் இலக்கியங்களுக்கு எளிய உரை எழுதுதல், வசனங்கள், விளக்கங்கள் தீட்டுதல் என்பனவற்றைத் தங்களுடைய பணிகளில் ஒன்றாகக் கருதினர். ந.சி. கந்தையா பிள்ளை, கலித்தொகை வசனம் (1941) அகநானூறு வசனம் (1938, 1941), பத்துப்பாட்டு உரைநடை (1935) பதிற்றுப்பத்து வசனம் (1937) பரிபாடல் வசனம் (1958) முதலிய நூல்களில் இப்பணியைச் செய்வதைக் காணமுடிகிறது. இந்நூல்களில் சங்க இலக்கியப் பாடல்களைக்கூடக் கொடுக்காமல் பாடல் எண்களை மட்டும் குறிப்பிட்டு எளிய முறையில் வசனம் (விளக்கம்) எழுதி இருக்கிறார். இலக்கியம் அறியாத படித்த பாமரர்களுக்குச் சங்க இலக்கியச் செய்திகளைக் கொண்டு சென்று சேர்த்தல் என்ற மறுமலர்ச்சி இயக்கத்தினரின் போக்கு இதில் தென்படுகிறது.

**4.9.4. கா. அப்பாத்துரை**

ஆரியருக்கு எதிரான கருத்துருவாக்கத்தைப் பின்னுவதில் கடுமையாக உழைத்துள்ள அப்பாத்துரை, சிந்துவெளி நாகரிகக் கண்டுபிடிப்பைத் தம் திராவிடக் கொள்கைக்கு ஏற்ப விளக்கினார். அவருடைய கூற்றாவது,

"இந்திய நாகரிகத்தின் வரலாறு, மனித இன நாகரிகத்தின் தோற்றம் ஆகியவை பற்றி

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை நிலவியிருந்த கருத்துக்கள் அத்தனையிலும் சிந்துவெளி புதைபொருளாராய்ச்சி புரட்சிகரமான பெருத்த மாறுபாடுகளை உண்டுபண்ணியுள்ளது. கிரேக்க நாகரிகத்தின் பழமையும் இருக்குவேத ஆரியரின் பழமையும் இப்போது நேற்றைய, இடைக்கால புதுமைகளாய்விட்டன. கிரேக்க, சால்டிய, சுமேரிய நாகரிகங்கள் இவற்றுக்கு ஆயிரக்கணக்கான ஆண்டு முற்பட்ட பழமையும் பெருமையும் உடையன. தமிழின நாகரிகத்தின் மூல வடிவமான திராவிட நாகரிகமோ இத்தொல் பழ நாகரிகங்களின் தலைமூத்த நாகரிகமாய், அவற்றிலும் ஆயிர பதினாயிரக் கணக்கான ஆண்டுப் பழம் பெருமையுடையதென்பதை இன்றைய அறிஞருலகம் திட்டவட்டமாக எடுத்துக்காட்டுகிறது. இந்தியாவின் அரசியல், சமுதாய, சமயப்பண்பாடுகள் அத்தனைக்கும் மூல முதல் கருநிலையை இப்போது யாரும் இருக்கு வேதத்திலோ, புராண இதிகாசங்களிலோ தடவித் தேட வேண்டியதில்லை. ஏனெனில் திராவிட நாகரிகத்தில் அவையெல்லாவற்றின் மூல முதலை மட்டுமன்றி, உலக நாகரிகத்தின் மூல முதலையே தேடிக் காணலாம்".[43]

என்பதாகும். இவ்வாறு உலகநாகரிகத்தின் மூல முதல் வடிவமாகத் திராவிட நாகரிகத்தைக் குறிப்பிடுகிறார். மேலும்,

"சங்க கால முத்தமிழரசர்களுள் பாண்டியன் மாகீர்த்தி என்ற நிலந்தருதிருவிற் பாண்டியன் கடல்கடந்து சாவகம் அல்லது சயநாட்டில் (சுமாத்ரா) தன் ஆட்சியை நிறுவியிருந்தான். இவன் முதற்சங்க காலத்தவன். தொல்காப்பியம் அரங்கேற்றியவன். புராணங்களில் இவனே உலகின் முதல் அரசனாகிய மனு என்றும், இவன் பெயர் சத்திய விரதன் என்றும் குறிப்பிடப்படுகிறான். இவனே கடல்கொண்ட தமிழகத்துக்கு ஈடாக, சிந்து கங்கை சமவெளியைப் புதுநாடாக்கி அதில் தமிழரைக் குடியேற்றினான் என்றும் சில அறிஞர் கருதுகின்றனர். இவன் காலம் அறுதியிடப்படின் இவனே இந்திய மாநில முதற்பேரரசும் கடல்கடந்த முதற்பேரரசும் நாட்டியவன் என்பது தெளியக்கூடும். ஆயிர ஆண்டுகளுக்குப் பின் சோழர் காலத்திலும் இன்றும் பாண்டிநாட்டுப் பெயர்களும் தமிழ்க் கல்வெட்டுக்களும் பாண்டியர் குடிப்பெயர்களும் அங்கே நிலவுவது காண்கிறோம். இக்குறிப்புகள் உறுதியாகத் தெரியப்பட்டால்

இக்காலப் பாண்டிய அரசை நாம் முதற்பாண்டியப் பேரரசு என்று கூறலாம்"[44]

என எழுதும் அப்பாத்துரையின் இக்கூற்றிலிருந்து மறுமலர்ச்சி இயக்க அறிஞர்கள் வடமொழி அறிஞர்களுக்குப் போட்டியாகச் செயல்பட்டதை உணரமுடிகிறது. மறுமலர்ச்சி இயக்கத்திற்கான வரலாற்றைக் கட்டமைக்கும் அப்பாத்துரை,

> "வரலாறு கண்ட முதல் நிலம் தமிழகம். ஆனால் அதற்கு இன்னும் முழுதுறழ் வரலாறு காணவில்லை. அது எந்நாட்டுக்கும் முற்பட்ட, எந்நாட்டையும்விட நீடித்த தொடர்ச்சியான வரலாறு உடையது. ஆயினும் உலகில் வரலாற்றாராய்ச்சி எழுந்த காலத்தில், அது நாடிழந்து, எல்லையிழந்து, மொழியாட்சி குலைந்து நின்றது. இன்னும் அது தனிநாடாகவோ, தனி மாகாணமாகவோ கூட அமையவில்லை. ஆயிர, பதினாயிரக்கணக்கான ஆண்டுகளாக, அது தன் மொழி வைத்துத் தன்னை ஆண்டிருக்கிறது. தன் மொழி வைத்து நிலவுலகும் கடலுலகும் ஆண்டிருக்கிறது. இந்நிலையை அது மீண்டும் விரைவில் அடைவது உறுதி. கனவுலகில் அத்தகைய தமிழகம் நம் கண்முன் இப்போதே சுடர்வீசுகின்றது. கனவுருவத் தவிசில் நாம் அதனை விரைவில் ஏற்றப்போவது திண்ணம். அத்தவிசின் தொடக்கப்படிகளில் ஒன்றாகவே நாம் தமிழகத்தின் வரலாறு காண முனைந்திருக்கிறோம்"[45]

என்று குறிப்பிடுகிறார்.

தேசியம், சனநாயகம், மதச்சார்பற்ற தன்மை ஆகியவற்றைக் குறிக்கோள்களாகக் கொண்ட திராவிட இயக்கம் மதசார்பற்ற இலக்கியத்தைத் தேடியது. அதற்குச் சரியாகக் கிடைத்த சங்க இலக்கியத்தை விதந்து விதந்து பேசியது. சங்க இலக்கியத்தின் வாயிலாகத் தமிழர் வரலாற்றைக் கட்டும் வேலையைச் செய்தது. க. அப்பாத்துரை,

> "நமக்குக் கிட்டும் வரலாற்றாதாரம் உலகில் வேறெந்த இனத்துக்கும் கிட்டாத ஒன்று. அது உலக வரலாற்றுக்கே ஒரு புதுத்திசை திருப்பியுதவ வல்லது. சங்க இலக்கியம் மூலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர் அரசியல், சமய, சமுதாய பொருளியல் வாழ்வை நாம் அறிவதுபோல், உலகில் வேறெந்த நாட்டவரும் எந்த மொழி, இலக்கிய மூலமாகவும், எந்தக் காலத்துக்கும் முழு வரலாற்றோவியம் காணமுடியாது. இதை எல்லா வரலாற்றாசிரியர்களும் ஒப்புக்கொண்டுள்ளனர்.

ஆனால் இதிலேயே தமிழர் நெடுநாள் சொக்கியிருந்துவிட்டனர் என்னலாம். புலமை சான்ற வரலாற்றாசிரியர் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககாலத் தமிழகம் பற்றி அணி அணியாக எழுதினர். நுணுக்க விரிவாக எழுதினர். ஆனால் அதன் பிற்பட்ட 1800 ஆண்டு வரலாற்றுக்கு அதுபோன்ற இலக்கியம் இல்லை. அது போன்ற வரலாறு நீண்ட நாள் எழுதப்படமுடியாது. இது உலக வரலாற்றிலே ஒரு புதிர் - உலக வரலாற்றுக்கே ஒரு புதிர் ஆகும்" [46]

எனச் சங்க இலக்கியத்தை வியந்து எழுதினார்.

கல்வெட்டு, பட்டயங்கள், நாணயங்கள் என வரலாற்றுக்குத் தேவையான ஆதாரங்கள் சான்றுகள் கிடைக்கும் பிற்கால வரலாற்றை விடச் சங்க கால வரலாறே நிறைவுடைய வரலாறு என்பார் அப்பாத்துரை. இதனை,

"கல்வெட்டு, பட்டயங்கள், நாணயங்கள் உதவியால் தமிழகத்துக்கு நாம் காணும் வரலாறு சென்ற ஆயிரமாண்டு வரலாறே. அது சங்க கால வரலாறு போல நிறைவுடைய தேசிய வரலாறு அல்லவே அல்ல" [47]

என்று எழுதுவதிலிருந்து அறிந்து கொள்ளமுடிகிறது.

குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு (1941), சங்க காலப்புலவர் (1947), சங்க இலக்கிய மாண்பு (1949), தென்னகப் பண்பு (1961), தென்னாட்டுப் போர்க்களங்கள் முதலான நூல்களில் சங்க இலக்கியம் பற்றியும், தமிழரின் தனிப்பெரும்பண்புகள் பற்றியும் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்துக்கான தேவை கருதி எழுதுவதைக் காணமுடிகிறது.

#### 4.9.5. சி.என். அண்ணாத்துரை

சங்க இலக்கியத்தைப் பாமர மக்களிடத்துக் கொண்டு சேர்த்த செயலைத் திராவிட இயக்கம் முன்னின்று நடத்தியது. திராவிடநாடு கோரிக்கை, மதச்சார்பற்ற போக்கு முதலான திராவிட இயக்கக் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்ய சங்க இலக்கியத்தை அது சரியாகப் பயன்படுத்திக் கொண்டது. தங்களின் அரசியல் தேவையை நிறைவேற்ற சங்க காலத்தின் வளமார்ந்த சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டி அவற்றோடு சமகாலத் தமிழகத்தின் வறுமைநிலையை ஒப்பிட்டது. இப்படித் திராவிட இயக்கத்தின் வளர்ச்சிக்குச் சங்க

இலக்கியத்தைப் பயன்படுத்திய போக்கைச் சி.என். அண்ணாத்துரையின் எழுத்துக்கள் வெளிப்படுத்துகின்றன.

தனித்தமிழுக்கு விளக்கம் கூறப்புகுந்த அண்ணாத்துரை,

"தமிழ் இன்று தமிழும் ஆரியமும் கலந்த புதுத்தமிழாகி வருகிறது. புதுத்தமிழாய் அது வளர்கிறதா என்றால், இல்லை, தேய்கிறது. இந்தத் தேயும் தமிழை நிறை தமிழாக்க வேண்டுமானால் நாம் என்ன செய்யவேண்டும்? கூட்டிய கேட்டைக் குறைக்க வேண்டும். நம் பள்ளிப் பிள்ளைகள் கணக்குப் போடும் முறையில் கூறினால்,

தமிழ் - ஆரியம் = திராவிடம்" [48]

எனத் தனக்கே உரிய தனித்தன்மையுடன் விளக்கம் தருவதைக் காணமுடிகிறது. இப்படித் திராவிட இன உணர்வை வளர்க்கும் பணியில் ஈடுபட்ட அண்ணாத்துரை, சங்க இலக்கியத்தை வெகுசனங்களுக்கு உரியதாக மாற்றாமல் இருந்த நாவலர்களையும், புலவர்களையும் சாடுவதைக் காணமுடிகிறது.

"நாவலர்களும், பாவலர்களும் சங்க இலக்கியங்களைச் சுற்றி நாலு பக்கமும் வேலிகள் அமைத்து இங்கு எட்டாத அளவுக்கு எட்டடி உயரத்தில் தடுப்புச் சுவரை எழுப்பி வைத்துக்கொண்டும் "உள்ளே ஆடுது, காளி, வேடிக்கைப் பார்க்க வாடி" என்பது போலத் 'தொல்காப்பியத்தைப் பாரீர். அதன் தொன்மையைக் காணீர்' என்றால் அதனிடம் யார் அணுகுவார்? சங்க இக்கியங்களை வீட்டை விட்டு வெளியேற்றி, நாட்டிலே நடமாட விட வேண்டும். நடன சுந்தரிகளாகச் சிறு சிறு பிரதிகள் மூலம், தொல்காப்பியக் கருத்துகளைத் தொகுத்து வெளியிட்டால்தான் தொல்காப்பியம் சிறு சிறு குழந்தைகளாக ஒவ்வொருவருடைய மடியிலேயும், மனத்திலேயும் தவழும். ஒவ்வோர் இல்லமும் இலக்கியப் பூங்காவாகக் காட்சியளிக்கும். இன்றைய புலவர்கள், உண்மையிலேயே இனிமையையும், எளிமையையும் சங்க இலக்கியத்துடன் சேர்த்து மக்களுக்கு ஊட்டியிருப்பார்களானால், சங்க காலப் புலவர்களைப் போற்ற வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்குமானால், அவர்கள் ஒவ்வோர் இல்லத்தையும் இலக்கியப் பூங்காவாக்கும் உழவர்களாக இருந்திருக்கவேண்டும். ஆனால், அப்படியில்லை என்பதை நினைக்கும்பொழுதுதான் அவர்கள் இவ்வளவு நாள்களாக

நாட்டுக்குச் செய்தது தொண்டு அல்ல; துரோகம் என்று எண்ண வேண்டியிருக்கிறது"[49]

இதுபோன்ற திராவிட இயக்கத்தினரின் பேச்சுக்கள், சங்க இலக்கியம் பற்றிய நூல்கள் பெருமளவுக்கு வெளிவரக் காரணமாக இருந்தன. படித்தவர்களை எல்லாம் எளிய விளக்கங்கள், வசனம், தமிழர்களின் மாண்பு என்ற முறையில் சங்க இலக்கியம் பற்றி ஒன்றிரண்டு புத்தகங்கள் எழுதத்தூண்டின எனலாம்.

சமகாலத் தமிழகத்தின் தாழ்ந்த நிலைக்கும், சங்க காலத் தமிழகத்தின் உயர்ந்த நிலைக்கும் காரணம் கற்பிக்கின்ற நிலையை அண்ணாத்துரையின் எழுத்துக்களில் காணமுடிகிறது.

"அன்னாய் வாழி வேண்டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமுகப் போலத் தாமுங்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடனூர்ந்த மாவே" (ஐங்குறுநூறு)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலைக் கொண்டு பார்ப்பனரின் குடுமித்தலையைக் கிண்டல் செய்கிறார். குதிரைக்குத் தலையிலே குடுமி ஆடினால் பார்ப்பனர் தலையின் குடுமி நினைவுக்கு வந்து சிரிப்பு உண்டாவதாகத் தலைவி கூறுவதாகக் குறிப்பிடுகிறார். இதன் மூலம், பார்ப்பனர் சங்க காலத்தில் நகைப்புக் குரியவர்களாக இருந்தனர். இன்றோ முதன்மைதரப்படுகிறது என்ற கருத்தை முன்வைக்கிறார். இதனை,

"ஒரு காலம் இருந்தது. தமிழர்கள் ஆரியரை நகைப்புக்குரிய நடமாடும் உருவங்களாகக் கருதிய காலம். ஆரிய இனம் வேறு என்ற எண்ணம் மங்காதிருந்த காலம். ஆரியத்தைக் கேலிக்கூத்தாகக் கருதிய காலம்! இன்றோ, ஆரியரைப் போன்ற புத்திக்கூர்மை, ஆசார அனுஷ்டானம், நேம நிஷ்டை, பூஜை புனஸ்காரம், நடையுடை பாவனை இருப்பதே தமிழருக்குச் சீலத்தையும் தரும் என்ற தவறான கருத்துத் தழைத்துக்கிடக்கிறது! காலம் முளைக்கச் செய்த இந்தக் கள்ளி படர்ந்திருப்பதாலேயே, நாச நச்சரவுகள் இங்கு நடமாடித் தமிழர் சமுதாயத்தைத் தீண்டித் தீய்த்து வருகின்றன!"[50]

என்று குறிப்பிடுவதன் மூலம் அறிய முடிகிறது. இந்த ஒப்பிட்டுப் பேசும் போக்கை,

"யவன நாட்டுக் கலங்கள் தமிழ்நாட்டுக் கடற்கரையை முத்தமிட்டன. தமிழ்நாட்டு முத்துக்களை இத்தாலி நாட்டு எழிலரசிகள் தங்கங்களைக் கொடுத்து வாங்கினார்கள்; தமிழ்நாட்டு மன்னன் ஒருவன் ஈழநாடு சென்று வெற்றிபெற்றான்; இமயத்தில் சேர, சோழ, பாண்டியர்களது இலச்சினைகள் பொறிக்கப்பட்டன. தமிழர்களை எதிர்ப்பவர்கள் கிடையாது; எட்டுத்திக்கும் வெற்றிமுரசு கொட்டினார்கள்; போரும் காதலும் அவர்கள் போற்றிய பொருள்கள்" என்றெல்லாம் பண்டைத்தமிழ்நாட்டின் நிலையைப் பற்றி எடுத்துக் கூறினால்தான், பாமர மக்களும் நாம் ஆசைப்படுவது போல மீண்டும் தமிழ்நாட்டில் செல்வம் தழைக்க வேண்டும், நல்லெண்ணங்கள் நினைக்க வேண்டும் என்ற நினைப்பைப் பெறமுடியும்"[51]

என்று கூறுவதன் மூலம் உணரமுடிகிறது. அத்துடன் பாமர மக்களைக் குறிவைத்து வளமார்ந்த தமிழகம் படம் பிடிக்கப்படுவதையும் தெளிய முடிகிறது. தங்கள் இயக்கத்தின் பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்துவதைக் கீழ்க்காணும் கூற்றால் அறிய முடிகிறது.

"சங்க காலத்திலுள்ள தமிழ் நாட்டின் நினைப்புக்கு இந்நாள் தமிழ்நாட்டின் நினைப்பு எவ்வளவோ தாழ்ந்திருக்கிறது. எனது வாதத்திற்குத் துணையாக அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, பட்டினப்பாலை, தொல்காப்பியம் ஆகியவற்றைச் சாட்சிக்கழைக்கிறேன். இக்காலத்தில் உலவும் நாசத்தை விளைவிக்கும் நம்பிக்கைகளை அக்காலத்தில் எப்படிக் காணமுடியும்? அகநானூறு, புறநானூறுகளில் எந்தத் தமிழ்நாட்டு மன்னனாவது போருக்குக் கிளம்பும் பொழுது, படை கிளம்பும் முன் யாகம் செய்தான் என்றோ, பரமசிவத்திடம் பாசுபதம் பெற்றான் என்றோ, எங்கேயாவது பாடலுண்டா? அல்லது படை கிளம்பி எதிரிகளுடன் போரிடும்பொழுதாவது வருணாஸ்திரம், வாயுவாஸ்திரம், மோகனாஸ்திரம், அக்கினியாஸ்திரம் ஆகிய அஸ்திரங்களில் எந்த அஸ்திரமாவது எதிரியை வீழ்த்தியபோது உதவியதாக எங்காவது பாடல் இருப்பதாகச் சொல்ல முடியுமா?..." [52]

இப்படித் திராவிட இயக்கத்தினர் தங்களின் இயக்க வளர்ச்சிக்குச் சரியாகச் சங்க

இலக்கியத்தைப் பயன்படுத்திக்கொண்டனர். திராவிடத்தின் பெருமை பேசும் அண்ணாத்துரை,

"திராவிட மன்னர்கள், தருமராஜன்போல் நாட்டைச் சூதாட்டத்தில் தோற்றதில்லை. அரிச்சந்திரன் போல் நாட்டை முனிவருக்குத் தானம் செய்ததில்லை.

திராவிடக் கவிஞர்கள், அதல சுதல பாதாளமெனப் பொய்யுரைகளை எழுதியதில்லை. கண்ட கண்ட உருவெடுத்தார் கடவுள் எனக் கதை நீட்டியதில்லை. காலடியில் புரண்டு தொழுதல் கடாட்சம் என்று கூறவில்லை. ஒன்றே குலமும், ஒருவனே தேவனும் என்றனர்.

திராவிடர், உயிர் வாழ, மானத்தை இழந்ததில்லை. உறுதியின்றி உலுத்தராய் இருந்ததில்லை. சூது, சூழ்ச்சியை ஆயுதமாகக் கொண்டதில்லை. சுதந்திர வாழ்வுக்காக உயிரையும் தந்தனர்" [53]

இப்படித் திராவிடம், ஆரியம் என்ற அடிப்படையிலான பேச்சு சங்க இலக்கிய வாசிப்புக்கள் பெருமளவில் தொடர்ந்து வெளிவர உதவின எனலாம். சேரர் வரலாறு, சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு, கடையெழு வள்ளல்கள் சரித்திரம், என்றும், தனித்தனியாக மன்னர்கள், புலவர்களைப் பற்றியுமான சங்க இலக்கிய ஆய்வுகள் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் காரணமாகத் தொடர்ந்து வெளிவந்தன.

**4.9.6. மு. வரதராசன்**

அண்ணாத்துரை விரும்பிய சங்க இலக்கியம் பற்றிய சிறு சிறு வெளியீடுகள் மிகுதியாக வெளிவரத் தொடங்கின. இவ்வகையில் குறிப்பிடத்தக்கவராக விளங்கியவர் திராவிட இயக்கச் சிந்தனையாளரான மு. வரதராசனார் ஆவார். தமிழரின் ஒழுக்கம் மிகுந்த வாழ்க்கை பற்றியும், அவர்களின் தூய்மையான காதல் பற்றியும், செறிவான வீரம் பற்றியுமான நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டார். ஓவச் செய்தி (1946), தமிழ் நெஞ்சம் (1947), முல்லைத்திணை (1952), நற்றிணை விருந்து (1953), குறுந்தொகை விருந்து (1953), நெடுந்தொகைச் செல்வம் (1954), நெடுந்தொகை விருந்து (1954), மணல் வீடு (1954), குறுந்தொகைச் செல்வம் (1955), நற்றிணைச் செல்வம் (1958), குருவிப்போர் (1965),

இலக்கியத்திறன் (1965), இலக்கியக் காட்சிகள் (1968) ஆகிய நூல்களின் மூலம் திராவிட இயக்கக் கருத்துக்களை மக்களிடம் கொண்டு செல்லும் பணியைச் செய்தார். இந்நூல்கள் பாமரர்களுக்கு ஏற்ற விதத்தில் எளிமையான நடையை உடையனவாக எழுதப்பட்டுள்ளன எனலாம். சான்றாக,

"சங்க இலக்கியம் என்றால் என்ன என்று அறியாதவரும், அந்தத் தொடரைக் கேட்டறியாதவரும் பலர். இந்த நிலை தமிழகத்தில் இனியும் நீட்டித்தல் நன்றன்று. சங்க இலக்கியம் என்றால், எமது எமது என்று பெருமிதத்துடன் எண்ணும் நெஞ்சமும், கூறும் நாவும் இனி மிகுதல் வேண்டும்." [54]

என்று எழுதுவதன் மூலம், சங்க இலக்கியத்தை வெகு சனங்களுக்கான இலக்கியமாக மாற்ற வேண்டும் என்ற அவருடைய ஆர்வம் வெளிப்படுகிறது. இன்னும், இலக்கியம் பற்றிய அவருடைய ஆழமான புரிதலை,

"எவ்வளவு சிறப்பு வாய்ந்த இலக்கியமாயினும், அதன் எதிர்காலம், கற்கும் மக்களைப் பொறுத்தே அமைகின்றது. ஒருபுறம், அதனை ஆழ்ந்து கற்று உணரும் புலவரும் வேண்டும். மற்றொரு புறம், அதன் கருத்தை உணர்ந்து போற்றிப் புகழும் பொதுமக்களும் வேண்டும். பொதுமக்களின் உள்ளத்தில் இடம்பெறாமல், புலவர் நெஞ்சில் மட்டும் வாழும் வாழ்வு போதாது. பொதுமக்களின் புறக்கணிப்பு, இலக்கியத்தின் எதிர்கால வாழ்வுக்கு இடையூறாகும்" [55]

என்ற கூற்று வெளிப்படுத்துகிறது. மக்களிடம் சங்க இலக்கியத்தை கொண்டுசெல்ல வேண்டும் என்ற தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் குணம் இங்கே செயற்படுவது தெரியவருகிறது எனலாம்.

**4.9.7. கா. கோவிந்தன்**

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் மற்றொரு போக்கு, தமிழர் பெருமை பேசும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதலாகும். இம்முறையில் கா. அப்பாத்துரை, கனகசபையாரின் 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்' என்ற நூலைத் தமிழில் வெளியிட்டார். மறுமலர்ச்சி இயக்கத்தினரில் அடுத்து குறிப்பிடத் தக்கவர் கா. கோவிந்தன் ஆவார். இவர் பி.டி. சீனிவாச ஐயங்கார் எழுதிய தமிழர் வரலாறு

(History of the Tamils) என்ற ஆங்கிலநூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர் ஆவார்.

ஆய்வுநூல் வரிசையில் கா. கோவிந்தனின் முதல் நூலாக வெளிவந்தது 'திருமாவளவன்' (1951) ஆகும். மு. இராகவையங்கார், நீலகண்ட சாஸ்திரி ஆகியோரின் நூல்களைப் படித்தபோது ஏற்பட்ட முரண்பாடுகள் காரணமாகவே இந்நூலை எழுதியதாகக் குறிப்பிடுகிறார். இந்நூலில் கரிகாலன் காலம், முதல் நூற்றாண்டு என முடிவுசெய்கிறார். அக்கூற்றாவது,

"சங்க இலக்கிய காலம் ஐந்தாம் நூற்றாண்டே என்று கொள்வார், தமக்கு ஆதாரமாகக் கூறிய சான்றுகள் ஏற்கும் தகுதியற்றன என்பது தெளிவாகவே, தாலமி, பிளினி போன்ற பிறநாட்டு நிலநூல் ஆசிரியர்கள் அளிக்கும் குறிப்புக்களும், இலங்கை வரலாறு மகாவம்சமும், சிலப்பதிகாரமும் அளிக்கும் குறிப்புக்களும் சான்றாகக் கொண்டு, சங்க காலம் இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததே என்று முன்பு முடிவு செய்ததே உறுதியாக்கப்பட்டது. எனவே, கரிகாலன் காலம் கி.பி. முதல் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதன்று என்பது துணியப்பட்டது" [56] என்பதாகும்.

கா. கோவிந்தன், இதே அடிப்படையில் தமிழ்ப்புலவர்கள், அரசர்களின் காலம்பற்றிய பின்னணியுடன் அவர்களின் வரலாற்றைச் சங்க இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கும் வேலையைச் செய்தார். சங்கப் புலவர் வரிசை (6 பகுதிகள்) (1953, 54) என்ற நூலில் தமிழ்ப் புலவர்களான, கபிலர், பரணர், நக்கீரர், ஔவையார், பெண்பாற்புலவர்கள், உவமையாற் பெயர் பெற்றோர் என்ற முறையில் தமிழ்ப்புலவர் வரலாறுகளைத் தொகுத்தளித்தார். 'சங்க கால அரசர் வரிசை' (இரு பகுதிகள் - 1954) என்ற நூலில் சேரர், சோழர், பாண்டியர், வள்ளல்கள், அகுதை முதலிய 44 பேர்கள், திரையன் முதலிய 29 பேர்கள், ஆகியோரின் வரலாற்றை எழுதினார். சேரமன்னர்கள் 25 பேர் வரலாறுகளையும், சோழ மன்னர்கள் 21 பேர் வரலாற்றையும், பாண்டியமன்னர்கள் 25 பேர் வரலாற்றையும் இந்நூலில் விளக்கினார். இதன் மூலம் சங்க இலக்கியம் பற்றிய காலம் தேடுதல், வரலாறு எழுதுதல் என்ற மறுமலர்ச்சி இயக்கத்தினரின் பணி இங்கே தொடரப்படுவதைக் காணமுடிகிறது.

'பண்டைத் தமிழரின் போர் நெறி' என்ற இவரது நூல் புறத்திணையியலின் உரையாக

விளங்குகிறது. இதில் தமிழர்களின் போர் முறை சென்று தாக்கியது அல்ல. நின்று தாங்கிய போர்கள் என்ற முறையில் விளக்கியுள்ளார். அனைத்து மக்களுக்குமான எளிய உரைகளைக் கொடுத்தல் என்ற மறுமலர்ச்சி இயக்கச் சிந்தனையுடன் தொடர்ந்து இவருடைய நூல்கள் வெளி வருகின்றன. தமிழர் வாழ்வு (1956), நற்றிணை (1956), குறிஞ்சிக் குமரி (1965), மருதநில மங்கை (1956), பாலைச் செல்வி (1956), முல்லைக் கொடி (1957), காதல் கன்னி (1958), நெய்தல் கன்னி (1958), குறுந்தொகைக் கோவை (1959) முதலான இவருடைய நூல்கள் எளிய உரைகளாகும்.

**4.9.8. அ. சிதம்பரனார்**

'சேரர் வரலாறு' என்னும் நூலை எழுதிய அ. சிதம்பரனார் கி.மு. 30,000க்கும் - கி.பி. 834க்கும் இடைப்பட்டவர்களாகச் சேரமன்னர்களின் காலத்தை நிர்ணயிக்கிறார் இந்நூலில் உதியன் குடும்பம் என 34 சேரரும், பொறையன் குடும்பம் என்று 18 சேரமன்னர்கள் வரலாறும் கூறப்பட்டுள்ளது. இவர்களின் காலத்தை நூலின் பின்னால் அட்டவணையாகக் கொடுத்துள்ளார். சேர, சோழ, பாண்டியர் பன்னெடும் காலமாக இந்திய நிலப்பகுதி முழுமையும் பிடித்து ஆட்சி செய்தனர் என்பது இவர் கருத்தாக இருக்கிறது. தொன்மையை நிலைநாட்டுதல் என்ற மறுமலர்ச்சி இயக்கத்தினரின் செயல் இங்கே காணப்படுகிறது எனலாம்.

**4.9.9. ம.ரா.போ. குருசாமி**

'சங்க காலம்' என்ற நூலை எழுதிய ம.ரா.போ. குருசாமி சங்க காலத்தின் தொன்மையையும், தமிழரின் காதல், வீர வாழ்க்கையையும் வியந்து போற்றுகிறார். ஆரியர்கள் திராவிடருடன் இணைந்து வாழ்ந்து பண்பாட்டுக் கலப்பு வழியாக வெற்றி பெற்றதாகக் கூறும் மு.வ.வின் கருத்தை (மு.வ.,மொழி வரலாறு, ப.381) ஏற்றுக் கொள்கிறார். சங்க இலக்கியம்தான் தமிழரின் தனிச்சிறப்பை இன்றும் நமக்கு எடுத்துக்காட்டுவதாக விளங்குகிறது என்று மதிப்பிடுகிறார். அவருடைய மதிப்பீடு வருமாறு,

"படைகளின் மூலம் ஒரு நாட்டை வெல்லுதலைவிட, பண்பாட்டு வழியாக ஒரு நாட்டை வெல்லுவதுதான் உண்மையான வெற்றி. இதனைவிடச் சிறந்த சான்று வேறு தேவையில்லை. கடவுள் வழிபாடு முதல் காதலொழுகலாறு வரை, வீட்டுத் தனிவாழ்க்கை முதல் நாட்டுப் பொதுவாழ்க்கை வரை இலக்கிய மரபு முதல் இலக்கண

விதிகள் வரை படிப்படியே தமிழினத்தின் தனித்தன்மை உருவம் கரந்து வந்துளது. நல்ல வேளையாக, தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் தமிழினத்தின் தனித்தன்மையைப் பிரித்துணர்ந்து கணிப்பதற்கு ஒருவாறு துணை செய்ய வல்லனவாய் அமைந்துள்ளன. அவையும் இல்லாமல் அழிந்திருக்குமானால் சங்க காலத்தின் தனிமாண்பும், தமிழ்ப் பண்பாட்டின் தனித்தன்மையும் புலப்படாமலே போயிருக்கும்" [57] என்பதாகும்.

### 4.9.10. மறைமலையடிகள்

தனித் தமிழில் பேசவேண்டும் எழுத வேண்டும் என இயக்கம் கட்டியவரான மறைமலை அடிகள், தாம் முன்னர் பதிப்பித்த நூல்களை மறுவெளியீட்டின் போது தனித்தமிழில் வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டார். பட்டினப் பாலை ஆராய்ச்சி உரை (1957), முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர் (1957), முல்லைப்பாட்டு ஆராய்ச்சி (1958) என்ற இவரது நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும். சென்னைக் கிறித்துவக் கல்லூரி மாணவர்களுக்கெனப் பட்டினப்பாலை, முல்லைப்பாட்டு போன்றவற்றுக்கு உரை எழுதினார். தனித்தமிழில் எழுதவேண்டும் என்ற இவருடைய நோக்கத்தை,

> "நம்மனோரிற் கற்றவராயிருப்போர் ஆரியம், ஆங்கிலம் முதலான பிற மொழிச் சொற்களைக் கலவாமற் தனித்தமிழிற் பேசவும் எழுதவும் கடைப்பிடியாய்ப் பழகிவரல் வேண்டும். இதனை முன் நடந்து காட்டும் பொருட்டு, இதற்கு முன் யாம் எழுதிய நூல்களிற் புகுந்த சிற்சில அயன்மொழிச் சொற்களையும் அந்நூல்களைத் திரும்பப் பதிப்பிட்டு வரும் இப்போது முழுதுங் களைந்துவிட்டு, அவை நின்ற இடத்திற் றூய தமிழ்ச்சொற்களையே நிரப்பி வருகின்றோம்" [58]

என்ற கூற்றால் அறிந்துகொள்ளமுடிகிறது. இப்படித் தமிழ் மொழியில் எழுத வேண்டும், பேச வேண்டும், அதற்கேற்ப விளக்கம் கொடுத்தல் என்ற மறுமலர்ச்சி இயக்கச் செயல்பாடுகளை முன்னின்று நடத்தியதைக் காணமுடிகிறது.

### 4.9.11. தேவநேயப் பாவாணர்

இந்தப் போக்கில் தொடர்ந்து குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுபவர் தேவ நேயப் பாவாணர் ஆவார். திராவிடத்தாய் (1944), பழந்தமிழாட்சி (1952), தமிழ் வரலாறு (1967),

பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும் (1966) தமிழக வரலாறு முதலான நூல்களின் மூலம் மொழித் தூய்மை பேணுதல் என்ற மறுமலர்ச்சி இயக்கத்தாரின் செயலைத் தொடர்ந்து மேற்கொண்டார். ஒரு சொல்லுக்கான வேரைத் தேடி அதனைத் தமிழ்ச் சொல் என்று நிறுவுவது இவருடைய போக்காகும். இப்படித் தமிழ் மொழிப் பற்றிய ஆய்வில் குறிப்பிடத்தக்கவராகிறார். தமிழ் மேம்பாட்டுக் கொள்கையுடையவரான தேவநேயப்பாவாணர், இந்தியா முழுவதும் ஒரு காலத்தில் திராவிடமொழியே தழைத்திருந்தது என்றும், ஆரியரின் வருகையாலும், கலப்பாலும் அது தெற்கு நோக்கி வந்தது என்றும் கூறுகிறார். இவருடைய கூற்றாவது,

"இன்றும் தென்னாட்டில் ஓரளவு செவ்வையாய்ப் பேசப்படும் தமிழ் வடக்கு நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து முதலாவது கொடுந்தமிழாயும் பின்பு திராவிடமாயும் திரிவதையும், திராவிடமும் ஆரியக் கலப்பால் காலாரியமாய் மாறுவதையும், அதற்கப்பால் முறையே அரையாரிய மொழிகளும் முழு ஆரிய மொழிகளும் வழங்குவதையும், ஆரியர் பழங்குடிச் சொற்களையெல்லாம் அகற்றிவிட்டு அவற்றிடத்தில் ஆரியச் சொற்களையே வழங்குவதில் கண்ணும் கருத்துமாயிருந்து இக்கேட்டுத் தொழிலை வடக்கிருந்து தென்கோடி வரை செய்து வருவதையும் நோக்கின், முதற் காலத்தில் ஒரு மொழியே நாவலந் தேய முழுதும் தென்கோடியிலிருந்து வடகோடி நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து வழங்கிய தென்பதையும், ஆரியக் கலப்பில்லாவிட்டால் இன்றும் வடநாட்டில் திராவிடமே வழங்கும் என்பதையும் உய்த்துணரலாம். ஒரு மொழியே சிறிது சிறிதாய்ப் பெயர்ந்து வழங்கியமையாலேயே, வடநாடுகளை வேற்றுமொழி நாடென்னாது 'மொழிபெயர் தேயம்' என்றனர் முன்னோர். "மொழிபெயர் தேஎத்தராயினும்" (குறு. 11)" [39]

என்று எழுதுகிறார். இங்கே அவருடைய தமிழ் மேம்பாட்டுக் கொள்கை உறுதியாகச் செயல்படுவதைக் காணமுடிகிறது எனலாம்.

பழந்தமிழரின் திணை நிலைவாழ்க்கை, காதல், கற்பு, வீரம் என்ற பண்புகளைத் தமிழ்ப் பண்பாட்டுக்கே உரிய தனிச்சிறப்பாகப் பேசுவதைத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் கொண்டிருந்தனர். வ.சுப. மாணிக்கத்தின் தமிழ்க்காதல், இரா.நெடுஞ்செழியனின் கலித்தொகை தரும் காதற்காட்சிகள் (1955), புறநானூற்றுப் பாதையில் (1961), ந.

சுப்புரெட்டியாரின் காதல் ஓவியங்கள், குமரி.அ.கி. அனந்தனின் கலித்தொகை இன்பம் (1964) முதலியன குறிப்பிடத்தக்கனவாகும். மு. கருணாநிதியின் சங்கத் தமிழ் பாமர மக்களைக் குறி வைத்துத் தமிழரின் காதலையும், வீரத்தையும், பண்பாட்டையும் போற்றி எழுதப்பட்ட நூலாகும்.

இரா. நெடுஞ்செழியன், 'நற்றிணைக் காட்சிகள்' என்ற நூலில் நற்றிணையில் இடம்பெறும் 34 பாடல்களுக்கு எளிய நடையில் கதைபோன்று விளக்கம் தருகிறார். இப்பாடல்களுக்கு விளக்கம் தரும்போது தம்முடைய இயக்க வளர்ச்சிக்கு ஏற்றவிதத்தில் செயல்படுவதைக் காணமுடிகிறது. சான்றாக 'இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி' எனத் தொடங்கும் நற்றிணை 45-வது பாடலை விளக்கும் போது,

"தோழி : நீரோ அரசரின் மகனாவீர்; அவளோ மீன் வலைஞரின் மகள்! உம்முடைய குலமோ உயர்ந்தது; அவளுடைய குலமோ தாழ்ந்தது. இரண்டு குலத்திற்கும் எப்படி பொருத்தம் ஏற்பட முடியும்?

தலைவன் : நான் அவளின் வற்றாக் காதலன்பைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேனே யல்லாமல், அவளது குலத்தைப் பற்றிக் கவலைப் படவில்லையே!" [60]

என எழுதி, உயர்வு-தாழ்வு, மேல்குலம்-தாழ்குலம், பணக்காரன்-ஏழை போன்ற வேற்றுமை கருதப்படாமல் காதற்கலப்பு மணம் பண்டைத் தமிழகத்தில் சிறக்க நடந்துகொண்டிருந்தது என்பதற்கு, இது சீரிய எடுத்துக்காட்டாகும் என்று விளக்குகிறார். இங்கே திராவிட இயக்கத்தின் கலப்புமணக் கொள்கைக்கு ஆதரவு சேர்ப்பதைக் காணமுடிகிறது.

மு. கருணாநிதி, சங்கப் பாடல்களில் தம்மைக் கவர்ந்த நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து இன்றைய மொழிநடைக்கு மாற்றிப் பாமர மக்களும் படித்துச் சுவைக்கும் வண்ணம் எழுதியுள்ளார். இந்நூல் சங்கத் தமிழ் என்ற பெயரில் வெளிவந்துள்ளது. சான்றாகக் கலித்தொகை : முல்லைக்கலியில் இடம் பெறும்,

"கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே, ஆயமகள் தோள் ..."

என்கிற பாடல் அடிகளை,

"முட்ட வரும் காளையின் கொம்பு கண்டு அஞ்சுவோனை
மொட்டழகு முல்லைநில மங்கையவள்
இப்பிறப்பில் மட்டுமல்ல; பின்னுமோர்
பிறப்பு உண்டென்று சொன்னால்
அப்பிறப்பிலும் அண்டவிடேன் என்றுரைப்பாள்!" [61]

என எளிமையாக்கித் தருவதைக் காணமுடிகிறது. இங்கே, 'பின்னுமோர் பிறப்பு உண்டென்று சொன்னால்' எனத் தம்முடைய பகுத்தறிவுக் கொள்கைக்குக் குறைவராமல் எழுதிச் செல்வதைக் காணமுடிகிறது. இவ்வாறு, திராவிட இயக்கத்தின் சிந்தனை வெளிப்பாடுகளாகச் சங்க இலக்கிய நூல்கள் வெளிவந்தன எனலாம்.

**4.9.12. ச. சோமசுந்தர பாரதியார்**

திராவிட இயக்கச் சிந்தனைகளின் அடிப்படையில் நூல்களை எழுதியவர் ச.சோமசுந்தர பாரதியார் ஆவார். பழந்தமிழ் நாடு (1955) நற்றமிழ் (1955), சேரர் தாயமுறை (1960) முதலான நூல்களின் மூலம் ஆரியத்துக்கு முற்பட்ட பழந்தமிழ் நாகரிகத்தின் பெருமைகளை எழுதினார்.

"... அளவிட்டறிய வொண்ணா அரும்பழங்காலத்துப் பெருந்தமிழ் நாட்டில், ஆரியத்தின் வேறுபட்ட சீரியக் கலைச்சிறப்பும், செம்பொருட் செய்யுட் செல்வமும் நிறைந்து சிறந்த தமிழ் வழக்கிற்றென்பது வரலாறறியாத் தற்காலத் தமிழர் சிலர் ஐயுறினும், ஆரிய நூல்களும் பிற அயன்மொழிச் செய்யுட்களும் நற்சான்று கூறி வற்புறுத்தும் உண்மையாகும். எனவே, ஆரியர் இங்கு வருவதற்குப் பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே இந்நாட்டில் செல்வமும் புகழும் சிறக்க வாழ்ந்தவர் தமிழர்;"[62]

எனத் தமிழின் பெருமை பேசுவார் ந. சோமசுந்தரபாரதியார்.

**4.9.13. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை**

ந.மு. வேங்கடசாமி நாட்டார் தமிழகத்தின் பழைய வரலாறு நாகரிகம் முதலியவற்றை விளக்கும் போக்கில் நக்கீரர் (1919), கபிலர் (1921), சோழர் சரித்திரம் (1928) முதலான நூல்களை வெளியிட்டார். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை சேர மன்னர் வரலாறு (1957) என்ற நூலை

வெளியிட்டார். இந்நூலின் மூலம் சேரமன்னர்கள் பற்றிய வரலாற்றை விளக்கி அதன் மூலம் சங்க இலக்கிய காலம் இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டன அல்ல என்ற முடிவைத் தருகிறார்.

"மேனாட்டு யவனர்களும் வடநாட்டு வடநூல்களும் கூறுவனவற்றால் சேரரது தொன்மை வேத காலத்தையே விளக்கியிருந்தமை தெளிவாயிற்று. சங்க இலக்கியங்களுள் சேரர்கள் சார்பாக நிற்கும் பாட்டுக்களிற் காணப்படும் ஊர்களும் நிகழ்ச்சிகளும் கிரேக்க யவனர் குறிப்புக்களிலும் ஒப்பக் காணப்பெறுகின்றன. அக்குறிப்புக்களின் காலம் கி.பி. முதலிரண்டு நூற்றாண்டில் நிலைபெறுகிறது. அவற்றுட் சில சங்க இலக்கியங்களில் காணப்படாத குறிப்புகளை உணர்த்துமாற்றால், காலத்தால் சங்கவிலக்கியங்கட்குப் பிற்படுகின்றன. படவே, சங்க இலக்கியங்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டன அல்லவென்று உறுதியாகிறது"[63]

எனச் சங்க இலக்கியத்தின் காலத்தை முடிவு செய்கிறார்.

**4.9.14. மயிலை. சீனி. வேங்கடசாமி**

மயிலை. சீனி. வேங்கடசாமி, தமது 'சேரன் செங்குட்டுவன்' (1966) என்ற நூலில் சேர மன்னர்களின் வரலாற்றை ஆராய்கிறார். பதிற்றுப்பத்தை அடிப்படையாகக் கொண்டு சேரர் பரம்பரையைப் பட்டியலிடுகிறார். சேரன் செங்குட்டுவனின் காலத்தைக் கி.பி. 130 முதல் 185 வரை என அறுதியிட்டு அந்த அடிப்படையில் மற்ற சேரமன்னர்களின் காலத்தை முடிவு செய்கிறார். சேர மன்னர்கள் மிகவும் ஒற்றுமையானவர்கள் என்ற கருத்தை வெளியிடுகிறார்.

"சோழ அரசர்களுக்கு நேர்மாறாகச் சேர அரசர் தங்களுக்குள் ஒற்றுமையாக இருந்தனர். சேர அரசர்களில் தாயாதி அரசர்கள் கூடச் சண்டையிட்டுக் கொள்ளவில்லை. சேர அரசர் தங்களுக்குள் போர் செய்து கொண்டதைச் சங்க நூல்களில் காணக் கிடைக்கவில்லை. சேர அரசர் ஒற்றுமையாக இருந்த காரணத்தினால்தான் கொங்கு நாட்டையும் துளு நாட்டையும் கைப்பற்ற முடிந்தது"[64] என்று எழுதுகிறார்.

இளவழகனார், 'பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை (1945), லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், பத்துப்பாட்டு வளம் (1968), சி. இலக்குவனார், பழந்தமிழ் (1962) எனத் திராவிட

இயக்கச் சிந்தனையின் தொடர்ச்சியாகச் சங்க இலக்கிய ஆய்வுகள் வெளிவந்தன.

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் வருகையால் வேகமாக வெளிவரத் தொடங்கிய சங்க இலக்கிய ஆய்வுகள் இன்றுவரையில் தொடர்ந்து வெளிவந்துகொண்டிருக்கின்றன. இதன் காரணமாகச் சங்க இலக்கியம் மறுவாசிப்புக்கு உள்ளாக்கப்படுகின்றது.

## 4.10. கருத்துரை

1. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் தோற்றத்தால் சங்க இலக்கிய ஆய்வுகள் வேகமாக வெளிவரத் தொடங்கின.

2. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் சங்க இலக்கியத்தை அச்சில் கொண்டு வரும் பணியில் ஈடுபட்டனர். மறுபதிப்புக்கள் வேகமாக வெளிவந்தன.

3. ஆரியர், திராவிடர் என்ற கருத்துக்கள் மேலோங்கிய சூழலில், வடமொழிக் கலப்பற்ற தமிழர் வரலாறு எழுத ஆரம்பித்தனர். அதன் காரணமாகச் சங்க இலக்கியம் பற்றிய கால ஆராய்ச்சிகள் நடைபெற்றன.

4. சங்க இலக்கியத்துக்கு எளிமையான உரைகளை வெளியிடும் போக்கு வளர்ந்தது. சங்க இலக்கியங்கள் சிறு சிறு வெளியீடுகளாக வரத் தொடங்கின. மாணவர்களுக்குப் பாடமாக வைக்கப்பெற்றன.

5. தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்கள் சங்க இலக்கியத்தின் பெருமைகளைப் பேசித் தங்களை வளர்த்துக்கொண்டன.

6. இரண்டாயிரம் ஆண்டுப் பழமையான சங்க இலக்கியம் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரால் மறுவாசிப்புக்கு உள்ளாக்கப்பட்டது. அதன் காரணமாக இன்றைய வரையில் சங்க இலக்கிய ஆய்வுகள் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்றன.

## அடிக்குறிப்புக்கள்

1. கவிதாசரண், அக்டோபர்-நவம்பர், 1997, ப. 58
2. கு. திருமாறன், தனித்தமிழியக்கம், இரா. இளவரசு, முன்னுரை, ப. 4
3. E.V.G., (தொகு.), நீதிக்கட்சியின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 10
4. கு. திருமாறன், மு. நூ., ப. 87
5. கவிதாசரண், அக்டோபர் - நவம்பர், 1997, ப. 63
6. மேலது., ப. 66
7. மேலது., ப. 66
8. ஞான. அலாய்சியஸ், (தொகு.ஆ.), அயோத்திதாசர் சிந்தனைகள்-I, ப. 103
9. E.V.G., (தொகு.), மு.நூ., ப. 11
10. மேலது., ப. 11
11. கு. திருமாறன், மு.நூ., பக். 88,89
12. E.V.G., (தொகு.), மு.நூ., ப. 13
13. கவிதாசரண், அக்டோபர் - நவம்பர், 1997, பக். 58,59.
14. மேலது., ப.60
15. அ.மா. சாமி, 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள்,ப. 131
16. மேற்கோள், எஸ்.வி. ராஜதுரை, வி.கீதா, (தொகு.ஆசி.), பெரியார் சுயமரியாதை சமதர்மம், பக். 31, 32
17. நாவாவின் ஆராய்ச்சி, ஏப்ரல் 1999, ப. 14
18. மேலது., ப.14
19. டி.எம். பார்த்தசாரதி, தி.மு.க. வரலாறு, ப. 98
20. மேற்கோள், கு. திருமாறன், மு.நூ., ப. 126
21. மேற்கோள், மேலது., ப. 126
22. ம. பொ. சிவஞானம், விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு,ப. 44
23. மேற்கோள், மேலது., ப. 95
24. மேற்கோள், மேலது., ப. 95
25. மேற்கோள், கு. திருமாறன், மு.நூ.,ப. 97
26. மேற்கோள், மேலது., ப. 97
27. மேலது., ப. 142
28. கா.சிவத்தம்பி, தமிழ்ச் சமூகமும் பண்பாட்டின் மீள் கண்டுபிடிப்பும், ப. 22

29. நாவாவின் ஆராய்ச்சி, ஏப்ரல் 1999, ப. 13

30. க.பஞ்சாங்கம், தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு,ப. 62

31. வெ. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்,ப. 4

32. மேற்கோள், க. பஞ்சாங்கம், சிலப்பதிகாரத் திறனாய்வுகள்-ஒரு பார்வை, ப.62

33. வெ. கனகசபை, மு.நூ., ப. 5

34. மேலது., பக். 5,6

35. மேலது., ப. 7

36. மேலது., ப. 371

37. மேற்கோள், கா. சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப.95

38. ந.சி.கந்தையா பிள்ளை, தமிழ் இந்தியா, ப.6

39. ந.சி.கந்தையா பிள்ளை, வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட தமிழகம், ப.63

40. ந.சி.கந்தையா பிள்ளை, தமிழ் இந்தியா, ப.6

41. மேலது., ப. 256

42. மேலது., ப. 42

43. தமிழக வரலாறு (தொகு.), கழக வெளியீடு, கா.அப்பாத்துரை, முன்னுரை, பக். 20,21

44. மேலது., பக். 26,27

45. மேலது., ப. 9

46. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், பக். V,VI

47. மேலது., ப. VI

48. கா. அப்பாத்துரை, இதுதான் திராவிட நாடு, ப. 122

49. சி.என். அண்ணாத்துரை, ஏ, தாழ்ந்த தமிழகமே!, பக்.8,9

50. சி.என். அண்ணாத்துரை, ஆரிய மாயை, பக். 8,9

51. சி.என். அண்ணாத்துரை, நிலையும் நினைப்பும், ப.20

52. மேலது., பக். 8,9

53. சி.என். அண்ணாத்துரை, இன்பத் திராவிடம், ப. 48

54. மு. வரதராசனார், நெடுந்தொகை விருந்து, ப. 3

55. மேலது., ப. 3

56. கா. கோவிந்தன், திருமாவளவன். ப, 125

57. மா.ரா.போ. குருசாமி, சங்ககாலம், ப. 95

58. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை, ப. 20

59 ஞா. தேவநேயப் பாவாணர், திராவிடத்தாய், பக். 14,15

60. இரா. நெடுஞ்செழியன், நற்றிணைக் காட்சிகள், பக். 268,272,

61. மு. கருணாநிதி, சங்கத் தமிழ், ப.397

62. ச. சோமசுந்தர பாரதியார்,பழந்தமிழ் நாடு, ப. 89

63. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, சேரமன்னர் வரலாறு, பக். 46,47

64. மயிலை. சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 2

## சாதிகளின் எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

5.0 இந்திய நாட்டுச் சமூக அமைப்பு, சாதிகளை அடிப்படையாகக் கொண்டது. இந்தச் சாதி அமைப்பு ஐரோப்பியர் வருகையினால் பல மாற்றங்களுக்கு உள்ளானது. எப்பொழுதெல்லாம் புதிய ஒரு சூழல் வரலாற்றில் வாய்க்கிறதோ, அப்பொழுதெல்லாம் சாதிகள் விழிப்புற்று, தங்களை நிலை நிறுத்திக்கொள்ள முயல்கின்றன. இந்தச் சாதிய இயக்கங்கள் சங்க இலக்கியத்தைக் கையாண்ட நிலையை இவ்வியல் ஆராய்கிறது. அதற்கு உதவும் வகையில், சாதியம்-இந்திய நாட்டுச் சமூக அமைப்பு-தமிழகத்தில் சாதியம்-சாதிய இயக்கங்களின் எழுச்சி-சாதிய எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும் ஆகிய உட்தலைப்புக்களில் ஆய்வு செய்யும் முயற்சி இக்கட்டுரையில் மேற்கொள்ளப்படுகிறது.

### 5.1. சாதியம்

தெற்கு ஆசிய சமூகத்தில் தோற்றம் பெற்று நிலைப்பெற்றுவிட்ட ஓர் அமைப்பாகச் சாதி விளங்குகிறது. உலகெங்கிலும் இல்லாத சாதி அமைப்பு இங்கு மட்டும் இவ்வளவு வலிமையாகவும், இறுக்கமாகவும் இயங்கி வருவதற்கான காரணத்தை ஆய்வாளர்கள் ஆராய்ந்து வருகிறார்கள். அதன் காரணமாகச் சாதியம் பல்வேறு விளக்கங்களுக்கு உட்படுவதாகவும் அமைகிறது. சாதிகள் பற்றி ஆராயும் எழுத்துக்களும், பேச்சுக்களும், சிந்தனைகளும் சாதியம் எனக் குறிப்பிடப்படுகிறது.

சாதி குறித்த வரையறைகளும், அதன் தோற்றம் பற்றியும் பல்வேறு விதக் கருத்துக்கள் நிலவி வருகின்றன. இது பற்றிய கருத்துக்களைச் சுருக்கமாகக் காணும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

> "சாதி என்பது தனித்த நிறுவனமன்று. அது ஒரு குறிப்பிட்ட உற்பத்தி முறையில் காணப்படும் உற்பத்தி உறவு வடிவம் ஆகும். பரம்பரை பரம்பரையாக ஒரே தொழிலில் ஈடுபட்டு, அதில் பெறும் வருமானத்துக்கும் அதையொட்டிய வாழ்க்கைச் சூழலுக்கும் தக்க வாழ்முறையைக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட குலத்துக்குள்ளே கொள்வினை, கொடுப்பினை கொண்டு, ஒரே விதமான சமூகப் பழக்கவழக்கங்களை மேற்கொண்ட கூட்டத்தைப் பொதுவாகச் சாதி என அழைக்கலாம்" [1] என்பர் கோ. கேசவன்.

ஆனால், இன்றைய அறிவியல் உலகில் பரம்பரைத் தொழில்முறை படிப்படியாகக் குறைந்து வருகிறது. அதேபோல் பழக்கவழக்கங்களும் மாறி வருகின்றன. இருந்தாலும் சாதி முறை மாறவில்லை. இன்று அது பிறப்பு அடிப்படையில் தீர்மானிக்கப்படுகிறது. தொடர்ந்து இருந்து வருகிறது.

இன்று சமூக நீதிக்காக முன்னேறிய வகுப்பினர், பிற்படுத்தப்பட்ட வகுப்பினர், மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர், அட்டவணை இனத்தவர் என்று நான்கு பிரிவாகப் பிரித்து இயங்கிய போதிலும் ஒவ்வொரு உட்சாதியும் தம்மைத் தக்கவைத்துக் கொள்வதற்காக முன்னினும் வேகமாகச் செயல்படத் தொடங்கியுள்ளன.

## 5.2. இந்திய நாட்டுச் சமூக அமைப்பு

"எந்தச் சமூக நிறுவனமும் அதற்கான தேவை உணரப்படாமல் உருவாவதில்லை. அதற்கு ஒரு குறிப்பிட்ட சமூகப் பணி நிச்சயமாக இருக்கும். சாதிகூட ஒரு சமூகத் தேவையை நிறைவேற்றவே எழுந்தது. சமூகத்தை ஒரே சீரான முழுமையாக ஒழுங்குபடுத்துவது இதன் தோற்றத்திற்கான காரணமாக இருந்திருக்கலாம்" [2] என்பர் கே.வி.ஆர்.

சாதியின் தோற்றம் குறித்த க்ளிசின் (Klass. Morton) கருத்துக் குறிப்பிடத் தக்கதாகும்.

"இந்தியாவில் பொருளாதார உபரியின் ஆரம்பகால வளர்ச்சியுடன் சாதி தோற்றம் பெற்றிருக்கலாம்; ஆரம்ப காலங்களில் சமத்துவ அடிப்படையிலான இனக்குழுக்களால் அமைந்த பழங்குடிச் சமூகத்தினர், இந்த உபரியினால் உருவான ஏற்றத் தாழ்வுகளுக்கேற்ப தங்களைத் தகவமைத்துக் கொள்வதற்காக சாதியடிப்படையை உருவாக்கியிருக்கலாம் எனக் கருதுகின்றனர்"[3]

உடைமைச் சமூகம் உருவானபோது உண்டான ஏற்றத்தாழ்வுகள் மனிதர்களிடையே வர்க்கப் பாகுபாட்டைத் தோற்றுவித்தன. இந்த வர்க்கப் பாகுபாடுகளே பின்னாளில் சாதிகளாக உருவெடுத்தன. இதனால் ஆரியர்களின்

இந்திய வருகைக்கு முன்பே சாதி அமைப்புகள் உருவாகிவிட்டன. சாதி என்பது திராவிடர்களின் அல்லது தமிழர்களின் கண்டுபிடிப்பே, சாதிகளைத் தொகுத்து வருணமாக்க முயன்றதே ஆரியர்களின் பங்கு என்கிற கருத்தை முன் வைக்கிறார் குணா.

"பெண் வழியிலான புறமணக் கிளைகளின்மீது அகமணத்தைத் திணித்து ஆண் வழியிலான புறமண இல்லங்களை (கோத்திரங்களை) உருவாக்குகிற சூழல்தான் சாதிகள் தோன்றுவதற்கான பின்புலமாக இருந்ததெனச் சொல்லலாம்."

என்று கூறும் குணா அகமண முறையைச் சாதியின் முதன்மையான அம்சமாக எடுத்துக்கொண்டு குலக்குழுக்களே சாதிகளாகத் திரிந்தன என்ற கொள்கையுடையவராகிறார். இக்கருத்துடையவராகவே அம்பேத்கரும் விளங்குகிறார்.

"இன்று வரையுள்ள எல்லா உற்பத்தி முறைகளிலும் அகமணக் கட்டுப்பாடு என்பது முக்கியப் பண்பாக விளங்கிவருகிறது என்கிற உண்மை, குலக்குழுக்களே சாதிகளாய்த் திரிந்தன என்கிற கருத்திற்கு வலு சேர்க்கின்றது. இன்றளவும் பல சாதிகளின் பெயர்களே அவை குலக்குழுக்களிலிருந்து உருவானவை என்பதற்குச் சான்று பகரும். ஆனால் குலக்குழுக்கள் மட்டுமே சாதிகளாய்த் திரிந்தன என்றும், இன்றுள்ள ஒவ்வொரு சாதியும் ஒவ்வொரு குலக் குழுவே என்றும் சொல்லிவிட முடியாது. கடந்த இருநூறு ஆண்டுகட்கு முன்பு வரை புதிய புதிய சாதிகள் தோன்றி வந்துள்ளன. குலக்குழுக்களுக்குள்ளே இருந்த தொழிற்பிரிவினைகள் பின்னர் தனித் தனிச் சாதிகளாக மாறியுள்ளதைக் கோசாம்பி போன்றோர் சுட்டிக்காட்டியுள்ளனர். இதேபோல இனங்களே சாதிகளாகத் திரிந்தன என்பதிலும் பொருளில்லை. பஞ்சாபை எடுத்துக்காட்டாகக் கொண்டு ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழ்கிற வெவ்வேறு சாதியினர், தூரத்திலுள்ள சாதியினரைக் காட்டிலும், உடலமைப்பில் ஒரே மாதிரியாக உள்ளனர் என்கிறார் எர்பர்ட் ரைஸ்லி." [5]

இக்கூற்றும் சிந்திக்கத்தக்கதாகும். இதன் மூலம் குலக்குழுக்களே சாதிகளாயின என்ற கூற்றின் போதாமை வெளிப்படுகின்றது. தொழிற் பிரிவினை என்ற கருத்து இங்குக்

கூடுதலாக முன்வைக்கப்படுகிறது. தொடர்ந்து சாதிகள் பெருகி வந்திருப்பதையும் காணும்போது அடுத்தக் கட்டத்திற்குச் செல்ல வேண்டியிருக்கிறது.

"சாதியின் கொடிய அம்சம் அதன் சுரண்டல் வடிவத்தில் அடங்கியுள்ளது. பிறப்பின் அடிப்படையில் தொழில்களை ஒழுங்கமைப்பது என்பதிலேயே இச்சுரண்டல் அடங்கியுள்ளது. நிலப்பிரபுத்துவத்திற்கு முந்திய உற்பத்தி முறையிலேயே இது கருக்கொண்டாலும் திடமாக உருக்கொண்டது நிலப்பிரபுத்துவத்தில்தான். நிலப்பிரபுத்துவ உற்பத்தி முறையில் வர்க்கத்தின் இடத்தைச் சாதி இப்படித்தான் நிரப்பி வந்துள்ளது" [6]

என்கிறார் அ. மார்க்ஸ். இங்கே சாதியின் தோற்றத்துக்கும், இறுக்கத்துக்கும் சுரண்டல் தன்மை முன் வைக்கப்படுகிறது.

"புதிய இனக்குழுவற்ற நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தில் பழைய வர்ண அமைப்பின் கட்டுக்கோப்பிற்குள் புதிய உழைப்புப் பிரிவினைக்குப் பொருத்தமாகப் படிநிலையடிப்படையில் ஜாதிகள் தங்களது சமூக அந்தஸ்தைப் பெற்றன" [7] என்பார் சரத் படீல்.

இங்கே புதிய உழைப்புப் பிரிவினையும், செய்யும் தொழிலில் உயர்வு தாழ்வுகளும் உருவான தன்மை சுட்டிக்காட்டப்படுகிறது. சாதிகள் இறுக்கமான காலக்கட்டமும் தெரியவருகிறது.

"உடலமைப்பில் மட்டுமல்லாமல் நோக்காலும் போக்காலும் ஒன்றுபட்ட சிலர் ஒரு தொகுப்பாயினர். இதனால் சமூகத்தில் படிவு ஏற்படுகிறது. உயர்ந்தவரும் தாழ்ந்தவருமாக இருவேறு தொகுப்புக்கள் உண்டாகின்றன. இத் தகுதித் தொகுப்புக்குள் நுழைவு எளிதில் சேரமுடியாத ஒரு தொகுப்பே சாதி என்றாகிறது" [8] என்பார் மா.சு. கோபாலகிருஷ்ணன்.

இங்கே சாதி தனித்தன்மையும் வலிமையும் உடையதாகவும் இறுக்கமானதாகவும் அமைந்த போக்கைக் காணமுடிகிறது.

"பொருளாதாரத்தில் அல்லது கலாச்சாரத்தில் வேறுபட்ட இனங்களின்

அக்கம்பக்க வாழ்க்கையை ஜாதி அமைப்பின் வகை மாதிரியாகக் கொள்ளலாம். பின்னர் அரசு வர்க்கச் சுரண்டலின் வளர்ச்சி அந்தஸ்திலும் படிநிலை அமைப்பிலும் ஏற்பட்ட மாறுதல்கள் மேலாதிக்கக் குழுக்களுக்குக் கீழ்நிலையில் உள்ள கைவினைஞர்களின் பெருக்கம் ஆகியவற்றால் சாதியம் இன்றைய நிலைக்கு உருவெடுத்தது"[9]

என்ற கூற்றுச் சாதியம் சமூகத்தில் வளர்த்தெடுக்கப்பட்ட தன்மையைக் காட்டுவதாக அமைகிறது.

ஆரியரின் வருகைக்கு முன்பே அகமணமுறை, இனக்குழு சமூகம், வர்க்க அடிப்படை, தொழில் முறை ஏற்றத்தாழ்வு, முதலான காரணங்களால் உண்டாகியிருந்த சாதிப்பிரிவுகள் ஆரியர்களின் வருகைக்குப் பின்னர் இறுக்கமடைந்தன. சமூக அமைப்பே சாதி மயமானது. சாதியை மீறி ஒன்றும் நடவாது என்ற நிலைக்குச் சமூகம் தள்ளப்பட்டது. சாதி ஒழுக்கங்கள் கறாராகக் கடைப்பிடிக்கப்பட்டன. மீறுபவர்களுக்குத் தண்டனைகள் வழங்கப்பட்டன. இந்நிலையை ஆரியர்களால் உண்டாக்கப்பட்ட வேதம், மநுதர்மம் ஆகியவற்றால் சாதித்தனர். இதனால் வருண முறை இந்திய மண்ணில் வேரூன்றியது எனலாம். ஆரம்பநிலையில் ஆரியரின் வேள்விக் கோட்பாட்டை ஏற்காதபோது திராவிடர்களுக்கும் ஆரியர்களுக்கும் மோதல் நிகழ்ந்துள்ளதையும் அறிய முடிகிறது.

"ஆரியர்களின் வேள்விக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ளாத சிந்துவெளித் திராவிடர்களுக்கும் ஆரியர்களுக்கும் ஏற்பட்ட மோதல்களே சாதிகள் தோன்ற வழிவகுத்தன"[10] என்ற கருத்தும் நிலவுகிறது.

ஆரியர்களின் மநுதர்மத்திலிருந்து வருண முறை, சாதிகளின் தோற்றம் பற்றிய அவர்களின் கருத்தை அறிய முடிகிறது. சாதிமுறைக்கு இறைமைத் தன்மை கொடுத்து வலிமையாக முன்நிறுத்தப்பட்டது. சாதிப் பிரிவானது மனிதர்களால் உருவாக்கப்பட்டதன்று. அது இறைவனால் ஏற்படுத்தப்பட்டது என்பது ஆரியர்களின் கொள்கையாகும். இதனை,

"பிரம்மா மனிதரைப் படைக்கும் போதே பிரம்மர், சத்திரியர், வைசியர், சூத்திரர்

என நான்கு வருணத்தவர்களாகப் படைத்தார். பிரம்மா தம் முகத்திலிருந்து பிரம்மர்களையும், தோளிலிருந்து சத்திரியர்களையும், தொடையிலிருந்து வைசியர்களையும், காலிலிருந்து சூத்திரர்களையும் பிறப்பித்தார்" [11]

என்ற மநுதர்மத்தின் சூத்திரங்களிலிருந்து அறியமுடிகிறது. இங்கே ஆரியர்களால் வருண முறை கட்டாயமாக்கப்படுவதைக் காணமுடிகிறது. அதற்கு வசதியாக கடவுளோடு தொடர்பு படுத்தப்படுவதையும் பார்க்க முடிகிறது.

சாதிகளின் தோற்றம் பற்றிக் கூறவரும் மநு தர்மம்,

"நால்வருணத்தவரும் கற்பறம் தவறுதலாலும், தத்தமது கோத்திரத்திலேயே மணம் கொள்வதாலும் சத கருமங்கள் ஆற்றாமையாலும் சாதிகள் தோன்றுகின்றன" [12]

என்ற கருத்தை முன்மொழிகிறது. இங்கேயும் பிறப்பை முன்னிலைப்படுத்திச் சாதித்தூய்மை வலியுறுத்தப்படுவதைக் காணமுடிகிறது. இவ்வாறு சாதிகளின் தோற்றம் பற்றிக் குறிப்பிடும் மநுதர்மம் பிராமணரை உயர்ந்தவராகப் படைத்திருக்கிறது. பல்வேறு சாதிகளைக் குறிப்பிடும் மநுதர்மம் அவரவர்க்கான தொழிலையும் பிரித்துக் கொடுக்கிறது. இங்கேயே பிறவி அடிப்படையிலும், தொழில் அடிப்படையிலும் எனச் சட்டப்பூர்வமாகச் சாதி நிலைநிறுத்தப்படுகிறது.

"செய்யும் தொழிலால் ஏற்பட்ட வேறுபாட்டினால் சாதியம் தோற்றம் பெற்றது எனக்கூறும் தொழிற்கொள்கை முழுமை பெற்றதன்று சாதிகளின் படிமலர்ச்சியில் தொழிற்பிரிவுகள் ஒரு காரணியாகத்தான் செயல்பட்டதே தவிர அவை முழுமையான விளைவை ஏற்படுத்தவில்லை." [13]

என்ற கருத்து குறிப்பிடத்தக்கதாகும். இதன் மூலம் சாதியின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் ஒரு குறிப்பிட்ட செயல் அல்லது நிகழ்வு காரணமில்லை எனத் தெரியவருகிறது. சமூகத்தின் வளர்நிலையில் இயங்கிய பல்வேறு காரணிகளின் தொகுப்பு வடிவமே சாதியமாக வளர்ந்திருப்பதை அறிய முடிகிறது.

சாதிகளின் தோற்றம் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

இக்கருத்துக்களைத் தொகுத்துக் கூறும் தி.சு. நடராசனின் கூற்று இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கதாகும்.

"1) ஆரியர்கள் கொண்டுவந்து, தமக்காகவும் பிறருக்காகவும் கொடுத்தது இது என்பது. 2) பூர்வீகக் குடிகளாகிய திராவிடர்கள் கண்டறிந்து ஆரியர்களுக்குக் கொடுத்த கொடை என்பது; பின்னர் திரும்ப மறுகொடையாக வழங்கப்பட்டது என்பதும். 3) மக்களின் இனக்குழு (Tribal Life) வாழ்க்கையிலிருந்து, அப்படியப்படியே தனித்தனிப் பகுப்புக்களாக வளர்ந்துவிட்ட ஓர் அமைப்பே இது என்பது 4) வந்த இனங்கள், இருந்த இனங்கள், தமக்குள்ளும் பிறர்க்குள்ளும் நடத்திய போர்களின் காரணமாக, அடிமைப்படுத்தல் முதலிய சூழல்களில் பிறந்ததுதான் அது, என்பது. 5) வைதீக சமயத்தின் உட்கருவாக அந்த அமைப்பின் இயல்பான ஒரு வெளிப்பாடாகத் தோன்றியதுதான் அது என்பது. 6) வைதீக சமயத்தையும் அதனைச் சார்ந்த அரசு அதிகாரத்தையும் காப்பாற்ற அதற்குகந்த ஒரு பிற்போக்கான சமூக அமைப்பு வேண்டும் என்ற முறையில் மனு உருவாக்கித் தந்தது - முறைப்படுத்தித் தந்தது அது என்பது. 7) இனம் என்ற பாகுபாட்டுக்குட்பட்டதே சாதி என்பது. ஆனால், இனத்தால் வேறுபட்டாலும், வேறு எதனாலோ (சமயம்?) பிணைக்கப்பட்டிருக்கின்றன சாதியம் என்பது" [14]

இக்கூற்றுப் பல்வேறு அறிஞர்களின் கருத்தை எதிரொலிப்பதாக அமைகிறது. அத்துடன் பல்வேறு காலக்கட்டத்தில் சாதிகள் வளர்த்தெடுக்கப்பட்டுள்ள நிலையைக் காட்டுவதாக அமைகிறது. இவ்வாறு பல்வேறு கருத்துக்களைத் தொகுக்கும் தி.சு. நடராசன், இவற்றில் இரண்டு சமூக அலைகள் மற்றும் அவற்றை ஒட்டிய கருத்தோட்டங்கள் பொருந்திவருவதாகக் காண்கிறார். அவையாவன,

"1. தொன்று தொட்டு வந்த இனக்குழு பிரிவினையையும் விசேடித்துக் கூறப்படும் வாழிடம், மற்றும் வேலைப்பிரிவினை முதலியவற்றையும் அடிப்படையாகக் கொண்டு பிறந்த வகுப்புக்களின் வளர்ச்சி.

2. வைதிக சமயம், மனு தருமம், பகவத் கீதை - இவை கொண்டுவந்த சதுர்வருணம் (இதன் பூர்வீகம் ஆரியமா, திராவிடமா என்ற விவாதம், தனி) என்ற கருத்தியல்." [15]

என்பனவாகும். இவ்வாறு பல்வேறு நிலைகளில் சாதிகள் சமூகத்தில் வேரூன்றின.

"சாதியச் சமூகம் மேலிருந்து கீழ்வரை ஒரு படிநிலை அமைப்பில் அமைந்துள்ளது. பார்ப்பனரைச் சமூகத்தின் உச்சத்திலும் பஞ்சமரைத் தாழ்ந்த நிலையிலும் கொண்டதாக இது உள்ளது. இங்குப் பார்ப்பனர் பஞ்சமர் எனக் குறிப்பிடும் சொற்கள் ஒவ்வொன்றும் பல சாதிகளைத் தொகுப்பாக அடையாளப்படுத்துவதாகும். எனவே, பார்ப்பனருள் உயர்ந்தவரை உச்சத்திலும், பஞ்சமரில் தாழ்ந்தவரைத் தாழ்நிலையிலும் கொண்டதாகச் சாதியப்படிநிலை அமைந்துள்ளது. படிநிலை என்பது மேலும் கீழுமாக அமைக்கப்பட்ட பல அடுக்குகளின் தொகுப்பு ஆகும்.

இவ்வருணநெறிப் படிநிலையில் பஞ்சமர் அடங்காதவர் ஆவர். இவரை 'அவர்ணஸ்தர்' (வருணநெறிக்கு அப்பாற்பட்டவர்) என்றழைத்தனர்" [16]

இவ்வாறு உருவாக்கப்பட்ட சாதியப் படிநிலை அமைப்பு, அதிகாரப்படி வரிசையைப் பிறப்பினால் நிறுவுகிற ஓர் அமைப்பாக வளர்ந்தது. இதன் காரணமாக ஒவ்வொரு சாதிக்குமான அதிகாரம், தொழில், தங்கும் இடம், ஆச்சார நெறிமுறைகள், கல்வி, உடை எனச் சமூகத்தின் சின்னஞ்சிறு அசைவுகளுக்கும் அளவுகோல் அமைக்கப்பட்டது. அரசாங்கமே இதனை ஏற்று நடைமுறைப்படுத்தியது எனலாம்.

"ஒவ்வொரு சாதிப்பிரிவினரும் தமக்கெனச் சாதிக்குழுக்களைக் கொண்டிருந்தனர். சாதிப்பிரிவுகளுக்குள் சில விதிமுறைகளை வகுத்து, அதனை மீறுவோர் தண்டனைக்குரியவராகக் கருதப்பட்டனர். ஒவ்வொரு சாதிக்குழுவிலும் அக்குழுவின் முதியோர் தலைமைப்பொறுப்பில் இருந்தனர்" [17]

என்பதிலிருந்து சமூகத்தில் சாதிகள் பேணப்பட்ட முறைமை விளங்குகிறது எனலாம். இந்நிலை பல்லவர், பிற்காலச் சோழர், நாயக்கர் ஆட்சிக் காலங்களில் முறையே முறையாக வளர்ந்து வந்தது.

சாதிக்கட்டுப்பாடுகள் மிகமிக, சாதிவேற்றுமைகள் பார்க்கும்போக்கு அதிகமானது. ஒவ்வொரு சாதியும் தங்களுக்கான உரிமைகளைப் பெறப் போராட வேண்டிய சூழலும் ஏற்பட்டது. தாங்கள் உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்ற அதிகாரப் போட்டியின் காரணமாகச் சாதிக்கலவரங்கள் நிகழத்தொடங்கின. இதனைச் சோழர் காலத்தில் நிகழ்ந்த வலங்கை இடங்கைப் போரின் மூலம் அறிய முடிகிறது. இங்கே ஒரு குறிப்பிட்ட சாதியினர் ஒரு பிரிவாகவும், மற்ற குறிப்பிட்ட சாதியினர் வேறொரு பிரிவாகவும் இருந்து மோதிக் கொண்டதைக் காணமுடிகிறது.

"வெவ்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்களுக்குள் வேறுபாட்டுணர்ச்சி தோன்றுங்கால் அரசனிடத்தில் முறையிடுவது எதிர்பார்த்தற் குரியதே அங்ஙனம் முறையிடுங்கால் அரசனது வலது பக்கத்தில் இருந்தவர் வலங்கையர் என்றும், இடது பக்கத்தில் இருந்தவர் இடங்கையர் என்றும் கூறப் பெற்றனர்" [18]

என்ற கூற்றின் மூலம், ஒரு குறிப்பிட்டச் சாதிகள் தங்களுக்குள் இணைந்து, மற்ற சாதியினரிடம் மோதும் போக்கைக் காணமுடிகிறது. இந்த மோதல் வரலாற்றில் தொடர்ந்து நிகழ்ந்து வந்துள்ளதையும் அறிய முடிகிறது.

"சோழர் காலத்தில் ஓங்கி வளர்ந்த குல வேறுபாடுகளில் மிகவும் தீய விளைவுகட்குக் களனாக இருந்தது, வலங்கை, இடங்கை என்னும் பிளவாகும். இவ்விரு பிரிவினர்க்கும் இடையே பல கடும் பூசல்கள் நேரிட்டுள்ளன. இப் பூசல்கள் சோழப் பேரரசின் காலத்திற்கு முன்னே தோன்றி விசய நகரத்துப் பேரரசர் காலத்தில் தொடர்ந்து வளர்ந்து வந்து ஆங்கிலேயர் அரசாட்சியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் நடைபெற்று வந்தன" [19] என்பர்.

இதன் மூலம், சாதிகளுக்கு இடையிலான போராட்டங்கள் நூற்றாண்டுக் கணக்கில் தொடர்ந்து நிகழ்ந்து வந்திருப்பதை அறிய முடிகிறது. சாதிகளுக்கிடையிலான போராட்டங்கள் அதிகமாகும் போது இயல்பாகவே தீண்டாமைக் கொடுமைகளும் மிகுந்து வந்திருப்பதை வரலாற்றால் உணர்முடிகிறது.

இவ்வாறு, சாதிமுறை வேறுபாடுகளுடன் வளர்ந்து வந்த இந்தியச் சமூகம் தொடர்ந்து தன்னைத் தக்கவைத்துக் கொள்வதிலும், தகவமைத்துக் கொள்ளுதலிலும்

கவனம் செலுத்தியது எனலாம். இதனை ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த நிகழ்வுகள் எடுத்துக்காட்டுவனவாக அமைகின்றன. இப்போக்கினை,

"ஆங்கில ஆட்சி அமைவதற்குமுன் மொகலாயர் ஆட்சியில் இரண்டாம்தரக் குடிமக்களாய் இருந்த இந்துக்கள், ஆங்கில ஆட்சியை வரப்பிரசாதமாக ஏற்று, வெளிப்படையாகவே கடவுளுக்கு நன்றி கூறினர். செல்வாக்கும், பதவியும், வருவாயும், புகழும் இழந்த இஸ்லாமியர்கள் ஆங்கில ஆட்சியை வெறுத்தனர்" [20]

என்ற பெ.சு.மணியின் கூற்றிலிருந்து அறியமுடிகிறது. இந்தியச் சாதிப் படிநிலையில் உயர்நிலையில் இருந்த பிராமணர்கள் ஆங்கில ஆட்சியில் தங்களைத் தக்க வைத்துக்கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். அரசு உயர் பதவிகளிலும்,வேலைவாய்ப்புகளிலும் முன்னிலை பெற்றனர். அதற்காகவே ஆங்கிலேய ஏகாதிபத்திய ஆட்சியுடன் ஒத்துப்போயினர். அதற்காகவே மாநிலங்கள் தோறும் சமூக அரசியல் இயக்கங்களைக் கட்டமைத்தனர். அவற்றில் குறிப்பிடத்தக்கன, பிரிட்டிஷ் இந்தியன் அசோசியேஷன் (கல்கத்தா-1851), மெட்ராஸ் நேடிவ் அசோசியேஷன் (சென்னை-1852), இந்தியன் அசோசியேஷன் (கல்கத்தா-1876), பம்பாய் அசோசியேஷன் (பம்பாய்-1876) மகா ஜனசபை (சென்னை-1884) பூனா சர்வ ஜனிக சபை(பூனா-1872) என்பனவாகும். இவ்வியக்கங்கள் ஆங்கிலேயருடன் ஒத்துழைத்து ஆட்சித்துறையில் அதிகாரங்களைப் பெறுவதிலேயே குறியாக இருந்தன. இவ்வமைப்புகளை உருவாக்கியவர்களும், வழிநடத்தியவர்களும், இவ்வமைப்புகளில் பங்கு பெற்றவர்களும் பெரும்பாலும் பிராமணர்களாகவே இருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

## 5.3. தமிழகத்தில் சாதியம்

பிராமணர்களை முன்னிலைப் படுத்திய இந்த அமைப்புக்களே, பின்னாளில் இணைந்து இந்தியத் தேசியக் காங்கிரஸாக உருவானது. இதன் காரணமாக இந்தியத் தேசியக் காங்கிரஸ் பிராமணத் தலைவர்களுக்கே முன்னுரிமை கொடுத்தது. இந்த அமைப்பும் முதலில் ஆங்கிலேய ஆட்சியை எதிர்க்கவில்லை. வேலைவாய்ப்பில் தங்களுக்கு அதிக முக்கியத்துவத்தினைப் பெறும் அமைப்பாகவே விளங்கியது. இந்தியத் தேசியக் காங்கிரஸில் பிராமணர்களின் ஆதிக்கம் அதிகரித்ததன்

விளைவாகப் பின்னாளில் பெரியார் காங்கிரஸிலிருந்து வெளியேறினார். இவ்வாறு இந்தியத் தேசியக் காங்கிரஸ் தன்னைப் பிராமணர்களின் புகலிடமாக அடையாளம் காட்டிக்கொண்டதனாலேயே பிராமணர் -பிராமணர் அல்லாதார் என்ற பிரிவினை தமிழகத்தில் தோற்றம் பெற்றது எனலாம்.

அரசியலிலும், அரசு வேலைவாய்ப்புக்களிலும் தாங்கள் புறக்கணிக்கப்படுவதாக உணர்ந்த பிராமணரல்லாதார் 1916-இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தைத் தோற்றுவித்தனர். இதன் தலைவர்களில் ஒருவரான பி.டி. தியாகராசர்,

"இந்த மாநிலத்தின் மக்கட்தொகை 4 கோடியே 75 லட்சமாகும். இதில் நாலு கோடி மக்கள் பார்ப்பனரல்லாதவர்கள்!

இந்த நாலு கோடி மக்களே நாட்டின் வரிப்பணத்தின் பெரும்பகுதியைக் கட்டுகின்றனர். நிலத்தை உழுது ஊருக்கு உணவளிப்பதும் அவர்களே.

...ஆனால்... இந்த நாலு கோடி மக்களுக்கும் கிடைக்கும் கைமாறு என்ன?

நாட்டு ஆட்சி அதிகாரத்தில் அவர்களில்லை - பார்ப்பனர்கள்தான் அமர்ந்திருக்கின்றனர்.

கல்விக்கூடங்களிலே அவர்கள் குழந்தைகள் இடம்பெறுவதில்லை. பார்ப்பனக் குழந்தைகள்தான் நடமாடுகின்றன.

பல்கலைக்கழகங்கள் (அவர்களுக்கு) அந்நிய இடமாகவே ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

நீதி மன்றங்களில் அவர்கள் குற்றவாளிகளாகத்தான் நிற்கின்றனரே தவிர, வழக்கறிஞராகவோ, நீதிபதியாகவோ செல்ல இயலவில்லை" [21] என்றும்,

"ஊருக்கு ஊர், பல்வேறு சாதியாக ஆங்காங்கே சிதறுண்டு கிடக்கும் திராவிட மக்களே, ஒன்று சேர்ந்து வாருங்கள்! நாட்டை இந்தப் பார்ப்பனக் கொடுமையிலிருந்து விடுவிக்கவும், வெள்ளையன் வெளியேறுமுன் அவர்களுக்கு இணையாய் நாமும் முன்னேறி, விடுதலை அடையப் போகும்

இந்த நாட்டிலே நாம் நமக்குரிய இடத்தை அடைவோம்!"[22]

என்றும் முழங்குகிறார். இதன் மூலம், அன்றைய பிராமணர்களின் ஆதிக்கத்தின் உச்ச நிலையையும், அதற்கு மாற்றாகப் பிராமணரல்லாதார்கள் எழ வேண்டிய தேவை இருந்ததையும் உணரமுடிகிறது. தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் சார்பாக வெளியிடப்பட்ட, 'பார்ப்பனரல்லாதார் கொள்கை அறிக்கை' பார்ப்பனர் அல்லாத சாதிகளை எழுச்சிபெறச் செய்தது. இவர்கள் மக்கள் தொகை, வரி செலுத்தும் விகிதாச்சார அடிப்படையில், சட்ட சபையிலும், உத்தியோகத்திலும் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் ஏற்பட வேண்டும் என்ற கொள்கையில் இயங்கினர். இதன் காரணமாகப் பல்வேறு சாதியச் சங்கங்கள் தோற்றம் பெறுவதற்கான சூழல் வந்து வாய்த்தது எனலாம்.

நீதிக்கட்சியின் ஆட்சிக்காலத்தில் தாழ்த்தப்பட்டவர்களுக்குப் பல்வேறு சலுகைகள் அளிக்கப்பட்டன. வகுப்புரிமை நோக்கிய மசோதாக்களும் நிறை வேற்றப்பட்டன. முத்தைய முதலியாரின் ஆட்சியில்,

"பன்னிரெண்டு பதவிகள் இருந்தால் அவற்றுள் ஐந்து பதவிகள் பிராமணர் அல்லாதவர்க்கும், இரண்டு பதவி பிராமணர்களுக்கும், இரண்டு பதவிகள் இஸ்லாமியர்களுக்கும், ஒரு பதவி தாழ்த்தபட்டவர்க்கும், இரண்டு பதவிகள் ஆங்கிலோ இந்தியர், கிறிஸ்தவர்களுக்கும் என முறையே வகுக்கப்பட்டன"[23]

இதன் மூலம் வேலை வாய்ப்பு முறையில் விகிதாச்சாரம் நிர்ணயிக்கப்பட்டதை அறிய முடிகிறது. நீதிக்கட்சியின் ஆட்சிக் காலத்தில் தாழ்த்தப் பட்டவர்களுக்குக் குறிப்பிடத்தக்க அளவு நன்மைகள் செய்யப் பட்டபோதிலும், அவை போதுமானதாக இல்லை என்பதை அறிய முடிகிறது.

## 5.4. சாதிய இயக்கங்களின் எழுச்சி

நீதிக் கட்சி அரசியல் சக்தியாக வடிவெடுத்த பின்னர் பார்ப்பனரல்லாத உயர்சாதியினரின் புகலிடமாக விளங்கியதை அறிய முடிகிறது. நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் மற்றும் விருதுநகர் வணிக நாடார் சாதியினரின் ஆதிக்கம் கட்சியில் இருந்ததாகத் தெரிகிறது.

" ஏ. வி. முத்தையா முதலியார், எல். மீனாட்சி சுந்தர முதலியார், பி.சி.மாணிக்க வாசக முதலியார், சி.என். அண்ணாத்துரை (செங்குந்தமுதலியார்), பி.சிதம்பரம் (நாஞ்சில் நாட்டு வேளார்), எஸ். குருசாமி (தொண்டை மண்டல வேளாளர்), சி.ஏ.அய்யாமுத்து (வெள்ளாள கவுண்டர்), பெரியார் ஈ.வே. ராமசாமி-எம்.கே. ரெட்டி, ஜெயராம் நாயுடு, ஜே.எஸ். கண்ணப்பர் (பலிஜாநாயுடு), டபிள்யூ.ஏ. சௌந்திரப் பாண்டிய நாடார் (ராமநாதபுரம் எஸ்டேட் சொந்தக்காரர்), வி.வி.ராமசாமி நாடார், எஸ்.ஏ.முத்துசாமி நாடார்" [24] எனச் சாதியப் படிநிலையில் உயர்நிலையில் இருந்தவர்கள் நீதிக் கட்சியின் ஆதிக்க சக்திகளாக விளங்கியதைக் காணமுடிகிறது. எப்போதும் போலவே தாழ்த்தப் பட்டவர்கள் கடைநிலையிலேயே வைக்கப்பட்டனர். இம்மக்களிடமிருந்து வேறுபட்டவர்களாகவே தங்களை அடையாளம் கண்டனர் தாழ்த்தப்பட்டமக்கள் இதனை,

"சூத்திரன் எனக் கூறிக்கொள்ளப் பிடிக்காத பிராமணரல்லாத சாதி இந்துக்கள் தங்களைத் 'திராவிடர்கள்' என்று அழைத்துக் கொண்டார்கள். 1895 இல் தங்கள் இனத்துக்கு ஒரு பெயர் சூட்டிக்கொள்ள விரும்பிய இம் மக்கள் (தாழ்த்தப்பட்டோர்)'திராவிடர்' எனப் பெயர் மாற்றிக் கொண்ட சூத்திரர்களிடமிருந்து தாங்கள் தனிப்பட்டவர்கள் என்பதை விளக்கும்வகையில் 'ஆதிதிராவிடர்' என்ற பெயரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர்" [25]

என்ற கூற்று உறுதிப்படுத்துகிறது. தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர்களில் ஒருவரான எம்.சி.ராஜாவின் நீதிக்கட்சி ஆட்சி குறித்த மதிப்பீடு, இந்த இடத்தில் சுட்டத்தக்கதாகும்.

"1. நீதிக்கட்சி மூலம் சாதி இந்துக்கள் அதிகாரத்திற்கு வந்த பின்னர் தாழ்த்தப்பட்டோர் நலத்துறைகள் புறக்கணிக்கப்படுகின்றன. துறைகளே மூடப்படும் பீதியும் உள்ளது.

2. சென்ற ஆண்டு இறுதியில் தாழ்த்தப்பட்ட மாணவருக்கு மதிய உணவு வழங்கும் திட்டம் ஒன்றை மேலவையில் வழங்கினேன். ஆண்டுக்கு 67 இலட்சம் செலவாகும் எனக்கூறி மறுக்கப்பட்டது.

3. சிதம்பரம் தாலுகா போர்டில் ஏன் ஆதி திராவிடர் நியமிக்கப்படவில்லை என்று ஸ்தல ஸ்தாபன அமைச்சரைக் கேட்டேன். சாதி இந்து ஒருவரின் வீட்டில் அலுவலகம் செயல்படுவதால் தாழ்த்தப்பட்டவரை நியமிக்க முடியவில்லை எனப் பதில் வந்தது.

4. நீதிக்கட்சி பதவி ஏற்ற ஓராண்டுக்குள் தாழ்த்தப்பட்டோருக்கான நல மானியத்தில் ஒரு இலட்சத்தை வெட்டியது. தொடர்ந்து தாழ்த்தப்பட்டோர் நலத்துறைகள் மூடப்படுகின்றன. முக்கிய அதிகாரிகள் நீக்கப்படுகின்றனர்.

5. நல்ல காலமாக நீதிக்கட்சியின் பதவிக்காலம் இரண்டாண்டுகளோடு முடிந்துவிட்டது. கடவுள் நம்மைக் காப்பாற்றினார்"[26]

எம்.சி. ராஜாவின் இந்தப் பேச்சுக்கள் தாழ்த்தப்பட்டோர் நீதிக்கட்சி ஆட்சியைப் பார்த்த பார்வையை வெளிப்படுத்தும் நோக்கில் அமைகின்றன. இதன் காரணமாக நீதிக் கட்சியின் சாதியச் செயல்பாடுகளை உணரமுடிகிறது. தாழ்த்தப்பட்ட மக்கள் காலங்காலமாகப் புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளமையை அறியமுடிகிறது. இப்படி இந்த மண்ணில் தோன்றிய எல்லா இயக்கங்களும் சாதியத்தன்மை கொண்டதாகவே விளங்கிவருகின்றன எனலாம். பின்னாளில் ஆட்சிப் பொறுப்பில் வந்த திராவிட இயக்கங்களிலும் முழுநம்பிக்கை கொள்ளாத தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்கான தலைவரை அடையாளம் காணும்போது தமிழகத்தைத் தாண்டிய அம்பேத்கரை முன்னிலைப்படுத்தி இயக்கங்கள் கண்டு வருகின்றனர்.

இவ்வாறு அரசியல் இயக்கங்கள் அனைத்தும் சாதியப் பின்னணியோடு தமது இயக்கத்தை வளர்த்தெடுத்தன. ஒருபுறம் இந்திய உணர்வும் இன்னொரு புறம் திராவிட இன உணர்வும் கொண்ட கருத்தியல்கள் உருவாக்கப்பட்டன. இவற்றின் ஊடாகவே ஒவ்வொரு சாதியும் தங்களை அடையாளப்படுத்திக் கொள்வதில் கவனமாக இருந்தன. ஆண்டாண்டுக் காலமாக வருணாசிரம முறையில் இறுகிக் கிடந்த சாதிகள் ஐரோப்பியரின் வருகையினால் பல மாற்றங்களுக்கு உள்ளாயின.

இதனை, "கிறித்துவத் தந்தைமார்களின் மதப்பிரச்சாரம், மெக்காலே கல்வித் திட்டம், தோட்டத் தொழிலுக்காக ஏற்பட்ட இடப்பெயர்ச்சி,

தொழிற்சாலைகளின் வளர்ச்சி ஆகிய காரணங்களால் சாதிய எழுச்சிகள் தோன்றின. எப்பொழுதெல்லாம் புதிய ஒரு சூழல் வரலாற்றில் வாய்க்கிறதோ அப்பொழுதெல்லாம் சாதிகள் விழிப்புற்று, தங்களுக்குள் ஒன்று திரண்டு தங்களுக்கான உரிமைகளைத் தேடிப் போராடுவதில் ஈடுபட்டுள்ளன" [27]

என்பர் க.பஞ்சாங்கம். இப்போக்கு இன்று வரை நீடித்து வருகிறது. சாதி முறையினைப் பற்றி விளக்கிச் செல்லும் மங்கள முருகேசன்,

"இந்து சமுதாயத்தைச் சீர் குலையாமல் காத்த பெருமை சாதி முறைக்கு உண்டு என்பர். முசுலிம் மன்னர்கள் ஆண்டபோது வெளியே கிடைக்கப்பெறாத பாதுகாப்பை மக்கள் தங்கள் சாதிக்குள்ளே கண்டனர். தம் சாதியைச் சேர்ந்த ஒருவன் நசித்துப் போனால் அவனைக் காக்க அச்சாதியார் அனைவரும் ஒன்று திரண்டனர். சாதியான் ஒருவனை அந்நியன் அடித்துவிட்டால் அவனைச் சேர்ந்த அனைவரும் ஒன்று திரண்டு சாதியானுக்கு ஆதரவாய் நின்று அந்நியனைத் துரத்தினர். எனவே, இந்தியர் என்ற உணர்வோடு தன்னை அந்நிய ஆதிக்கத்தினின்று காத்துக்கொள்ள வழியறியாத இந்து சமுதாயம், சமுதாய அடிப்படையில், பண்பாட்டு அடிப்படையில் தன்னைக் காத்துக்கொண்டது சாதிமுறையினாலேயாகும்" [28] என்பார்.

சாதிய எழுச்சி ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் வேகமாக எழுந்தது. சாதிய வரிசையில் உயர்சாதியினராக விளங்கிய பிராமணர்கள்,"வர்ணாசிரம பாதுகாப்புச் சங்கம், சனாதன தர்மசங்கம், பிராமண சமாஜம், பிராமண மகாசபை முதலிய சாதிச் சங்கங்களை நிறுவினர்". [29] இத்தகைய சங்கங்களைத் தமிழகத்தின் நகரங்கள் முதல் சிற்றூர்கள் வரையிலும் நிறுவினர்.

இதுபோலவே நாடார், செட்டியார், வெள்ளாளர் முதலிய பல சாதியினரும் சங்கங்கள் அமைத்தனர். மதம் மாறிக் கலகம் செய்தனர். தங்கள் சாதி பற்றிய வரலாற்று நூல்களை எழுதினர். ஒவ்வொரு சாதி வரலாறும் கடவுளோடு இணைத்து, புராணத் தன்மையோடு எழுதப்பட்டது. 1872-இல் மக்கள் கணக்கெடுப்பின்போது, தங்களைச் "சூத்திரர்" என்று குறிப்பதை எதிர்த்துச் சைவ வேளாளர்கள் இயக்கமாகத் திரண்டு போராடினர். இதன் விளைவாக

மறைமலையடிகள் சைவ வேளாளர் வரலாற்றை எழுதினார்.[30]

தாழ்த்தப்பட்ட மக்கள், ஆதி திராவிட ஜனசபா (1892) என்றும், பறையர் மகாஜன சபா (1894) என்றும் சங்கங்களைத் தொடங்கினர். ஒவ்வொரு சாதியினரும் தங்கள் சங்கக் கருத்துக்களை வெளியிட தங்களுக்கென்று செய்தி இதழ்களை நடத்தி உள்ளனர். இச்சாதிகளின் எழுச்சி பற்றிய பாரதியாரின் கருத்துச் சுட்டத்தக்கதாகும்.

"திருஷ்டாந்தமாக நமது தமிழ்நாட்டுப் பறையர் கூட கண்விழித்துத் தாங்கள் மனிதர் என்பதைத் தெரிந்துகொண்டு, மற்ற ஜாதியாருக்குத் தாங்கள் சமானமென்று சபை கூட்டித் தீர்மானம் செய்கிறார்கள். மந்திரி மாண்டேகுவிடம் முறையிட்டார்கள்" [31]

என்ற கூற்றிலிருந்து சாதிய எழுச்சியின் வேகத்தை அறிய முடிகிறது. இத்தகைய வேகம் மிகுந்த சாதிய எழுச்சியானது, அரசியல், கல்வி, மதம், இலக்கியம் முதலிய அனைத்துப் பண்பாட்டுத் துறைகளிலும் எதிரொலித்தது. ஏற்கனவே தமிழ்ப்பண்பாட்டு, அரசியல் சூழலோடு இணைத்துப் பேசப்பட்ட சங்க இலக்கியம், இச்சாதியச் சூழலுக்கு ஏற்பவும் வாசிக்கப்பட்டது. சாதிய இயக்கங்கள் மீண்டும் தங்களைப் புதுப்பித்துக்கொண்டு வேகமாக இயங்கி வரும் இன்றைய சூழலில், சங்க இலக்கியத்திலிருந்து தொன்மை தேடும் முயற்சி தொடர்ந்து நடந்து வருகிறது. எனவே சாதியப் பார்வையில் சங்க இலக்கியங்கள் ஆராயப்பட்ட நிலையை விளக்கும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

## 5.5. சாதிகளின் எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும்

### 5.5.1. சைவ வேளாளர்

தமிழகத்தில் சாதியப் படிநிலை வரிசையில் பிராமணர்களுக்கு அடுத்த நிலையில் இருப்பவர்கள் வேளாளர்கள் ஆவர். இவர்கள் பல்லவர் காலந்தொட்டு தமிழகத்தில் நிலக்கிழார்களாகவும், ஆதிக்கச் சக்திகளாகவும் தொடர்ந்து இயங்கிவந்தனர். இவர்கள் பல பெயர்களாலும், பல பிரிவுகளை உள்ளடக்கியவர்களாகவும் இயங்கிவந்திருப்பதை வரலாற்றால் அறியமுடிகிறது.

"கார்காத்தார், சோழியர், கொடிக்கால், கோட்டை, பாண்டவர், காய்ந்தலை வெள்ளாளர் என்று பல பிரிவுகள் இருந்தன. இவ்வகைப்பட்ட வெள்ளாளர் ஒருவருக்கொருவர் மணமுறை கொள்வதில்லை. எனினும் பொது நிகழ்வுகளில் ஒன்றாக உண்ணும் பழக்கத்தைக் கொண்டனர். மது, மாமிசம், விதவை மணம் இவர்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை" [32]

என்று வெள்ளாளர் எனப்படும் வேளாளர் சமூகத்தைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

"பிற்காலச் சோழர் காலத்தின் (கி.பி. 9-13) தொடக்கத்தில், பிரமதேயமல்லாத ஊர்களில் ஆதிக்கச் சக்தியாக விளங்கிய 'வேளான்' 'அரையன்' 'ஆழ்வான்' 'கிழவன்' முதலிய பட்டங்களைப் பெற்றிருந்த வேளாளர்கள் அரச காரியங்களையும் நிலங்களில் 'காணி' உரிமைகளை நிறைவேற்றும் காரியங்களையும் பார்த்து வந்தார்கள். இச்சோழர் ஆட்சி முடிவுக்கு வந்த 13ஆம் நூற்றாண்டில் இவர்கள் பெரும் நிலக்கிழார்களானார்கள்"[33] என்பர்.

கிராமிய நிலவுடைமையாளர்களாகவும், வியாபாரத் தொழில் புரிபவர்களாகவும் வாழ்ந்த வேளாளர்கள் ஆங்கில ஆட்சிக் காலத்தில், அரசாட்சி அதிகாரங்களில் பார்ப்பனர்கள் நிறைந்திருப்பதைக் கண்டார்கள். அவர்களுக்குப் போட்டியாகத் தலைமைப் பொறுப்பில் பங்கிட அரசியல், கல்வி, கலை இலக்கியம், என அனைத்துத் துறைகளிலும் ஈடுபட்டனர். எனவேதான், இலக்கிய ஆராய்ச்சியிலும், பண்பாட்டு ஆய்விலும் ஆரம்பநாட்களில் பெருமளவில் ஈடுபட்டவர்கள் வேளாளர்களாகவே இருந்தனர். சமூகத்தின் மேல்நிலையைத் தக்கவைத்துக் கொள்வதில் குறியாக இருந்த வேளாளர்களை, 1872-இல் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் போது சூத்திரர்கள் எனக் குறித்தபோது கொதித்தெழுந்தனர். இதன் காரணமாக வேளாளர்கள் தங்களுக்கான வரலாற்றை எழுதத் தொடங்கினார்கள். இதனை மறைமலையடிகள் முன்னின்று நடத்தினார்.

சைவ வேளாளர் வரலாற்றை எழுத வேண்டிய தேவை ஏற்பட்டது குறித்த மறைமலையடிகளின் கூற்றுச் சுட்டத்தக்கதாகும். அதனை அறிவது, அன்றைய சாதிய

எழுச்சிகளின் தன்மையை விளங்கிக்கொள்ள வாய்ப்பாக அமைகிறது.

"நாட்டுக்கோட்டைச் செட்டிமார் முன்னேற்றத்தின் பொருட்டு வெளியிடப்படுந் 'தனவைசிய ஊழியன்' என்னும் இதழில் (கி.பி. கக௯உ௩ ஆம் ஆண்டு ஆடித்திங்கள் கஉ ஆம் நாள்) அதன் தலைவர் வேளாளர் உண்மை வரலாறுகளை அறியாமல் அவரைச் 'சூத்திரர்' என்று இகழ்ந்து, தம் மரபினரில் உள்ள ஆடவர்கட்கு வேளாள மரபினரிலிருந்து பெண்கள் எடுத்து மணஞ்செய்வித்துக் கொள்ளுதலைப்பற்றிப் பேசியவிடத்துத், தாம் வைசிய வகுப்பினராகலான் தம்மவர் தம்மிற் றாழ்ந்த சூத்திர வகுப்பினரான வேளாளரிடமிருந்து பெண்கள் எடுத்து மணஞ் செய்து கொள்ளல் முறையேயாம் என்று எழுதிய கட்டுரை ஒன்றைக் கண்டேம்.

அப்போது நமக்கு நண்பராயுள்ள சைவ வேளாளர் சிலர் வேளாளரின் பண்டை உண்மை வரலாறுகளை ஆராய்ந்து ஒரு கட்டுரை விரைந்தெழுதும்படி எம்மைப் பெரிது வேண்டினர். பண்டைக் காலந்தொட்டு நம் செந்தமிழ் மக்களில் நாகரிகத்தாற் சிறந்து வாழ்ந்து, தமிழ் மொழியையும் சிவ வழிபாட்டையும் நிலைநிறுத்தி ஆரியரையுந் திருத்தி நல்வழிப்படுத்தினோர் வேளாளரே என்பது எமது ஆராய்ச்சியில் நன்கு புலப்பட்டமையால், 'வேளாளர் யாவர்?' என்பதனை விளக்குகையில் தமிழரது நாகரிகத்தையும், உடன் விளக்க வேண்டுவது இன்றியமையாததாய்த் தானே வந்து கூடிற்று" [34]

இக்கூற்றிலிருந்து சாதியப்படிநிலையில் கீழிறங்க எந்தச் சாதியும் ஒப்புக்கொள்ளாத சூழலை உணரமுடிகிறது. அத்துடன் தங்களுடைய சாதியை ஏற்று அதைக் காப்பாற்ற ஒவ்வொரு சாதியும் முனைவதையும் தெளியமுடிகிறது. இதன் காரணமாகவே மறைமலையடிகள் வேளாளர் நாகரிகம்தான் தமிழர் நாகரிகம் என்று பண்டைய நூலிலிருந்து ஆதாரங்காட்டி விளக்க முனைந்தார் எனலாம். இந்நூலின் இரண்டாம் பதிப்பு முன்னுரையில்,

"இனித் தமிழருட் சிறந்த வேளாளர் நாகரிகத்தை விளக்கவே தமிழரது நாகரிகமுந்தானே பெறப்படுமாகலானும், முதற்பதிப்புக்கு வைத்த 'தமிழர்

நாகரிகம்' அல்லது 'வேளாளர் யாவர்?' என்னும் இருபெயர்கள் வழங்குதற்கு இடர்பயத்தலானும் இப்பதிப்புக்கு அவ்விரண்டையும் உள்ளடக்கிய 'வேளாளர் நாகரிகம்' என்பதனைப் பெயராக அமைத்தாம்" [35]

என்று மறைமலையடிகள் கூறுவதனாலும் இதனை அறிய முடிகிறது.

'வேளாளர் நாகரிகம்' என்னும் நூலை எழுதிய மறைமலையடிகள், வேளாளரே உலக நாகரிகத்திற்கு வழிகாட்டியவர்கள்; உழவுத் தொழிலை அறிமுகப்படுத்தி உலகைச் செம்மைப்படுத்தியவர்கள்; தமிழகத்தில் தலைமை இடத்தை வகித்தவர்கள்; அவர்களே வேலைப் பிரிவினையை வகுத்து மற்றவர்களை ஏவல் கொண்டவர்கள்; உயிர்கள் மீது கருணைகொண்டு சைவப் பழக்கத்தைக் கொண்டவர்கள்; மற்ற மக்களைத் தமக்கும் தம் தொழிலுக்கும் உதவியாகப் பதினெண் பிரிவினராகப் பிரித்தவர்கள்; ஆரியர்களைத் திருத்தி நல்வழிப்படுத்தியவர்கள்; என்றெல்லாம் விரிவாக எழுதுகிறார். பின்னாளில் ஆரியர்களின் சூழ்ச்சியால் தாழ்ந்த நிலையை அடைந்தனர் வேளாளர்; அதனாலேயே ஆரியரின் நால்வருணத்தில் வேளாளர் இடம்பெறவில்லை என்பதாக எழுதுகிறார். இதுபற்றிய விளக்கத்தை இனிக் காணும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

வேளாளரின் பழமையைக் குறிப்பிடவரும் மறைமலையடிகள், "இப்போதிருக்குந் தமிழ் நூல்களில் மிகப் பழையதாகிய தொல்காப்பியத்தில் வேளாளர்களும் அவர்களுக்கே சிறப்பாக உரிய உழவுத் தொழிலும் ஒருங்கே வைத்துச் சொல்லப்படுதல் பெரிதும் நினைவிற் பதிக்கற் பாற்று. தொல்காப்பியம் ஐயாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட நூலாகையால், அதிற் குறிக்கப்பட்ட வேளாளர்கள் அந்நூலுக்கு முற்பட்ட காலத்திலேயே அஃதாவது ஆறாயிர ஆண்டுகளுக்கு முன்னரேயே உழவுத் தொழிலைக் கண்டறிந்து பெருக்கி, அதனால்தாமும் நாகரிகத்திற் சிறந்து, பிறரையுஞ் சிறப்புறச் செய்து வாழ்ந்தமை புலனாகும்" [36] என்பார்.

ஈகைக்குப் பெயரான 'வேளாண்மை' என்னுஞ்சொல், அவ்வீகைக்குக் கருவியான 'பயிர்த்தொழிலுக்கும்' பெயராயிற்று. பின்னர் அவ்விரண்டு தொழில்களையும் ஆள்வாரான 'வேளாளர்'க்கும் அது பெயராயிற்று" [37] என்று

வேளாளர் பெயர் ஏற்பட்டமைக்கான காரணத்தைக் குறிப்பிடுகிறார். மற்றும் ஈகை, விருந்தோம்பல் என ஏனைய மக்களுக்கு உதவும் 'மக்கள் வேள்வி', மற்ற உயிர்களைக் கொல்லாது அன்பு செலுத்தும் 'உயிர்வேள்வி', இறந்துபட்ட முன்னோரை நன்றியுடன் நினைக்கும் 'தென்புலத்தார் வேள்வி', பிறர்க்காற்றும் உதவி பயன்தரற் பொருட்டுச் செய்யும் 'கடவுள் வேள்வி', தமக்கும் பிறர்க்கும் பயன்தரும் நூலோதும் 'கலைவேள்வி' என ஐவகை வேள்விகளை ஆள்பவராக வேளாளரைக் குறிப்பிடுகிறார்.

பண்டைத் தமிழ்ப்பாட்டாகிய பட்டினப்பாலையுள்ளும் அதன் ஆசிரியர் உருத்திரங் கண்ணனார் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து பழைய வேளாளரைப் பற்றிக் கூறுகின்ற விடத்துக்,

"கொலை கடிந்துங் களவு நீக்கியும்
அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்
நல்லானோடு பகடு ஓம்பியும்
நான் மறையோர் புகழ் பரப்பியும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கைக்
கோடுமேழி நசை உழவர்.
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுகின்ற நன்னெஞ்சினோர்
வடு அஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉங்
குறை கொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசுந்
தொல் கொண்டித் துவன்று இருக்கை"

என்று கூறினார். என வேளாளரின் அறம் நிறைந்த தூயவாழ்க்கையைப் பட்டியல் இடுகிறார். இதனால், உழவுத்தொழிலும், அவ்வுழவுத் தொழிலாற் பெற்ற நெல் துவரை முதலான பல பண்டங்களை விலைப்படுத்தும் வாணிக

வாழ்க்கையும் பண்டு தொட்டு வேளாளர் ஒருவர்க்கே உரியவாய் வருதலுந் தெற்றென விளங்கும் என்கிறார்.[38]

இங்கே உழவுத்தொழிலுக்கும் வணிகத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்களே என்ற கருத்தை முன்வைக்கிறார். அடுத்து,

"தம்முள் நுண்ணறிவாற் சிறந்தாரை அறிவுநூல் ஓதுதற்குந் திருக்கோயில்களில் கடவுள் வழிபாடு ஆற்றுதற்கும் ஒரு வகுப்பினராகப் பழைய நாளிலிருந்தே பிரித்து வைத்தார்கள்; இவர்களே தமிழ்நாட்டு அந்தணராவர்; இவர் தம்மை இக்காலத்தார் 'ஆதிசைவர்' என்றுங், 'குருக்கள்', 'பட்டர்', 'நம்பியார்' என்றும் அழைப்பர். தமிழ்நாட்டின் கண் உள்ள பழைய திருக்கோயில்களெல்லாந் தமிழ் மக்களால் அமைக்கப்பட்டுத் தமிழர்க்கே உரியவாகி வருவதால் தமிழவேளாளரினின்றும் அந்தணராகப் பிரித்துவைக்கப்பட்ட இவ்வாதிசைவ வகுப்பாரையன்றி, ஆரியப் பார்ப்பனர் எவரும் இத் திருக்கோயிலிலுள்ள திருவுருவங்களைத் தொட்டு வழிபாடு செய்தற்கு இடம்பெறாராயினர்"[39]

என்று வேளாளரில் ஒரு பிரிவினரே அந்தணர் தொழிலைத் தமிழகத்தில் மேற்கொண்டவர்கள் என்கிறார். இங்கே அந்தணர் தொழிலுக்கு வேளாளர் உரிமைகொண்டாடுவதைக் காணமுடிகிறது.

வேளாளர் ஓதுதற்கும் கடவுள் வழிபாடு ஆற்றுதற்கும் தம்மிடமிருந்து ஓர் அந்தணக் குடியை வைத்தது போலவே, போர்செய்வதற்குரிய ஆற்றலும், குடிகளைப் பாதுகாத்தற்குரிய அறிவு வலியுமுடைய வேளாண்மக்களைப் பிரித்து அரசாளுவதற்கு வைத்ததாகக் கூறுகிறார் மறைமலையடிகள்.

"பண்டைநாளில் மிழலைக் கூற்றத்தை அரசாண்டவனுங், கொடை கொடுப்பதிற் சிறந்தவனுமான வேள்எவ்வி என்னும் மன்னன் வேளாள வகுப்பினனேயாவன். கடையெழு வள்ளல்களில் ஒருவனும், முந்நூறு ஊரையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்பு மலைக்கும் அரசனுஞ், சைவசமயாசிரியருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனாராலே கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப்பாரிலை' என்று பாராட்டி யருளிச்செய்யப்பட்டவனுமாகிய வேள்பாரி

என்னும் மன்னனும் வேளாள வகுப்பினனேயாவன், துவரையை அரசாண்டவனுஞ், சிறந்த கொடையாளியும் ஆகிய இருங்கோவேள் என்னும் அரசனும் வேளாள வகுப்பினனே யாவான். ஒருகாற் குமரிமுதல் இமயம் வரை ஒருமொழி வைத்து உலகாண்ட வேந்தர்பெருமானாகிய சோழன் கரிகாற்பெருவளத்தான், நாங்கூர்வேள் என்னும் தலைவனிடத்துப் பெண் கொண்டமையானும், இக் கரிகாற் சோழனுக்குத் தந்தையாகிய உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி என்னும் மன்னர்பிரான் அழுந்தூர்வேள் என்னும் வேளாண் தலைவன்பால் மகட்கொண்டமையானும் பண்டை நாளிலிருந்த சோழ அரசர்கள் வேளாள வகுப்பினராதல் நன்கு தெளியப்படும்" [40]

என்ற கூற்றின் மூலம், அரசர் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள்தான் என்கிறார் மறைமலையடிகள்.

ஆரியர்கள் வகுத்தளித்த நால்வருணத்தில் அந்தணர், சத்திரியர், வைசியர் என்ற மூன்று வருணத்தினரையும் தம்மவராகக் கொள்ளும் மறைமலையடிகள் சூத்திரர்கள் எனப்படும் வருணத்தில் அடங்கும் சாதிகளைப் பற்றிக் குறிக்கும்போது மிகப் பக்குவமாக எழுதுவதைக் காணமுடிகிறது. தமக்கு உதவுவதற்காக வேளாளர்களே பிரித்து வைத்தாகக் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கதாகும்.

"கொலைபுலை நீக்கமாட்டாராய் அறவொழுக்கத்திற் றாழ்ந்து நிற்போரான மற்றைத் தமிழ்க்குடிகளைத் தமது உழவுத்தொழிலுக்குந் தமக்கும் உதவியாகும் பல கைத்தொழில்களைப் புரியும்படி ஏவி, அவர்களைப் பதினெண் வகுப்பினராகப் பிரித்து வைத்தவர்களும் வேளாளர்களேயாவர். அப்பதினெண் வகுப்பினராவர்: கைக்கோளர், தச்சர், கொல்லர், கம்மாளர், தட்டார், கன்னார், செக்கார், மருத்துவர், குயவர், வண்ணார், துன்னர், ஓவியர், பாணர், கூத்தர், நாவிதர், சங்கறுப்பார், பாகர், பறையர் என்பவரேயாவர்" [41]

என்று மறைமலையடிகள் தொழில்முறைப் பிரிவுகளை வகுத்து நடத்தியது வேளாளர்களே என்கிறார்.

வேளாளரே நாகரித்திற்குப் பிறப்பிடமாய் ஏனைய நாகரிக வகுப்பினர்

எல்லாருந் தோன்றுதற்கு முன்தோன்றியவராக இருப்பதால்தான், இவர்கள் ஆரியர் கூறிய பிரம்ம சத்திரிய வைசிய சூத்திரர் என்னும் நால்வகை வகுப்பினுள் அடங்காதவராகவும், அந்நால்வகையினருக்கும் முற்பட்டவராய்ச் சிறந்து விளங்குவதாய்க் குறிப்பிடுகிறார். சூத்திரர்கள் என்று தங்களைக் குறித்ததை ஒப்புக்கொள்ள மறுத்த மறைமலையடிகள், ஏனைய முப்பிரிவிலும் அடங்காமல் போவதற்கு இப்படிக் காரணம் கற்பிப்பதைக் காணமுடிகிறது. இது பற்றி அவர் விளக்குவது வருமாறு,

"வேளாளரினின்றே அந்தண வகுப்பும் அரச வகுப்பும் பிரிந்தமையின் இவர்களைப் பிராமணரென்றாவது சத்திரியரென்றாவது கூறுதல் பொருந்தாது; அல்லது ஆநிரை காத்து உழவும் வாணிகமும் நடத்துதல் பற்றி இவரை வைசிய ரென்போ மென்றால், இவர்களுட் பலர் அந்தணராயும் அரசராயும் பண்டுதொட்டு வாழ்ந்துவரக் காண்டலால் இவர்களை அவ்வாறு வைசியரென்று வரையறுத்துக் கூறுதலும் ஆகாது.

இனி, இவரைச் சூத்திரரென்று கூறுவோமென்றால் அது முற்றும் அடாத உரையாம். ஆரியர் கூற்றின்படி, சூத்திரரென்போர் பிராமணர் சத்திரியர் வைசியர் என்னும் மூன்று சாதியார்க்குங் குற்றேவல் செய்தல் ஒன்றே உடையரல்லது, வேறு ஏதோர் உரிமையும் ஏதோர் உடைமையும் ஏதொரு முதன்மையும் உடையரல்லர். மற்று வேளாளரோ... தம்மால் நிறுத்தப்பட்ட பதினெண் வகுப்பினர்பாலுந் தாம் ஏவல் வாங்கி வருதலன்றித் தாம் எவர்க்குங் குற்றேவல் செய்யாமையால் பெறப்படும்" [42]

என்பதாகும். இதன்மூலம் வேளாளர், நால்வேறு சாதியினருக்கும் முற்பட்டவராய், நால்வரினும் மேம்பட்டவராய், நாகரிகத்தின் உச்சத்திலிருந்தவராகக் குறிப்பிடுதல் விளங்குகிறது எனலாம். முன்னாளில் சமூகத்தில் மேம்பட்டவராய்' விளங்கிய வேளாளர்கள், ஆரியரின் வருகையாலும், ஆரியர்களின் சூழ்ச்சியாலும் பின்னுக்குத் தள்ளப்பட்டனர் என்று எழுதுகிறார். இக்கருத்துக்களைக் காணும்போது பார்ப்பனருக்குப் போட்டியாகச் சாதியக் கருத்துலகில் இயங்கும் வேளாளர் அரசியல் தெரியவருகிறது. இவர் வழியாக, வேளாளரின் மதம் சைவமதம் என்றும், தமிழரின்

நாகரிகம் வேளாள நாகரிகம் என்றும் ஒரு கருத்தியல் பரவலாக்கப்பட்டது எனலாம்.

### 5.5.2. தேவேந்திரகுல வேளாளர்

பள்ளர் எனக் குறிக்கப்படும் சாதியைச் சேர்ந்த மக்கள் தமிழகத்தின் தென்மாவட்டங்களில் மிகுதியான அளவில் இருந்து வருகின்றனர். இம்மக்கள் தங்களைத் தேவேந்திர குல வேளாளர்கள் என அழைத்துக்கொண்டு சாதிய முறையில் இணைந்து வருகின்றனர். இம்மக்கள் தங்களுக்கெனச் சாதியச் சங்கங்களை நிறுவிக்கொண்டு தங்களுக்கான உரிமைகளைப் பெறப் போராடி வருகின்றனர்.

மள்ளர், பள்ளர், பணிக்கர், கடையனார், பலகனார், குடும்பனார், பண்ணாடி, காலாடி, வாரியன், மூப்பனார், பாண்டியன், தேவேந்திர குலத்தார், தொண்டைமான் என்றவாறு பல பெயர்களுடனும் பட்டங்களுடனும் வாழும் இம்மக்கள் தங்களைத் தேவேந்திரகுல வேளாளர் என அழைத்துக்கொண்டு ஒருங்கிணைந்து வருகின்றனர்.

இம்மக்கள் தேவேந்திர மன்றம், தேவேந்திர குல வேளாளர் சங்கம் என்ற பெயர்களில் பல்வேறு சங்கங்கள் அமைத்துவருகின்றனர். தாங்கள்தான் இம்மண்ணின் அசல் மைந்தர்கள் என்றும், தமிழகத்தை ஆண்ட அரச பரம்பரையினர் தாங்கள் என்றும், வேற்று மொழியினர் ஆட்சியில் சூழ்ச்சியால் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டோம் என்றும் எழுதியும் பேசியும் வருகின்றனர். இம்மக்கள் தங்கள் கருத்துக்களை வெளியிடுவதற்கெனவும், தங்களுக்குள் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளவும் என மள்ளர் மலர், பாட்டாளி முழக்கம் என்ற பெயர்களில் சமூக இதழ்களையும் நடத்தி வருகின்றனர்.

தங்களுக்கான தொன்மை தேடும் முயற்சியில் ஈடுபட்டுள்ள இம்மக்கள் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் எனத் தமிழிலக்கியங்களில் சான்றுகளைத் தேடி வருகின்றனர். மூவேந்தர் யார்?, வேளாளர் யார்?, பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர், தமிழ் மூவேந்தர் மரபினரான தேவேந்திரரின் வீழ்ச்சி, தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) என்ற நூல்கள் இம்மக்களுக்கான அடையாளங்களைத்தேடும் முயற்சியில் வெளிவந்த நூல்களாகும். இந்நூல்கள், இம்மக்களை மருதநிலத்துடன்

தொடர்புடைய நாகரிக மக்களாகவும், வேளாண்மையைத் தொழிலாக உடையவர்களாகவும், அரச பரம்பரையினராகவும் குறிப்பிடுகின்றன. இந்நூல்களின் வழியாக இம்மக்களின் வரலாற்றைக் காணும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

பள்ளர் இன மக்கள் தங்களை மருத நில மக்களாகவும், இந்திரன் (வேந்தன்) வழி வந்தவர்களாகவும் குறிப்பிடுகின்றனர். பழந்தமிழகத்தில் மள்ளர்களாக இருந்த இவர்கள் இடைக்காலத்தில் பள்ளர்களாக மாற்றப்பட்டனர் எனக் குறிப்பிடுகின்றனர். இது குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

"தமிழ்மொழியில் மள்ளர் என்ற சொல்லில் உள்ள மகரம் திரிந்து பகரமாக மாறிய மாற்றம் பள்ளர் என்ற பெயர் தோன்றியதற்கான காரணமாக இருக்கலாம்" [43] என்பர் சி.சிவசண்முகம்.

"தெலுங்கில் பள்ளம் என்பதற்கு நஞ்சை என்று பொருள்படும். ஆக தெலுங்கர்களின் தமிழக வருகைக்குப் பின்னர்தான் இங்கு நஞ்சைப் பயிர் செய்தவர்களைப் பள்ளர் என்று கூறும் பழக்கம் ஏற்பட்டிருக்கவேண்டும்" [44]

என்பர். இன்னும் தெலுங்கர் ஆட்சிக் காலத்தில் மள்ளர்களாக இருந்த இம்மக்கள் பள்ளர்களாக வீழ்த்தப்பட்டனர் என்ற கருத்தும் நிலவுகிறது.

"தேவேந்திரனுக்கும் நீர்நிலையில் உள்ள தாமரையில் உறையும் திருமகளுக்கும் பிறந்த குழந்தையின் வழியினரே தேவேந்திரர்கள் ஆவர்"[45] என்ற கருத்தும் நிலவுகிறது.

"இவர்கள் மருதநில மக்கள் என்பதனால் இக்குலக் கடவுளான இந்திரன் பெயரைத் தங்களுக்கும் சூட்டிக் கொண்டனர். நாளடைவில் தேவ இந்திரன் என்ற பெயர் மருவி தேவேந்திரன் ஆனது" என மருத நில மக்களாக மள்ளரைக் குறிப்பிடுவர் தே.ஞானசேகரன். [46]

இம்மக்கள் தங்களை வேளாளர்கள் என்று அழைத்துக்கொள்வதில் பெருமை அடைகின்றனர் என்பதையும் பார்க்கமுடிகிறது. இதனை,

"சங்க இலக்கியம் முதல் அனைத்து இலக்கியங்களிலும் மள்ளர்கள்தான் ஆதியிலிருந்து போர்த்தொழிலும், உழவுத்தொழிலும் புரிந்து வந்துள்ளனர். "வேளாளர்" என்ற பட்டப்பெயருக்கு உரிமையானவர்கள் மள்ளர்கள், தேவேந்திரகுல வேளாளர்களேயாவர் என்பது தெள்ளத் தெளிவான உண்மையாகும்" [47] என்ற கூற்றிலிருந்து தெளியலாம்.

"கி.பி. 16-ம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட கால கட்டத்தில் வேற்று மொழியினராகிய தெலுங்கர்கள் தமிழ்நாட்டைக் கைப்பற்றியதன் விளைவாகவும், புதிய ஆட்சியாளர்கள் புதிய பாளையப்பட்டுகளை அமைத்து இவர்களுக்குத் துணை போனதாலும், இவ்வின மக்களை - மள்ளர் இனத்தவரைச் சில துரோகிகளின், ஐந்தாம் படையினரின் துணைகொண்டு அடிமைப்படுத்தினர். துரோகிகள் பாளயப்பட்டுக்காரர்களாகவும் ஆக்கப்பட்டார்கள். அத்தோடு நிற்காமல், மள்ளர் சமூகத்தின் பெருமை, போர் திறமை ஆகியவற்றை மனதில் கொண்டு, மள்ளர் பெருமக்களின் "வேளாளர்" என்ற பெயரைத் தங்களுக்கு வைத்துக்கொண்டதோடு, உண்மையான மருதநில மக்களாகிய "மள்ளர்" இனத்தைப் "பள்ளர்" என்ற இழிவான பெயரில் அழைத்துவந்தார்கள்" [48] என்ற கூற்றும் வேளாளர் என்ற பெயருக்கு இவர்கள் உரிமை கொண்டாடுவதை வெளிப்படுத்துகிறது.

மள்ளர்களே பண்டைய அரசர்களாகவும், இவர்கள் முன்னோர்களே கடவுளர்களாகக் கொண்டாடப்படுகின்றனர் என்ற செய்திகளைக் காணமுடிகிறது. "தமிழகத்தில் மட்டுமன்றி வட நாடுகள் வரை சென்று தங்களது வீரத்திற்கு நினைவு சின்னம் நாட்டிய பெருமை தமிழ் மள்ளர் வம்ச மன்னர்களான சேர, சோழ, பாண்டியர் தங்களது வில், புலி, கயற்கொடிகளையும் இமயத்தில் தமது செங்கோலை நிறுவினர் என்று தமிழ் இலக்கிய வரலாறு கூறுகிறது. பாண்டிய நாட்டு சோமசுந்தரமள்ளர் இமயம் சென்று கைலாயத்தை வென்று தன் ஆட்சியை நிலைநாட்டினார் என்பது புராணம் கூறும் கருத்து. மள்ளர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வடக்கே படை எடுத்துச் சென்று வடபுல அரசர்களை வென்றுவந்த செய்தியும், சேரன்

செங்குட்டுவன் கனக விசயர் தலையில் கண்ணகி தெய்வத்திற்கான கல்லை எடுத்துவந்த செய்திகளும் பதிற்றுப்பத்தும், சிலப்பதிகாரமும் கூறும் சான்றுகளாகும்" [49]

என்பதன் மூலம் மூவேந்தர்களும் பள்ளர் இனத்தவர் என்றும், மன்னர் பெயரோடு பள்ளர் என்ற சாதிப் பெயரைச் சேர்த்து தங்கள் இன வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் போக்கையும் அறியமுடிகிறது.

"மருத நில அரசர்களாக, வேந்தர்களாகப் புகழ்பெற்ற தேவேந்திரர்கள் (வேந்தர்), சிவன் (சோமசுந்தர பாண்டியன், சொக்கநாதன், கைலாசன்), முருகன், திருமால், பார்வதி, காளி (மீனாட்சி) ஆகியோர் இன்றும் மருதநிலத் தலைமக்களான மள்ளர் இன மக்களால், முன்னோர் வழிபாடாகவும், பிற திணை நிலமக்களால் இறை (மன்னன்-ஆண்டவன்) வழிபாடாகவும் போற்றி வழிபடப்படுகிறார்கள்" [50] என்றும்,

பெருமாள் என்பது பெருமை+மள்ளர் என்றாகும். பெருமை மிக்க மள்ளர் என்பது பெருமாள் என ஆனது. இதுபோலத் திருமால் என்பது செல்வம் மிக்க எனப் பொருள்படும். இச் சொற்கள் தமிழக வரலாற்றைச் சரியாக அறிந்து கொள்ளப் பயன்படும்"[51]

என்றும் தமிழர்ப் பண்பாட்டை மள்ளர் பண்பாடாகக் காணுகின்றனர்.

"புறநானூற்றிலே போற்றப்படுகின்ற தலைவர்கள் அனைத்தும் மருதநில மள்ளர் குலத் தலைமக்களாகவே உள்ளனர்.

அகப் பொருள் பற்றிப் பாடும் நூல்களும் மருதநிலத்துத் தலைமக்களான மள்ளர் - மள்ளத்தியர்களையே தலைவன்-தலைவியாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. கிழவன் - கிழவி என்பது மருதநிலத்து உடைமையாளர்களைக் குறிக்கும்.

இப்படிச் சங்ககால நூல்களான புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை, பரிபாடல்,

தகடூர் யாத்திரை, புறத்திரட்டு முதலியன எல்லாம் மள்ளர்களைத் தலைமக்களாகக் கொண்டே, பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டே எழுந்துள்ளன என்பது அறியப்படவேண்டும்" [52]

என்று எழுதுவதன் மூலம் தமிழ்ப்பண்பாட்டை மள்ளர்பண்பாடாக பார்க்கும் பார்வை வெளிப்படுகிறது.

"தமிழகத்தைப் பண்டைநாளில் ஆட்சி செய்த தமிழ் மூவேந்தர்களாகிய சேர-சோழ-பாண்டிய மன்னர்கள் திராவிட இனத்தைச் சேர்ந்த மள்ளர்-மல்லர் குடியினர் ஆவர். மள்ளர்-மல்லர் மருத நிலமக்கள். இவர்கள் தெய்வம் வேந்தன். வேந்தன் பின்னாளில் தேவேந்திரன், இந்திரன், புரந்தன், தேவர் வேந்தன் என வழங்கப்பட்டார். இதனால் இம்மரபினர் தம்மைத் தேவேந்திர குலத்தார் என்பர் ஈகை மற்றும் கொடைப்பண்பு காரணமாக வேளாளர் என்றும், வெள்ளத்தை அடக்கி ஆளும் தன்மை மற்றும் வெள்ளாண் குடிகளாய் குடும்புகள் பஞ்சாயத்து சபைகளைத் தலைமை தாங்கி நடத்தி வந்ததால் குடும்பன்-வெள்ளாளர் என்றும் சிறப்பிக்கப் பட்டனர்"[53] என்று இம்மக்கள் வரலாற்றை விளக்குகின்றனர்.

செருவிலொருவ பொருவிறன் மள்ள! (திருமுருகாற்றுப்படை- 263) மல்லன் மன்றத்து (பெரும்பாணாற்றுப்படை- 143) மல்லற் பேரூர்(பெரும் 254),மள்ளர் மள்ள(பெரும் 455)மல்லல் ஆவணம் (நெடுநல்விடை 44)மள்ளர் மள்ள மறவர் மறவ! (பெரும் 455)என வரும் அடிகளைக் கொண்டு பழந்தமிழர் மரபு மள்ளர் மரபு என விளக்குவதைக் காணமுடிகிறது. இவ்வாறு இம்மக்கள் தமிழர் வரலாற்றில் தங்களுக்கான இடம் முறையாகக் கொடுக்கப்படவில்லை என்று குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. அதன் காரணமாகச் சங்க இலக்கியத்திலிருந்து தங்களுக்கான வரலாற்றைக் கட்டுவதையும் அறியமுடிகிறது.

### 5.5.3. மறவர்

தேவர் எனக் குறிப்பிடப்படும் மறவர்குல மக்கள் தமிழகத்தின் தென் மாவட்டங்களில் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். தேவர் இனப்பேரவை,

முக்குலத்தோர் பேரவை என்ற பெயர்களில் சங்கம் வைத்துச் செயல்படும் இம்மக்கள் தங்களை மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். மறவர் இன மக்களாக அறியப்படும் இவர்கள் தங்களது பெயரையும் அடையாளத்தையும் சங்க இலக்கியத்திலிருந்து தேடுவதைக் காணமுடிகிறது. சங்ககால மறவர் என்ற நூல் இச்செயலைத் திறம்படச் செய்கிறது.

மறவர் பெயர்க்காரணம் குறித்து வழங்கும் கருத்துக்கள் வருமாறு,

"1. இராம-இராவணப் போரில் தனக்குப் பேருதவி செய்த தமிழ் வீரர்களை இராமன் 'மறவேன்' என்று கூறியதால் அவர்கள் 'மறவர்' எனப்பட்டனர்.

2. இராமனால் 'மறவன்' என்றழைக்கப்பட்ட குகனது வழிவந்தவர் மறவர்

3. இந்திரன் கௌதமரின் துணைவி அகல்யையுடன் கூடி ஒரே இரவில் பெற்ற மூன்று குழந்தைகளில் மறைவிடத்தில் ஒழிந்து நின்றவன் மறவன் எனப்பட்டான். அவன் வழி வந்தவர் மறவர்.

4. இவர்கள் மரத்திலிருந்து வந்தவர்கள். இதனால் மரத்தினடிப்படையில் மரவர் என்ற பெயர் தோன்றிப் பிறகு மறவர் என்று ஆகியிருத்தல் வேண்டும்"[14] என இவர்களின் பெயர்க்காரணம் கூறப்படுகிறது.

இம்மக்கள் கள்ளர், மறவர், அகம்படியார் என்ற மூன்று வகையினராவர் என்றும், இம்மக்களுக்கு வீரம் பொதுப்பண்பாகவும், தொழில் காவல் தொழிலாகவும் குறிக்கப்படுகிறது. இவர்களைப் பற்றிய செய்திகள் வருமாறு.

"1. அகம்படியர் அரசர் அவையில் அகம்படித் தொண்டு செய்து வந்தவராவர். மெய்க்காப்பாளராக, அணுக்கத் தொண்டு செய்பவர்களாக இவர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர் எனலாம். அரண்மனைக் காவல், ஊர்க்காவல், நகர்க்காவல், எல்லைப்புறக் காவல் ஆகிய தொழில்களிலும் இவர்கள் அமர்த்தப்பட்டிருத்தல் வேண்டும்.

2. மறவர் முழுநேரப் படைவீரர்களாக அமர்த்தப்பட்டிருந்தனர். நால்வகைப் படைகளிலும் பொருமக்களாக இவர்கள் இடம்பெற்றிருந்தனர்.

3. கள்ளர் என்பவர் அரசரால் களவு மற்றும் உளவு வேலைகளில் அமர்த்தப்பட்ட வீரர்களாவர்" [55] என இவர்களைப் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. இம்மறவர் குல மக்கள், சங்ககாலத் தமிழரின் வீரமரபுவழி வந்தவர்கள் என்றும், பிராமணர் தொடர்பில்லாத தூய தமிழர் என்றும் குறிப்பிடப்படுகிறார்கள். இதனை,

"இறந்தார்க்கு நடுகல் எடுக்கும் அன்றைய வழக்கத்தை இன்றைக்கும் மதுரை, இராமநாதபுரம், நெல்லை ஆகிய மாவட்டங்களில் வாழும் இக்குலத்தாரிடம் காணமுடிகிறது. குழந்தை இறந்தால் அதனை வாளால் வெட்டிப் புதைக்கும் பண்டைய வழக்கம் சிறிது மாற்றத்தோடு இன்றைக்கும் இவர்களிடம் காணப்படுகிறது. இறந்த குழந்தைகளின் காதுகளைச் சிறிது அறுத்தோ அல்லது துளையிட்டோ அடக்கம் செய்கின்றனர். தேவன், சேர்வை, தலைவன் என்பன இம்மூவர்க்கும் பொதுவாக உள்ள பட்டப்பெயர்களாகும். இம் மூவகுப்பிற்கும் ஆரியப் பழக்கவழக்கமும் பிராமணர் தொடர்பும் இன்றைக்கும் இல்லாதவர் ஆவர்" [56]

என்ற கூற்று வெளிப்படுத்துகிறது. இங்கே இன்றைய சூழலோடு பழங்காலப் பண்பாடு ஒப்புநோக்கி அடையாளப்படுத்தும் போக்குக் காணப்படுகிறது.

சங்க காலத்தில் இருந்து அரசருக்குத் துணைவர்களாகப், போர்வீரர்களாக இருந்து வந்தவர் மறவர்கள். அதன் காரணமாக மறவர், படைவீரர், படைத்தலைவர், அமைச்சர் ஆகிய பொறுப்புக்களை ஏற்றுச் செயல்பட்டனர் என்றும் கூறப்படுகிறது. சங்க இலக்கியத்தில் காணப்பெறும் மறவர்களைப் பாலைநில மறவர், மறக்குடி மறவர், போர் மறவர் என மூவகையினராகப் பிரித்து அவர்களை மறவர்களின் முன்னோராகக் குறிக்கிறார். சங்க இலக்கியத்தில் மறவர், எனக் குறிக்கப் பாடல்களையெல்லாம் மறக்குடியினரின் பாடல்களாகக் காட்டுகிறார். எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர், மூதின் மகளிர், எனவரும் குடிகளை மறவர் குல முன்னோராகக் குறிப்பதைக் காணமுடிகிறது.

"போரிலே தன் கணவனையோ மகனையோ இழக்க நேரும்போது மறக்குடிப்பெண்கள் கலங்கிக் கண்ணீர் வடிப்பதில்லை. அரசன் கண்களில்

நீர் மல்க, தன் மகன் போரிலே இறக்கவில்லையே என்று மறக்குடித் தாயொருத்தி இரங்குகிறாள்"[57]

என்று கூறுவதன் மூலம் மறவர் இனப் பெண்கள் தமிழர்களின் வீரத்தாய்மார்கள் எனக் காட்டுகிறார். மறவர் குடியைச் சேர்ந்த புலவர்களின் பட்டியலை நூலின் இறுதியில் தருகிறார். இவ்வாறு தமிழ் மண்ணின் அசல் மக்கள் தாங்கள் என்று அடையாளப்படுத்திச் செயற்பட்டு வருவதைக் காணமுடிகிறது எனலாம்.

**5.5.4. அருந்ததியர்**

தாழ்த்தப்பட்ட மக்கள் பிரிவினரில் இடம்பெறும் அருந்ததியர் தங்களுக்கெனச் சங்கங்கள் வைத்துப் போராடி வருகின்றனர். வரலாற்றில் சக்கிலியர் என வழங்கப்பட்ட இம்மக்கள் அருந்ததியர் சங்கம், அறநெறி மன்றம் என்ற பெயர்களில் சங்கங்களை நாடெங்கும் திறந்து வருகின்றனர். இம்மக்கள் தங்கள் தாய்மொழி தமிழ் எனவும், இனம், மொழி, வீரம், நாடு உட்பட தமிழ்நெறிப் பண்பாடுகளுடன் மிகச் சிறந்து வாழ்ந்தவர்கள் எனவும், காலத்தால் வஞ்சிக்கப்பட்டவர்கள் எனவும் கூறிப் போராடி வருகின்றனர்.

அருந்ததியர் மாதிகா, மாதாரி, பகடை, சக்கிலி என்ற பெயர்களால் அழைக்கப்படுவதையும், சக்கிலி என்ற பெயர் இடைச்செருகலான இழிவுபடுத்தும் வடமொழிப்பெயர் எனவும் கூறி அதனை விளக்கித் தம்மை 'அருந்ததியர்' என்ற ஒரே பெயரில் அழைக்கப்பட்டு அரசுப் பதிவிதழில் திருத்தம் கொண்டுவர வேண்டுமெனப் போராடி வருகின்றனர்.[58] இம்மக்களும் சங்க இலக்கியத்திலிருந்து தங்களுக்கான அடையாளத்தைத் தேடுவதைக் காணமுடிகிறது. அருந்ததியர் யார்? என்னும் வினாவுக்கு,

"இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு (50,000 கி.மு.) முன்னால் சங்கம் அமைத்து மொழி, வீரம், வாழ்வியல் செழிக்க வாழ்ந்தவர்கள் தமிழர்கள். தமிழ் நிலத்தைச் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூன்று வேந்தர்கள் ஆட்சி செய்தனர். இவர்கள் தவிர குறுநில மன்னர்களும் தமிழ் நிலத்தில் ஆட்சி செய்துள்ளனர். இவர்கள் வேளிர் என அழைக்கப்பட்டனர். இவ்வேளிர் பிரிவினருள்

ஒரு பிரிவினரான "அதியர்" குடியினர், அன்றைய தகடூர் (இன்று தருமபுரியும் அதை ஒட்டிய நிலப்பகுதியும்) நிலப்பகுதியை ஆட்சி செய்தனர். இந்த "அதியர்" குடி வழி வந்தவர்கள் "அருந்ததியர்கள்" ''

என்று விடையிறுக்கின்றார் எழில்.இளங்கோவன். இதன் மூலம் இவர்களின் வரலாற்றிலும் தொன்மைதேடும் முயற்சி தெரியவருகிறது. இம்மக்களின் பெயர்க்காரணம் பற்றிப் பேசும்போது,

"இனம், மொழி, வீரம், நாடு உட்பட தமிழ்நெறிப்பண்பாடுகளில் மிகச் சிறந்தவர்களாக வாழ்ந்தவர்கள் அதியர்கள். சிறந்த "அருமை (பொருந்திய) அதியர்" என்பது மருவி அருந்ததியர் ஆயிற்று. அதுபோல "மா" என்றால் பெரிய, சிறந்த என்பது தமிழின் வேறுபொருள். "மா அதியர்" என்பது மருவி "மாதியர்" ஆயிற்று. "மாதியர்" என்பது அருந்ததியர்களின் இன்னொரு பெயர். அருந்ததியர், மாதியர் ஆகிய இவ்விரு பெயர்களிலும் அதியர் என்ற குடிப்பெயர் இணைந்து வருவது, அருந்ததியர், அதியர் குடியினர் என்பதை விளக்க ஒரு நல்ல எடுத்துக்காட்டு ஆகும்"[60] என்பர். இங்கே அருந்ததியர் குடிப் பெயர் விளக்கத்தைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

நில அடிப்படையில், பண்டைய நால்வகை நிலத்தில் அருந்ததியர்கள் குறிஞ்சி நிலத்துக்கு உரியவர்களாகக் குறிப்பிடப்படுகிறார்கள். இக்குடியைச் சேர்ந்த மன்னர்களில் சிறந்தவனாக அதியமான் நெடுமான் அஞ்சி குறிப்பிடப்படுகிறான். ஒக்கூர் மாசாத்தியார், ஒக்கூர் மாசாத்தனார் ஆகிய புலவர்கள் அருந்ததியர் இனத்தைச் சேர்ந்த புலவர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர்.

அருந்ததி என்ற பெயர் சங்க இலக்கியங்களில் காணப்படுவதாகக் கூறும் இளங்கோவன்,

"அகநானூறு, பரிபாடல், கலித்தொகை, ஐங்குறுநூறு, திரிகடுகம், சிலப்பதிகாரம் போன்ற பண்டைய நூல்களுள் 'அருந்ததி' என்ற பெண்ணைப் புலவர்கள் கூறுகிறார்கள். அதியர்குடி (அருந்ததியர்) வழி பெண் அருந்ததி! தவிர, எந்த சாதிப் பெயரும் சங்க இலக்கியங்களில் சாதி அடிப்படையில் அல்லாமல்

தொழில் அடிப்படையிலேயே அந்தந்த மக்களைச் சுட்டிக்காட்டுகிறது. பின்வந்த காலங்களிலேயே இவை சாதி என்ற நிலைக்குத் தள்ளப்பட்டன அதியர் என்ற வேளிர் குடியின் குடிவழிப் பெண்ணின் பெயர் "அருந்ததி" இவளைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன. இந்தப் பெயரே பின்வந்த காலங்களில் சாதியப் பெயராக அடையாளம் காட்டப்பட்டது! எனவே அருந்ததியர் என்ற பெயர் பன்மையில் அல்லாமல், ஒருமையில் சங்க இலக்கியம் சுட்டிக் காட்டுகின்றன என்பதைத் தெளிவாகத் தெரியலாம்" [61] என்றெழுதுகிறார்.

இதன் மூலம் சாதிய எழுச்சியின் காரணமாக ஒவ்வொருவரும் தங்கள் சாதிக்கான வரலாற்றைத் தேடுவதையும், அதற்குச் சங்க இலக்கியத்தைக் துணைக்கு அழைத்துப் பயன்படுத்திக் கொள்வதையும் காணமுடிகிறது.

### 5.5.5. தலித் மக்கள்

'தலித்' மக்களும் தங்களுக்கான அடையாளத்தைச் சங்க இலக்கியங்களில் இருந்து தேடுவதைக் காணமுடிகிறது. 'தலித்' என்று குறிக்கும்போது அது தனிப்பட்ட ஒரு சாதியைக் குறிப்பதில்லை. ஒடுக்கப்பட்டு, தாழ்த்தப்பட்ட சாதிகளின் தொகுப்பையே இச்சொல் குறிக்கிறது எனலாம்.

> "யார் தீண்டப்படாதாரோ, எவரெவர் ஷெட்யூல்டு இனப்பட்டியலில் இணைக்கப்பட்டுள்ளனரோ அவர்களே 'தலித்' மக்கள். இவர்கள் வரலாற்றில் பல்வேறு காலக்கட்டங்களில் பற்பல பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளனர். வேத நூல்களில் தாசா, தஸ்யூ, ராக்ஷசா, அசுரா, பஞ்சமா, மிலேட்சா, சாண்டாளா போன்ற பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். அத்துடன் இவர்கள் 'அவர்ணா' அல்லது சாதி அற்றவர் என்றும் அழைக்கப்பெற்றனர்" [62]

என்ற வரையறை தலித் மக்களை இனங்காணப் போதுமானதாக இருக்கும் எனலாம். மேலும்,

> "தலித் என்ற சொல் 'தல்' என்ற சமஸ்கிருத மூலத்திலிருந்து வந்ததாகும். அத்துடன் இஃது ஈப்ரு மொழியுடன் தொடர்புள்ளதாக அறியப்படுகிறது. 'தல்' என்பது சமஸ்கிருதத்தில் நசுக்கப்பட்ட, உள்ளடக்கப்பட்ட, அழிக்கப்பட்ட,

சிதறிய, உடைந்த, வெடித்துச் சிதறிய, பிளவுபட்ட போன்ற பொருள்களில் பேசப்படுகின்றது. அதனால்தான் 'தலித்' என்பது இந்தியச் சமூகத்தில் ஒடுக்கப்பட்ட மக்களை, நசுக்கப்பட்ட மக்களைச் குறித்துப் பயன்படுத்தப்படுகிறது" [63]

என்ற விளக்கம் தலித் மக்களை விளங்கிக்கொள்ள கூடுதலாக அமைகிறது. இப்படிச் சமூகத்தில் காலங்காலமாக அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்ட மக்களைத் தற்காலச் சிந்தனையாளர்கள் 'தலித்' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர்.

தலித் மக்களின் பண்பாட்டைத் தமிழ்ப்பண்பாடாகக் காண முயற்சிப்பர் ராஜ். கௌதமன். இவருடைய தலித் பண்பாடு, தலித் பார்வையில் தமிழ்ப்பண்பாடு என்ற நூல்கள் இந்த வேலையைச் செய்கின்றன எனலாம்.

தலித் மக்களாகக் கானக்குறவர்கள், எயினவேடர்கள், பரதவர், உமணர், ஆயர், உழவர், கைவினைஞர், வணிகர், கலைக்குழுவினர், புலையர் ஆகிய மக்களை இனங்காண்கிறார். தலித் மொழியையும் இந்நூலில் கையாண்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சங்க இலக்கியங்களில் புலவர்கள் தம்பாடல்களில் உழைக்கும் மக்களுக்கு உரிய இடத்தைக் கொடுக்கவில்லை என்றும், அவர்களை மீறியே இயல்பாக இம்மக்கள் இடம் பெற்றார்கள் என்றும் கூறுவதைக் காணமுடிகிறது.

"அந்தப் பதினெட்டுத் தொகுப்பு நூல்களிலிருந்து கிடைத்துள்ள தகவல்களை எடுத்துப் பார்த்தால், வடக்கிலிருந்து வந்த, வைதீக, வைதீகமல்லாத (அதாவது ஜைன, பௌத்த மதங்கள்) சமயச் சார்பான பண்பாடுகளால் பேரளவிற்குத் தாக்கம் அடையாத மக்கள் தொகுதிகளை இனம்காண முடிகிறது. இம்மக்களுக்கு, அக்காலப் புலவர்கள் தங்கள் பாடல்களில் முதன்மையான இடம் கொடுத்துப் பாடவில்லை. அரசர்கள், வள்ளல்கள், தலைவர்களைப் புகழ்ந்து அக, புறப் பாடல்களைப் பாடியபோது, இலக்கிய இலக்கண சம்பிரதாயங்களுக்காகவும், உத்தி விசேசங்களுக்காகவும் இம்மக்களைப் பற்றிப் பாட நேர்ந்துவிட்டது. இம்மக்களில் உழவர்களைத் தவிர, பிறர் கடற்கரை, காடு,

மலை, வறண்ட நிலம் முதலிய ஓரப்பகுதிகளில் உணவு சேகரித்தும், விளைவித்தும், வேட்டையாடியும், மீன் பிடித்தும், உப்பு விளைவித்தும், இவற்றை நெல்லுக்குப் பண்டமாற்றமாக விற்றும் தங்கள் உடல் உழைப்பால் வாழ்ந்தார்கள்" "

என்று எழுதுகிறார். உண்மையான உழைக்கும் மக்களான இவர்கள் ஆதிக்க வர்க்கத்தினராலும், வைதிகச் சமயத்தினாலும் நாளுக்கு நாள் புறக்கணிக்கப்பட்டு ஒடுக்கப் பட்டதாகக் கூறுகிறார். அசலான தமிழ்ப் பண்பாட்டுக்குச் சொந்தக்காரர்கள் இவர்கள்தான் என்று எழுதுவதைக் காணமுடிகிறது.

ஐவகை நிலத்து மக்கள் வாழ்க்கையும், அவர்களது தெய்வம், தொழில், இருப்பிடம் முதலானவற்றையும் குறிப்பிட்டுச் சமகாலத் தலித் மக்களின் வாழ்க்கையோடு ஒப்பிடுகிறார். வேட்டையாடுதல், மீன் பிடித்தல் முதலான தொழில்கள் இன்றும் தலித்மக்களிடம் இருப்பதோடு தொடர்புபடுத்தி ஆதித் தமிழர்ப் பண்பாடு தலித் பண்பாடுதான் என்று நிறுவுகிறார்.

மேட்டுக்குடித் தமிழர்களோடு உறவாடிய படித்த புலவர்கள், இந்த உழைக்கும் மக்களைக் கொடுமையானவர்களாகவும், கொள்ளையடிப்பவர்களாகவும் காட்டிவிட்டு, உண்மையிலேயே கொள்ளையிடும் மன்னர்களைப் புகழ்ந்து பாடியிருப்பதாகக் குறிப்பிடுகிறார். இதனை,

"மேட்டுக்குடித் தமிழர்களோடு உறவாடிய படித்த புலவர்கள் இந்த எயின வேடர்களைக் கொலைகாரர்கள் என்றும், கொடிய தொழில்புரிபவர்கள் என்றும், வழிபோக்கர்களிடம் பொருள் இல்லாவிட்டாலும் கூட அவர்களைக் கொன்று பறவைகளுக்கு உணவாக்குவார்கள் என்றும் வசைபாடினார்கள் (அக. 375)... ஆனால் இதே புலவர்கள்தான் முடியுடை மூவேந்தர்கள், நானாவிதப் படைகளோடு சென்று வேற்று நாட்டிலிருந்த ஊர்களை எரித்ததையும், உயிர்களைக் கொன்றதையும், விளைந்த நெல்லைச் சூறையாடியதையும், வயல்களைத் தரிசுநிலமாக்கியதையும், பெண்களைக் கொள்ளையடித்து வந்து 'கொண்டி மகளிர்' என்று வைத்துக்கொண்டதையும், "வில் அலைத்து உண்ணும்

வல்லாண் வாழ்க்கைத் தமிழ்கெழு மூவர்" (அக. 31) என்று போற்றிப் புகழ்ந்தார்கள்." [65]

என்று குறிப்பிடுவதன் மூலம் அறியமுடிகிறது. இப்படி மேட்டுக்குடி அதிகாரவர்க்கத்தினர் உழைக்கும் மக்களைத் தாழ்நிலைக்குக் கொண்டுவந்தனர் என்கிறார். இதனை,

"என்ன செய்யிறது தம்பி. நம்ம கத இன்னிய வரைக்கும் சோகக் கததாம். சோக வரலாறுதாம். தமிழ்ப் பண்பாட்டுக்குள்ள நம்ம தலித் கதயும் ரொம்ப ரொம்ப சோகக் கததாம். நாகரீகம், சொத்து, செல்வாக்கு, அதிகாரம்னு எல்லாத்தோடயும் மேட்டுக்குடித் தமிழ்ப் பண்பாடு சேந்துக்கிட்டு நம்ம ஒரிஜினல் பண்பாட்டக் கேவலம்னு ஆக்கிட்டாங்க"[66] என்ற கூற்றிலிருந்து அறியமுடிகிறது.

"ஆறுகள், வாய்க்கால்கள், குளம் குட்டைகள், ஏரிகள் இருந்த நீர்ப்பாசனப் பகுதிகளில் உழவர்கள், நெல், கரும்பு விவசாயம் பார்த்தார்கள். உடலால் உழைத்த இவர்களைப் புலவர்கள் 'கருங்கை வினைஞர்' (பெ.ஆ.), 'வன்னக வினைஞர்' (புற. 61), 'கைவினை மாக்கள்' (குறு. 309) என்று வருணித்தார்கள்" [67] என்று எழுதுவதிலிருந்து உழைக்கும் மக்கள் அதிகாரவர்க்கத்தால் ஒடுக்கப்பட்டதை எடுத்துக்காட்டுவது தெரிகிறது.

இவ்வாறு சாதிய எழுச்சியின் காரணமாக ஒவ்வொரு சாதியினரும் தங்களுக்கான வரலாற்றைக் கட்டவும், வேர்களைத் தேடவும், அடையாளம் காணவும் முற்பட்டதை அறிய முடிகிறது.

## 5.6. கருத்துரை

1. பல்வேறு தன்மைகளின் அடிப்படையில் உருவான சாதிகள் இன்று பிறப்பின் அடிப்படையில் தீர்மானிக்கப்படுகிறது. சாதிய எழுச்சியின் காரணமாகச் சாதி அமைப்புக்கள் வலுப்பெற்று வருகின்றன.

2. ஒவ்வொரு சாதியினரும் தங்களுக்கான வரலாற்றைக் கட்டும் வேலையில் ஈடுபட்டு வருகின்றனர். இதன் காரணமாகத் தொன்மை தேடும் பண்பு ஒவ்வொரு

சாதியினரிடமும் தொழிற்படுகிறது. தமிழின் பழம்பெரும் இலக்கியமான சங்க இலக்கியத்திலிருந்து தங்களுக்கான அடையாளத்தைத் தேடும் முயற்சியில் ஈடுபடுகின்றனர். இதனைச் சாதிய அடிப்படையிலான சங்க இலக்கிய ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன.

3. இவ்வாறு ஆராய்ந்ததன் மூலம், சாதிய இயக்கங்களுக்குத் தேவையான கருத்தாக்கங்களைப் புனைவதற்குச் சங்க இலக்கியம் பயன்பட்டிருக்கிறது என்ற உண்மை வெளிக் கொண்டுவரப்பட்டது. அத்துடன் 'வரலாறு என்பது காலத்தேவைக்குத் தகுந்தவாறு புனையப்படுவதுதான்' என்ற உண்மைக்குச் சாதிய வரலாறுகள் வலிமை சேர்ப்பதையும் காணமுடிகிறது எனலாம்.

## அடிக்குறிப்புக்கள்

1. அ.மார்க்ஸ், சிற்றிலக்கியங்கள் சில குறிப்புகள், கோ.கேசவன், முன்னுரை, ப. IX
2. சாதியும் வர்க்கமும், (தொகு.), ப. 59
3. கெயில் ஓம்வெட், வர்க்கம்-சாதி-நிலம், ப. 58
4. குணா, வகுப்பும் சாதியும் வரணமும், ப. 27
5. சாதியும் வர்க்கமும் (தொகு.), அ. மார்க்ஸ், முன்னுரை, பக். 13, 14
6. மேலது., ப. 14.
7. மேற்கோள், வே. கருணாநிதி, தற்காலக் கவிதைகளில் தலித்தியக் கூறுகள், (அச்சில் வராத ஆய்வேடு), ப. 6
8. மேற்கோள், மேலது., ப. 6
9. கெயில் ஓம்வெட், மு.நூ., ப. 13
10. அ. மதிவாணன், சாதிகளின் பொய்த்தோற்றம், ப. 73
11. தமிழ்நாடன், மநு தர்மம், ப. 4
12. மேலது., ப. 151
13. கோ. கேசவன், சாதியம், ப. 44
14. தி.சு. நடராசன், தமிழின் அடையாளம், பக். 44, 45
15. மேலது., ப. 45
16. வே. கருணாநிதி, மு.கு.ஆ., பக். 12,13
17. ந.க. மங்கள முருகேசன், தமிழ்நாட்டுச் சமுதாய பண்பாட்டு வரலாறு, ப. 321
18. மேற்கோள், வே. கருணாநிதி, மு.கு.ஆ., ப. 38
19. ஞானி, (தொகு.), மார்க்சியத்தின் புதிய பரிமாணங்கள், ப. 26
20. பெ.சு. மணி, இந்திய தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 5
21. E.V.G., (தொகு.), நீதிக்கட்சியின் தோற்றமும் வளர்ச்சியும், ப.5
22. மேலது., ப.6
23. பீ.கம்பர் மாணிக்கம், (தொகு. ஆ.), தலித் விடுதலை இயல், ப. 18
24. அ. மார்க்ஸ், திராவிட இயக்கப் பாரம்பரியத்தில் 'தமிழர்கள்' கவனத்தில் கொள்ள வேண்டிய சில வரலாற்று உண்மைகள், அ. மார்க்ஸ், மற்றும் சிலர், (தொகு.ஆசி.), தேசியம் ஒரு கற்பிதம், ப. 148
25. மேலது., ப. 150
26. மேலது., பக். 151, 152
27. க. பஞ்சாங்கம், சிலப்பதிகாரத் திறனாய்வுகள் - ஒரு பார்வை, ப. 77

28. ந.க. மங்கள முருகேசன், இந்தியச் சமுதாய வரலாறு, ப. 99

29. வே. ஆனைமுத்து, (பதி. ஆ.), பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள், (முதல் தொகுதி), ப. 12

30. க. பஞ்சாங்கம், மு.நூ., ப. 78

31. பாரதியார் கட்டுரைகள், (தொகு.), பூம்புகார் பிரசுரம், ப. 60

32. ந.க. மங்கள முருகேசன், தமிழ்நாட்டுச் சமுதாய பண்பாட்டு வரலாறு, ப. 3122

33. ராஜ் கௌதமன், பார்ப்பனரும் வேளாளரும் தமிழரும், அ. மார்க்ஸ், மற்றும் சிலர், (தொகு.ஆசி.), மு.நூ., ப. 158

34. மறைமலையடிகள், வேளாளர் நாகரிகம், முன்னுரை, பக். 6, 7

35. மேலது., ப. 8

36. மேலது., ப. க

37. மேலது., ப. ந

38. மேலது., பக். அ, கூ

39. மேலது., ப. கூ

40. மேலது., பக். க0, கக

41. மேலது., பக். கக, கஉ

42. மேலது., பக். கச, கரு

43. சி. சிவசண்முகம், ஒலியியல் அடிப்படையில் மள்ளர்-பள்ளர் பெயர் மாற்றம், குருசாமி சித்தர், தே. ஞானசேகரன், (பதி.ஆசி.), தமிழர் பண்பாட்டு வரலாறு, ப.14

44. தேவ ஆசிர்வாதம், பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர், ப. 116

45. செ. சண்முக பாரதி, இம்மானுவேல் தேவேந்திரர், ப. 12

46. சி. சுந்தராம்பாள், காப்பியம் காட்டும் மள்ளர் மரபினர், குருசாமி சித்தர், தே. ஞானசேகரன், (பதி.ஆசி.), மு.நூ., ப. 57

47. கணபதி குடும்பனார், கொங்குநாட்டில் தேவேந்திரகுல வேளாளர் கும்மிப்பாடல், மேலது., ப. 166

48. மேலது., ப. 120

49. ஐ. குணசேகர், தேவேந்திரகுல வேளாளர் இனம் அன்றும் இன்றும் ஒரு வீர பரம்பரை, மேலது., பக். 121, 122

50. குருசாமி சித்தர், தமிழக வரலாறும் தேவேந்திரர் வரலாறும் பிரிக்கமுடியாதது, மேலது., ப. 84

51. மேலது., ப. 86

52. மேலது., ப. 83

53. இ. கமலி கஜேந்திரன், போர்க்குணமும் பொறைக்குணமும் சங்கால மருதநில மன்னர், வாழ்வியல் (பத்துப்பாட்டின் வழி), மேலது., ப. 100

54. சு. முத்தையா, சங்க கால மறவர், ப. 18

55. மேலது., பக். 19, 20

56. மேலது., ப. 21

57. மேலது., ப. 55

58. எழில். இளங்கோவன், அருந்ததியர் வரலாறு - வினாவும் விடையும், அணிந்துரை, பக். இ.

59. மேலது., ப. 1.

60. மேலது., ப. 1.

61. மேலது., பக். 4, 5.

62. பூ. மூர்த்தி, தலித் சமூகவியல், பக். 13, 14.

63. மேலது., ப. 9.

64. ராஜ் கௌதமன், தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு, பக். 6, 7.

65. மேலது., பக். 18, 19.

66. மேலது., ப. 20.

67. மேலது., ப. 41.

# புதிய திறனாய்வுப் பார்வைகளும் சங்க இலக்கியமும்

6.0 ஆங்கிலக் கல்வி முறையின் அறிமுகத்தாலும், ஆங்கிலத்தில் பெருகிக் கிடந்த திறனாய்வு நூல்களின் வருகையினாலும் தமிழ்ச் சூழலில் புதிய திறனாய்வுப் போக்குகள் வளரத் தொடங்கின எனலாம். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவான இப்போக்கு இன்றைய வரையில் தொடர்ந்து நிலவி வருகிறது. இத் திறனாய்வுப் பார்வைகளின் பெருக்கத்தினால் தமிழ் இலக்கியங்களுக்குப் புதுப்புது விளக்கங்கள் வந்து சேர்ந்தன. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரால் வளர்த்தெடுக்கப்பட்ட சங்க இலக்கியமும் இப்புதுத் திறனாய்வுப் பார்வைகளுக்குள் சிக்காமல் தப்பவில்லை. இப்புதிய திறனாய்வாளர்களால் சங்க இலக்கியம் பல்வேறு புதிய மதிப்பீடுகளுக்கு உட்படுத்தப்பட்டு விளக்கம் பெற்றது.

புதிய திறனாய்வுப் பார்வைகளின் வரவால் சங்க இலக்கியம் புதிய மதிப்பீடுகளுக்கு உள்ளாக்கப்பட்டதை விளக்கும் முயற்சி இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது. அதற்கு உதவியாக இவ்வியல், மூலப்பாடத் திறனாய்வு - உரை மரபுத் திறனாய்வு - கல்வியாளர் திறனாய்வு - அழகியல் திறனாய்வு - சமூகவியல் திறனாய்வு - ஒப்பிலக்கியத் திறனாய்வு என்ற உட்தலைப்புக்களாகப் பிரித்துக் கொள்ளப்படுகிறது.

## 6.1. மூலப்பாடத் திறனாய்வு

மேலைநாடுகளில் டெக்ஸ்டுவல் கிரிட்டிசிஸம் (Textual Criticism) எனத் தனியொரு துறையாகவே வளர்த்தெடுக்கப்பட்டிருக்கும் மூலப்பாடத் திறனாய்வானது தமிழ்ச் சூழலில் குறிப்பிடத்தக்க அளவில் வளரவில்லை.

> "எந்த நூலுக்கும் மூலப்பாடமே முக்கியமானது. ஏனென்றால், அதுவே நூலாசிரியர் பயன்படுத்திய பாடத்தை வரையறுப்பதற்கு உதவுகிறது. மேலும், அது ஆசிரியரின் மூலக்கருத்தையும் சரியாக அறிந்து கொள்ளப் பயன்படுகிறது" [1]
>
> என்பர் செ.வை. சண்முகம்.

தொடர்ந்து மதப் போராட்டங்களில் சிக்குண்டும், வேற்று மொழியினரின் ஆதிக்கத்திற்கு நீண்டகாலமாக ஆட்பட்டும் வந்த மொழியாகக் காணப்படுகிறது

தமிழ்மொழி. இருபதாம் நூற்றாண்டில் உருவான பாரதியின் கவிதைகளையே மூலப்பாட ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய சூழல் இருக்கும்போது, இரண்டாயிரம் ஆண்டுக்காலப் பழைமை வாய்ந்த இலக்கியங்கள், மூல நூல் ஆசிரியன் எழுதியபடியே கிடைப்பதற்கான வாய்ப்பு மிகக் குறைவு எனலாம். எனவே, தமிழ்ச் சூழலில் அவரவர் விருப்பு வெறுப்புகட்கும், ஈடுபாட்டுக்கும் ஏற்ப மூலப் பிரதியானது பல்வேறு மாற்றங்களுக்கு உள்ளாகியிருக்க வாய்ப்பு இருக்கிறது. எனவே, தமிழ்ச் சூழலில் மூலப்பாடத் திறனாய்வின் தேவை அதிகமாகிறது. அந்தவகையில் சங்க இலக்கியங்கள் பதிப்பிக்கப்பட்ட சூழலில் மூலப்பாட ஆய்வானது செயற்பட்ட பாங்கை விளக்குவதற்கான முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர், அழியும் நிலையில் இருந்த பழந்தமிழ் இலக்கியங்களை அச்சில் கொண்டுவரும்பணியில் மும்முரமாக ஈடுபட்டனர். இப்பணி ஓர் இயக்கம் போலவே தொடர்ந்து நடைபெற்றது எனலாம். 1887 முதல் தொடங்கப் பெற்ற சங்க இலக்கியப் பதிப்புப் பணி 1940 வரை வேகமாக நடைபெற்றது.

"ஏடுகளின் குடிவழியை (Generaligical tree) ஆராய்வது, ஏடுகளை அறிவியல் ஆய்வு நெறிமுறைப்படி ஒப்பிடுவது, முதலிய ஆய்வு முறைகளால் ஏடுகளின் முதன்மையான மூலத்தை (Archetype) உறுதிப்படுத்திப் பதிப்பதுதான் உண்மையான மூலப்பாடத் திறனாய்வாகும்" [2] என்பர் க. பஞ்சாங்கம்.

இத்தகைய புதிய திறனாய்வியல் அணுகுமுறை, சங்க இலக்கியப் பதிப்பாளர்களிடையே செயல்படாவிட்டாலும், ஒரு மூலப்பாட ஆய்வாளனுக்குத் தேவையான கடமையுணர்ச்சியும், பொறுப்புணர்வும் மிகுதியாகவே செயல்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

மூலப்பாடத் திறனாய்வுப் பணி மிகவும் இடர்ப்பாடு உடைய பணி எனக் குறிப்பிடுவார் குளோறியா சுந்தரமதி, அவருடைய கூற்றாவது,

"ஏடுகளைத் திரட்டும் பணியிலிருந்து, ஒரு பாடலுக்குக் கிடைக்கும் பல ஏடுகளை ஒப்பிட்டு நோக்கி அவற்றின் வம்சாவளியை ஊகித்து, ஒழுங்குபடுத்தி அவற்றில் மூலத்தோடு பெரிதும் ஒத்த ஓர் ஏட்டைத் தேர்ந்தெடுத்துப்

பதிப்பித்தல் அல்லது பல ஏடுகளையும் ஒப்பிட்டுப் பிழைகளைந்து சரியான பாடத்தை நிறுவுதல் என்ற இடர்ப்பாடு மிகுந்த பணி நூலைப் பதிப்பித்தற்கு முன்னோடியாக அமையும் பணி" [3] என்பதாகும்.

சங்க இலக்கியப் பதிப்புப் பணியில் ஈடுபட்டவர்கள், சி.வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், மறைமலையடிகள், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், தி. சௌரிப் பெருமாள் அரங்கனார், இராஜகோபாலய்யங்கார், கா.ரா. நமச்சிவாய முதலியார், இ.வை. அனந்தராமையர், வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர், இராமரத்தின ஐயர், க.ப. சந்தோஷம், சோ. அருணாசல தேசிகர், தை.ஆ. கனகசபாபதி முதலியார், காசி விசுவநாதன் செட்டியார், ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை, இளவழகனார், எஸ்.வையாபுரிப்பிள்ளை, ரா.இராகவையங்கார், பொ.வே.சோமசுந்தரனார், மர்ரே. எஸ்.ராஜம், புலியூர் கேசிகன், மு. சண்முகம் பிள்ளை முதலானோர் ஆவர்.

இன்றுவரை பல்வேறு பதிப்புக்களைக் கண்டிருக்கும் சங்க இலக்கியத்தின் முதற்பதிப்பாளர்களாக அறியத்தக்கவர்களை இங்குக் குறிப்பிடுவது பொருத்தமானதாகும்.

1887 - கலித்தொகை - சி.வை. தாமோதரம்பிள்ளை

1889 - பத்துப்பாட்டு - உ.வே. சாமிநாதையர்

1894 - புறநானூறு - உ.வே. சாமிநாதையர்

1903 - ஐங்குறுநூறு - உ.வே. சாமிநாதையர்

1904 - பதிற்றுப்பத்து - உ.வே. சாமிநாதையர்

1914 - நற்றிணை - பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்

1915 - குறுந்தொகை - தி. சௌரிப் பெருமாள் அரங்கனார்

1918 - பரிபாடல் - உ.வே. சாமிநாதையர்

1920 - அகநானூறு - இராஜகோபாலய்யங்கார்

1887 - இல் தொடங்கிய சங்க இலக்கியப்பதிப்பு 1920 இல் முதற்பதிப்பு என்ற நிலையில் முழுமைபெறுகிறது.

### 6.1.1. உ.வே. சாமிநாத ஐயர்

மூலப்பாடத் திறனாய்வில் தம்மை முழுதும் கரைத்துக்கொண்டு தொடர்ந்து பதிப்புப் பணியில் ஈடுபட்டவராக உ.வே. சாமிநாத ஐயர் காணப்படுவதை அறிய முடிகிறது. தம் வாழ்நாளின் பெரும்பகுதியை, ஏடுகளை ஆய்வதில் செலவிட்ட இவர் இறுதி வரையில் ஈடுபாட்டுடன் செயல்பட்டதைக் காணமுடிகிறது. சங்க இலக்கியங்களில் பெரும்பகுதியை, ஐந்து நூல்களை ஓலைச் சுவடிகளில் இருந்து ஆய்ந்து அச்சில் முதன்முதலாகக் கொண்டுவந்தவரும் இவரே ஆவார். அத்துடன் தொடர்ந்து மறுபதிப்புக்களை வெளியிட்டு வந்ததும் குறிப்பிடத்தக்கதாகும்.

உ.வே.சா. தாம் பதிப்பித்த நூல்களில் எழுதியுள்ள நூல் முகவுரைகள், மூலப்பாட ஆய்வின் சிரமத்தையும், இவர் மூலப்பாட ஆய்வை மேற்கொண்ட நெறிகளையும் எடுத்துக்காட்டுவதாக அமைகிறது. தமிழ் மொழியைப் பொறுத்த அளவில் மூலப்பாட ஆய்வின் சிரமம் சற்றுக் கூடுதலானது எனலாம். மூலப்பாட ஆய்வின் சிரமத்தை உ.வே.சா. வின் பத்துப்பாட்டு முகவுரை தெளிவுபடுத்துகிறது.

> "ஏட்டுச் சுவடியிலுள்ள ஒரு நூலை ஆராய்ந்து வெளியிடுவதில் உண்டாகும் துன்பம் மிக அதிகம். அச்சுப் பிரதியிலுள்ளவாறு ஏட்டுச்சுவடி அமைந்திராது; சுவடியில் எழுதுவோரால் நேரும் பிழைகள் பல; குறியீடுகள், கொம்பு, கால், புள்ளி முதலியவை இரா; நெடிலுக்கும் குறிலுக்கும் வேறுபாடு தெரியாது; அடிகளின் வரையறைகளும்; இது மூலம், இஃது உரை, இது மேற்கோளென்று அறியவும் இயலாது; எல்லாம் ஒன்றாக எழுதப்பட்டிருக்கும். இவ்வளவு கஷ்டங்களோடு மூலமும் இல்லையெனில் அந்நூலைச் செவ்வியுற அமைப்பது இத்துணை மனக்கலக்கத்தையும் தளர்ச்சியையும் உண்டாக்குமென்பதை அறிஞர்கள் நன்கு அறிவார்கள். எனவே, அவ்வாறு ஆராய்ந்து மூலத்தைத் தொகுப்பதில் எனக்குண்டான துன்பம் அளவிடற்கரியது"

உ.வே.சா. வின் இக்கூற்று மூலப்பாட ஆய்வின் சிரமத்தை வெளிப்படுத்துகிறது. எனினும் சிரமம் பாராமல் தொடர்ந்து இப்பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். சரியான சான்றுகள் கிடைக்காதபோது பிரதியில் இருந்தவாறு பதிப்பிக்கும் போக்கு உ.வே.சா. விடம் காணப்படுகிறது. புறநானூறு முகவுரையில்,

"அன்றியும், இதன் இடையிடையே சிற்சில வாக்கியங்கள் அவ்வவ்விடத்திற்குப் பொருத்தமில்லாதனவாகக் காணப்பட்டன. அவற்றைச் செவ்வை செய்து கொள்ளுதற்கு இப்பொழுது தக்க சாதனம் கிடையாமையாலும் இனி நல்ல பிரதிகள் கிடைப்பின் அவற்றைக் கொண்டு செவ்வைசெய்து கொள்ளலாமென்றும் அவற்றை மாற்றாது பிரதிகளிலிருந்தவாறே பதிப்பித்தேன்" [5]

என்கிறார். இதன் மூலம் சான்றுகளுக்கு முதன்மைதருதல், புதியன கிடைக்கும்போது பழைய பாடத்தை மாற்றிக் கொள்ளும் பக்குவம், தொடர்ந்து தேடும் முயற்சி என ஆய்வாளனுக்குத் தேவையான குணங்களைக் கொண்டிருப்பது தெரிகிறது.

இதேபோல் பதிற்றுப்பத்து முகவுரையில்,

"முதற்பத்தும் பத்தாம்பத்தும் இவற்றிற் கிடையாமற் போனதன்றி உள்ள எட்டுப் பத்திலுங்கூடச் சில விடங்களில் மூலங்கள் குறைந்தும் உரைகள் சிதைந்தும் பிறழ்ந்தும் இருந்தன. அத்தகைய இடங்களில் என்னாற் செய்யத் தக்கது ஒன்றும் இல்லாமையால் அவற்றை இருந்தவாறே பதிப்பித்திருக்கிறேன். முதற்பதிப்பைக் காட்டிலும் இரண்டாம் பதிப்பில் சில திருத்தங்கள் அமைந்தன. நாளடைவில் செய்து வந்த ஆராய்ச்சியினாற் கண்ட சில புதிய திருத்தங்களை இப்பதிப்பிற் காணலாம்" [6]

எனக் கூறுவதிலிருந்து, வெறுமனே மறுபதிப்பு என்றில்லாமல் ஒவ்வொரு பதிப்பிலும் மூல ஏடுகளை ஆய்ந்து செம்மைப் படுத்தும் போக்கைக் காணமுடிகிறது.

இவ்வாறு, பல சிரமங்களுக்கிடையில் நூலைப் பதிப்பித்து வெளியிடும் போது, அந்நூல் அறிஞர்களிடையே பல்வேறு விவாதங்களுக்கும், பல்வேறு புதிய செய்திகளின் வெளிப்பாட்டுக்கும் காரணமாகும்போது, மிகுந்த மகிழ்ச்சிக்கு உள்ளாகிறார். இதனைப் புறநானூறு முகவுரையில்,

"இவ்வொரு நூல் இத்துணை ஆராய்ச்சிகளுக்கு இடம் கொடுப்பதையும், இதனை வெளியிடும்படி நேர்ந்த திருவருள் திறத்தையும் எண்ணும்போது

தமிழ்ப்பணியை இடையீடின்றிச் செய்துவருங்கால் இடையிடையே பலவகையால் தோன்றும் துன்பங்களை மறந்துவிடற்குரிய பெரிய ஆறுதல் உண்டாகிறது" [7]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறிந்துகொள்ளமுடிகிறது. மூலப்பாட ஆய்வில் தொண்டுள்ளத்துடன் செயற்பட்ட பாங்கும் வெளிப்படுகிறது. உ.வே.சா. வின் மூலப்பாட ஆய்வைக் காணும் போது,

1. தமக்குக் கிடைத்த அரிய தகவல்களையும், ஆய்வுக் குறிப்புக்களையும் முகவுரை மூலம் வாசகனுக்குத் தருதல்.

2. பாட பேதங்களைப் பாடல்களின் கீழே குறிப்பிடுதல்

3. முதற்பதிப்பில் கொண்ட பாடம் தவறென உணர்ந்தபோது மறுபதிப்புக்களில் மாற்றிக் கொள்ளுதல்.

4. ஒவ்வொரு பதிப்பின் போதும் புதிதாகக் கிடைக்கும் மூல ஏடுகளைக் கொண்டு ஆய்தல்.

5. நூற்பதிப்புக்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதிகளைத் தவறாமல் குறிப்பிடுதல் முதலான பண்புகளைக் காணமுடிகிறது.

### 6.1.2. சி.வை. தாமோதரம்பிள்ளை

மூலப்பாடத் திறனாய்வின் சிரமத்தைச் சி.வை. தாமோதரம்பிள்ளையின் எழுத்துக்களில் இருந்தும் அறிந்து கொள்ள முடிகிறது. 1887இல் சங்க இலக்கியத்தில் ஒன்றான கலித்தொகையை முதன்முதலாக அச்சில் கொண்டு வந்தவர் இவர். கலித்தொகையின் பதிப்புரையில்,

"பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒன்றோடு ஒன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதி வைப்பாரும் இலர். இந்நாள் தவறினால், பின்பு தவம் புரிந்தாலும் ஒருதரம் அழிந்த தமிழ் நூற்களை மீட்டல் அரிது. காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடி எடுப்பினும் கம்பையும் நாராசமும் தான் மிஞ்சும்" [8]

என்று கூறும் கூற்றுத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் தமிழ் நூற்களை அச்சில் கொண்டுவருவதில் காட்டிய ஆர்வத்தை வெளிப்படுத்துகிறது. மேலும்,

"ஏடு எடுக்கும்போது ஓரஞ்சொரிகிறது. கட்டு அவிழ்க்கும் போது இதழ் முறிகிறது. ஏட்டைப் புரட்டும்போது துண்டு துண்டாய் பறக்கிறது. இனி, எழுத்துக்களோ என்றால், வாலும் தலையும் இன்றி, நாலு புறமும் பாணக் கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கின்றது" [9]

என்ற சி.வை. தாமோதரம் பிள்ளையின் கூற்று, ஒரு நூலைப் பதிக்க எத்தனை சுவடிகளைத் தேட வேண்டிய நிலை இருந்தது என்பதை எடுத்துக்காட்டுவதாக அமைகின்றது.

மூலப்பாட ஆய்வாளன் சிரமத்தைத் தாங்கும் மனப்பக்குவம் உடையவனாக இருப்பதோடு, போதுமான புலமைத்தேவையும் நிரம்பியவனாக இருக்க வேண்டும் என்கிறார் சி.வை. தாமோதரம் பிள்ளை. இதனை,

"இலக்கணக் கொத்துடையார் நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியரென இன்னும் ஒன்று கூட்டி, இவர் தொழில் இம்மூவர் தொழிலும் பார்க்க மிகக் கடியதென்றும் அவர் அறிவு முழுவதும் இவர்க்கு வேண்டியதென்றும் வற்புறுத்திச் சொல்கிறேன்"[10] என்ற கூற்றுப் புலப்படுத்துகிறது.

மூலப்பாட ஆய்வின்போது, ஒரு தொடரின் சரியான வடிவத்தைக் கண்டறிய அதற்கான பொருளை அறிதல் அவசியமாகிறது. அதற்காகவும் அலைச்சல் கூடுகிறது. இதனைச் சி.வை. தாமோதரம் பிள்ளையின் தொல்காப்பியப் பதிப்புரையில்,

"விடியல் வெங்கதிர காயும் வெயமல கறை' என்னும் வாக்கியத்தையும் ஒரு பரிபாடற் செய்யுளையும் சரியாய்ப் பார்த்துணர்தற்கு எத்தனை பெயரிடங்கொண்டு திரிந்தேன்! எத்தனை வித்துவான்களுக்குக் கடிதம் எழுதிக் கை சலித்தேன்!" [11]

எனக் கூறுவதிலிருந்து அறிய முடிகிறது. எனவே, மூலப்பாட ஆய்வாளனுக்கு உரிய தேடுதல் வேட்கையோடு சி.வை. தாமோதரம்பிள்ளை செயற்பட்டது தெளிவாகிறது.

சி.வை. தாமோதரம்பிள்ளையின் கலித்தொகைப் பதிப்புப் பற்றிக் குறிப்பிடும் அ. சிதம்பரநாதனார் கூற்று இங்குச் சுட்டத்தக்கதாகும்.

"கலித்தொகையைப் பதிப்பித்த சி.வை. தாமோதரம்பிள்ளை சில மாறுதல்களைச் செய்தார். கலிப்பாடல்களின் கொளுச் சொல், ஏடுகளில் பாட்டிற்குமுன் இருந்தது. அதை அவர் பாட்டிற்குக் கீழே அமைத்தார். பாட்டு முழுவதும் ஒருங்கு தொடர்ந்து அமையாமல் ஏதேனும் ஒரு முடிவுரையில் பாட்டின் ஒரு பகுதியும் உரையுமாக இருந்தது. இடையிடையே அற்று அற்று உரைகளின் நடுவே இருந்த பாட்டைத் திரட்டி முழு வடிவில் தந்தார். பாட்டு உரை விளக்கம் என்ற முறை மாறி, தொடக்கத்தில் விளக்கமும், பின் ஏனைய பகுதியும் இருந்ததை ஒழுங்குபடுத்தினார்" [12] என்பர்.

### 6.1.3. அனந்தராமையர்

ஒரு நூலைச் செம்மையாக வடிவமைத்துத் தரவேண்டிய பொறுப்பு மூலப்பாட ஆய்வாளரிடம் வந்து சேருகிறது. பதிப்பாசிரியர்கள் நூலைச் செம்மைப்படுத்தும் போக்குத் தொடர்ந்து நடைபெற்றதைப் பதிப்பு வரலாற்றில் காண முடிகிறது.

"நற்றிணை, குறுந்தொகை ஆகிய இரு தொகை நூல்களின் ஏட்டுப் பிரதிகளில் பாடலுக்குத் திணை குறிப்பிடப்படவில்லை. அவற்றை முதன்முதலில் பதிப்பித்த பின்னத்தூர் அ.நாராயணசாமி அய்யரும், திருக்கண்ணபுரத்துச் சௌரிப்பெருமாள் அரங்கனாரும் பாடல்களுக்கு ஏற்றவாறு தம் ஆராய்ச்சிக்கு உடன்பாடான முறையில் திணை வகுத்தனர்" [13]

என்ற கருத்தும் இங்குச் சுட்டத்தக்கதாகும்.

ஏடுகளில் இருந்து பெயர்த்து அச்சிட்ட அனைவரும் மூலப்பாட ஆய்வில் கவனமுடன் செயல்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. அனந்தராமையர், கலித்தொகையை (பாலைக்கலி, குறிஞ்சிக்கலி) நச்சினார்க்கினியர் உரையுடன் பதிப்பித்த பதிப்பின் முகவுரையில் அப்பதிப்பின் விசேடமாகக் கூறுவதாவது,

"1. பல ஏட்டுச் சுவடிகளோடு ஒப்பிட்டதனாலும் வேறுநூல்களை ஆராய்ச்சி

செய்ததனாலும், ஐயமுற்றவிடத்து அறிவால் நெடிது சூழ்ந்து துணிந்ததனாலும் மூலமும் உரையும் பல திருத்தமடைந்திருத்தல்.

2. உரையாசிரியர், பாடல்களைப் பகுத்துக்கொண்டு உரையெழுதியிருக்கும் இடங்களில் இவ்வுரைகளுக்குமுன் அவற்றுக்கு மூலமான பாடற்பகுதிகளை மீட்டும் பதிப்பித்திருத்தல்.

3. பிரதி பேதங்களுள் சிறந்தவற்றைப் பாடமாகக் கொண்டு மற்றவற்றையும், பலவும் சிறந்தனவென்று தோற்றின் ஒன்றைப் பாடமாகக் கொண்டு மற்றவற்றையும் பிரதி பேதமென்று பக்கத்தினிறுதியிற் குறித்துக் காட்டியிருத்தல்.

4. இப்பாட்டு, அல்லது இப்பகுதி, இன்ன நூலில் இன்ன பகுதியில் இன்னாருரையில் இன்ன செய்திக்கு மேற்கோளென்பதையும், அங்கே குறிப்பு வேறுபட்டிருந்தால் அவ்விவரத்தையும், பிறர் கருத்தை மறுப்பதாகத் தோன்றின் அதனையும், முன்பின் முரணுவதாகத் தோன்றின் அதனையும் ஆங்காங்கு எண்களிட்டுக் குறித்திருத்தல்" [14] என்றவாறு பட்டியலிடுகிறார்.

1887-இல் சி.வை. தாமோதரம்பிள்ளை கலித்தொகையைப் பதிப்பித்தார். அதன்பின் முப்பத்தெட்டு ஆண்டுகள் கழித்து 1925-இல் கலித்தொகையின் முதலிருபாகத்தை (பாலைக்கலி, குறிஞ்சிக்கலி) அச்சில் கொண்டுவரும் முயற்சியில் அனந்தராமையர் ஈடுபடுகிறார். கலித்தொகை பதிப்பின் முகவுரையில் அனந்தராமையர்,

"நான், மேற்கூறப்பட்ட ஸ்ரீமான் சி.வை. தாமோதரம்பிள்ளையவர்கள் பதிப்பித்த கலித்தொகையை ஊன்றிப் படிக்குங்காலத்தில், பலவிடத்து மூலமும் உரையும் செய்திகளும் பொருந்தாமை கண்டு, பல்வேறு வழிகளில் மிக முயன்று அவற்றின் உண்மைகளை யறிந்து அமைத்துக்கொண்டேன். அவற்றுட் சிற்சில, பிரஹ்மஸ்ரீ மஹா மஹோபாத்தியாயர் உ.வே. சாமிநாதையரவர்களுடன் நான் வேறு நூலாராய்ச்சி செய்யுங் காலத்தில், அவர்களிடம் சொல்லும்படி நேர்ந்தன. அவற்றைக் கேட்டபொழுது, அவர்கள், 'இவ்வரிய விஷயங்கள் விளங்கும்படி

குறிப்புக்களெழுதி நீங்கள் இந்நூலைப் பதிப்பிக்க வேண்டும்' என்று சொன்னார்கள்"[15]

என்று எழுதுவதன் மூலம், மூலப்பாடத்தைச் செம்மையாகக் கொண்டுவரவேண்டும் என்ற சிந்தனையில் தொடர்ந்து செயல்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

### 6.1.4. சைவ சித்தாந்த மகாசமாஜப் பதிப்பு

சங்க இலக்கியத்தை அச்சில் கொண்டுவரும் பணி தொடர்ந்து பல அறிஞர்களால் செய்யப்பட்டது. இவ்வகையில் சங்க இலக்கிய மூலத்தை, முழுமையும் ஒரே தொகுப்பாக 1940-இல் சைவ சித்தாந்த மகா சமாஜம் வெளியிட்டது. அதுவரையில் ஒவ்வொரு நூலும் தனித்தனியே ஏட்டில் இருந்த அமைப்பிலேயே வெளியிடப்பட்டது. இந்நூல் அம் முறையிலிருந்து மாறிப் புலவர் அடிப்படையில் பாடல்களை வரிசைப்படுத்தி வெளியிட்டது. ஒரு புலவர் பாடிய பாடல்களையெல்லாம் ஒரு சேரப் படிக்கக் கூடிய வசதி இந்நூல் மூலம் கிடைத்தது. இப்பதிப்பும் மூலப்பாடத்தைச் செவ்வையாகக் கொண்டுவருவதில் அக்கறை காட்டியது. இந்நூலில் மூலப்பாடத்தைத் தேர்வுசெய்ய கையாளப்பட்ட வழிகளாகக் கூறப்படுவதாவது,

> "இப்பதிப்பை அச்சிடத் தொடங்குமுன், பிரதிகளை ஒப்பிட்டு நோக்கி உண்மைப் பாடத்தைத் தேர்ந்தெடுப்பதற்காகக் கையாளப்பட்ட முறைகள் மூவகைப்படும்:- (1) உரையின்றி நூல்களின் மூலமட்டுங் கிடைக்குமிடத்து, பிரதிகளிலுள்ள மூலத்தால் மட்டும் திருத்தம் செய்தல் (2) உரைகளுமுள்ள விடத்து அவைகளின் துணைகொண்டு பிரதிகளிலுள்ள மூலத்தை நோக்கிப் பொருத்தமுள்ள பாடங்கொள்ளுதல் (3) தொல்காப்பிய உரை முதலியவற்றில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டவிடத்து, அவ்வுரையிற் காணும் பாடத்தோடு ஒப்புநோக்கித் தகுதியான பாடங்கொள்ளுதல்" [16] என்பனவாகும்.

மேன்மேலும் ஏடுகளைத் தேடி மூலப்பாடத்தைச் செம்மை படுத்த வேண்டும் என்ற எண்ணம் இப்பதிப்பில் நிலவியதைப்

"பிரதிகளின் உதவியின்றிக் கேவலம் ஊகத்தையே கடைப்பிடித்துப் பாடங்களை மாற்றிவிடுதல் அடாத காரியம். இப்பதிப்பில் ஒரு பாடமேனும் ஊகத்தால் மாற்றப்படவில்லை. விளங்காத பாடங்கள் திருந்துதற்குரிய வழி ஒன்றேயுள்ளது. அது பெருமுயற்சிகள் செய்து மேன்மேலும் ஏட்டுப் பிரதிகளைத் தேடிச் சேகரித்து அவற்றின் துணைகொண்டு ஆராய்ந்து உண்மை காணுவதே" [7] என்ற கூற்று உணர்த்துகிறது.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தினர் சங்க இலக்கிய மூலத்தைப் புலவர் அடிப்படையில் தொகுத்து வெளியிட்டதை அடுத்து, இப்பணி மேலும் தொடர்ந்தது. 1957-இல் எஸ். இராஜம் குழுவினர் சங்க இலக்கியம் முழுமையையும் ஒவ்வொரு நூலாக மூலத்தை மட்டும் மலிவுப் பதிப்பில் வெளியிட்டனர். இவ்வாறு தொடர்ந்து வெளிவந்த சங்க இலக்கியத்தைத் திணை அடிப்படையில் தொகுக்கும் முயற்சியை இல. குளோறியா சுந்தரமதி அறிமுகப்படுத்தினார். ஆனால் இப்போக்கு வளரவில்லை. இவர் சங்க இலக்கிய மருதப்பாடல்களை 1973-இல் தொகுத்து வெளியிட்டார். திணை அடிப்படையில் தொகுப்புக்கள் வெளிவந்தால் திணை, துறை தொடர்பான ஆய்வுகள் கூர்மையடைவதற்கு வாய்ப்பு இருக்கிறது. இவ்வாறு சங்க இலக்கியப் பதிப்பில் மூலப்பாடத்திறனாய்வு தொழிற்பட்டது எனலாம். தமிழில் மூலப்பாடத் திறனாய்வைத் தனியொரு துறையாக வளர்த்தெடுப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது.

### 6.2. உரைமரபுத் திறனாய்வு

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் பணிகளில் ஒன்றாகப் பழந்தமிழ் நூல்களுக்கு எளிய உரைகள் - விளக்கங்கள் எழுதும் போக்கு இருந்தது. தங்கள் இயக்கத்தை வளர்த்தெடுக்கப் பெரிதும் உதவிபுரிந்த பழந்தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்களுக்கு உரையெழுதி மக்களிடையே பரவச் செய்தல் அவர்களது தேவையாக இருந்தது. இது பற்றிக் குறிப்பிடும் க. பஞ்சாங்கம்,

"தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்திற்குப் பல்லாற்றானும் கருத்துக் கருவியாக விளங்கிய பழைய இலக்கியங்களுக்கு எளிமையான உரைகள் - விளக்கங்கள் - தேவைப்பட்டன. இவ்வியக்கத்தினால் தமிழ்ப் படிப்போர் தொகை பெருகியது; தமிழ்ப் பாடப்பகுதியாக விளங்கியது; தமிழ்க் கல்லூரிகள் தோன்றின; தமிழில்

என்ன இருக்கிறது என்ற கருத்து மாறியது; தமிழ் பெருமையாக உணரப்பட்டது" [18] என்பார்.

சங்க இலக்கியத்தின் சிறு சிறு பகுதிகளுக்கும் கூட எளிய உரைகள், விளக்கங்கள் எழுதி, அவற்றை மலிவுப்பதிப்புக்களாக வெளியிட்டு மக்களிடையே பரவச் செய்வதைத் தங்கள் கடமையாகக் கொண்டனர் மறுமலர்ச்சி இயக்கத்தினர். இந்த உரை எழுதும் போக்கு இரண்டு நிலைகளில் தொழிற்பட்டது. படித்து இலக்கியம் அறியாத சாதாரண பொதுமக்களைக் குறி வைத்து எழுதுதல் ஒன்று. மற்றொன்று கல்வித் துறையில் இலக்கியத்தை அறிமுகப்படுத்துவதற்கும், இலக்கிய ஆய்வுகளை வளர்த்தெடுப்பதற்கும் என எழுதுதல் என்பதாகும்.

### 6.2.1 உ.வே. சாமிநாத ஐயர்

அச்சில் சங்க இலக்கியத்தை வெளியிட்ட பதிப்பாளர்கள், சங்க இலக்கியத்தை இடைக்கால உரையாசிரியர்களின் உரையுடனேயே வெளியிட்டனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இந்த உரைகள் கடினமாக இருந்த காரணத்தாலேயே புதிய உரைகள் தோற்றம் பெற்றன எனலாம். ஆரம்ப நிலையில், குறிப்பாக உ.வே.சா. தாம் பதிப்பித்த நூல்களில் எழுதிய முகவுரைகள், நூலில் அமையும் விசேடக் குறிப்புகள், பாடினோர் முதலியோர் வரலாறுகள், நூலாராய்ச்சி, குறிப்புரை என எழுதியவைகள் வாசகனை நூலுக்குள் ஆற்றுப்படுத்தும் நிலையில் அமைந்தன. அத்துடன் மேலாய்வுக்கான சிந்தனைகளைத் தூண்டும் விதத்திலும் அவை அமைந்தன.

உ.வே.சா. வின் நூல் முகவுரைகள் ஆய்வுச் சிந்தனைகளை உள்ளடக்கியிருந்தன என்பதற்கான சான்றுகள் சில இங்கே தரப்படுகின்றன.

1. சாமிநாதையர் தம்முடைய குறுந்தொகைப் பதிப்புரையில்,

"பல புலவர்கள் தனித்தனியே இயற்றிய அகப்பொருள் செய்யுள்களைத் தொகுத்து அவற்றை அடியளவாய் வகைப்படுத்தியபின் அவற்றைத் தொகுத்தவர்கள் ஒவ்வொன்றிலும் நானூறு பாக்கள் இருக்கும்படி தற்காலத்துப் புலவர்கள் இயற்றியவற்றையும் சேர்த்து அமைத்தார்கள் என்று கருத இடம் உண்டாகிறது" [19]

என்று எழுதி நூல் தொகுப்புப் பற்றிய சிந்தனையைத் தூண்டிக் கேள்விக் குள்ளாக்குவதைக் காணமுடிகிறது.

2. மேலும் குறுந்தொகை முகவுரையில் உ.வே.சா.,

"இவ்வாறு குறுந்தொகையிலுள்ள சொற்றொடர் காரணமாகப் பெயர் பெற்ற புலவர்கள் அப்பெயராலேயே பிற நூல்களில் வழங்கப் பெறுவது போல அந்நூல்களிலுள்ள செய்யுட் பகுதி காரணமாகப் பெயர் பெற்றாரது பெயர் ஒன்றேனும் குறுந்தொகையில் வரவில்லை. இதனாலும் முதலிற் குறுந்தொகை தொகுக்கப்பட்ட தென்பது தெளிவாகும்" [20]

எனத் தொகுப்பு வரிசை பற்றிய சிந்தனையைத் தூண்டுவதைக் காணமுடிகிறது.

3. புறநானூற்று முகவுரையில் உ.வே.சா.,

"இந்நூற்கு இலக்கணம் அகத்தியமும் தொல்காப்பியமுமே யென்பதும் இதில் ஒவ்வொரு பாட்டின்பின்னும் எழுதப்பட்டுள்ள திணையும் துறையும் அவ்வப்பாட்டிற்கு ஏற்றனவல்லவென்பதும் நச்சினார்க்கினியர் கருத்து; அவர்கருத்து அன்னதாதல், 'தத்தம் புதுநூல்வழிகளால் புறநானூற்றிற்குத் துறை கூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப்பொருளாகத் துறை கூறவேண்டுமென்றறிக' என்று தொல்காப்பியப் புறத்திணையியலில் "கொடுப்போரேத்தி" என்னும் சூத்திரவுரையில் அவரெழுதியிருத்தலானும் மேற்கூறிய புறத்திணையியலுரையில் இந்நூற்பாட்டுக்களுட் சிலவற்றை வேறு திணை துறைகளுக்கு உதாரணமாகக் காட்டி அவர் மறுத்தலாலும் துணியப்படும்" [21]

என எழுதித் திணை துறை பற்றிய ஆய்வுச் செழுமைக்கு வித்திடுவதைக் காணலாம்.

4. ஐங்குறுநூற்று முகவுரையில் உ.வே.சா.,

"இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் முறையே மலைநாட்டுப் புலவரும் மலைநாட்டரசருமாதலால், ஆதனவினியென்னுஞ் சேரனைத் தலைவனாகப் பெற்ற முதற்பத்தையுடைய மருதம் முதலிலும்,

தொண்டிப்பத்தையுடைய நெய்தல் மருதத்தின் பின்னும், மலைநாட்டரசர்களைப் பாடி, மலைநாட்டிற் பெரும்பாலும் வதிந்து, மலைவளம் பாடுதலிற் புகழ்பெற்ற கபிலர் பாடிய குறிஞ்சி நெய்தலின் பின்னும் கோக்கப்பெற்றனவென்று இம்மூன்றற்கும் ஒருவாறு முறைகூறலாமாயினும், பாலையும் முல்லையும் இவற்றின்பின்னர் முறையே அமைக்கப் பெற்றதற்குக் காரணம் ஒருவாற்றானும் விளங்கவில்லை" [22]

என்று எழுதித் தொகுப்புக்குப் பின்னணியாக நிலவிய அரசியலை வெளிக்கொணரும் சிந்தனையைத் தந்து செல்வதைக் காணமுடிகிறது. இவ்வாறு பல அரிய செய்திகளை உள்ளடக்கியதாக இவருடைய ஆராய்ச்சி முகவுரைகள் அமைகின்றன.

உ.வே.சா. சங்க இலக்கியத்தில் குறுந்தொகைக்கு உரை எழுதி வெளியிட்டுள்ளார். 1937இல் வெளியான இவ்வுரை இடைக்கால உரையாசிரியர் உரைபோன்றே காணப்படுகிறது. இவ்வுரையை மதிப்பிடும் குளோறியா சுந்தரமதி,

"பழைய உரையாசிரியர் பாங்கினைப் பெரிதும் ஒட்டி அமையும் இவ்வுரை தெளிவும் விளக்கமும் ஒருங்கே அமைந்தது; உ.வே.சா அவர்களின் இலக்கண இலக்கியப் பயிற்சியை நன்கு புலப்படுத்தி நிற்பது; இலக்கியப் புலமையின் இழையாகப் பொருந்தும் அவரது ரசனை உள்ளத்தை நன்கு உணர்த்தும் சிறப்புடையது; பாடல்களை அவர் அறிமுகம் செய்யும் பாங்கு முதல் ஒப்புமைப் பகுதிகளை எடுத்துரைக்கும் பகுதி ஈறாக அமைந்த பல கூறுகளைக் கொண்டமைகின்றது" [23] என்று எழுதுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### 6.2.2 மறைமலையடிகள்

சங்க இலக்கியம் மறு பதிப்புக்களுக்கு உள்ளானபோது அவற்றைப் புதிய உரையுடன் வெளியிடும் நிலையும் வளர்ந்தது. 1903ஆம் ஆண்டிலேயே மறைமலையடிகள் முல்லைப்பாட்டுக்கு உரையெழுதி வெளியிட்டார். புதிய உரை எழுதும் போக்கைத் தொடங்கிவைத்தவர் மறைமலையடிகள் என்றே தெரியவருகிறது. பின் 1906-இல் இவரே பட்டினப்பாலைக்கு ஆராய்ச்சி உரை எழுதி வெளியிட்டார். இவ்விரண்டு நூல்களும் பாடப்பகுதியாக விளங்கியமையால் கிறித்துவக் கல்லூரி

மாணவர்களின் வேண்டுகோட்கிணங்க அவர்கள் செலவிலேயே வெளியிடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும். முல்லைப்பாட்டு உரையில் மறைமலையடிகள்,

> "முல்லைப் பாட்டை அடுத்திருக்கின்ற மதுரைக்காஞ்சியும் நெடுநல் வாடையும் தலையாளங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு விளங்கலால், அவற்றை அடுத்திருக்கின்ற இதுவும் அவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு செய்யப்பட்டிருக்கலாமென்பது கருதப்படும்" [24]

என்று எழுதுவதன் மூலம், முல்லைப்பாட்டின் பாட்டுடைத் தலைவனை அடையாளம் காண முயற்சிக்கிறார் எனலாம். தற்கால மாணவர்களுக்கு எளிதில் விளங்கும் வகையில் இவ்வுரைகளை எழுதிச் செல்வதைக் காணமுடிகிறது.

**6.2.3. பத்துப்பாட்டு உரைகள்**

1929 இல் முல்லைப்பாட்டு வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் உரையுடன் வெளிவந்தது. தொடர்ந்து பிற பத்துப்பாட்டு நூல்களும் இவரது உரைபெற்று வெளிவந்தன. ஐயன் பெருமாள் கோனார் கல்லூரி மாணவர்கட்குப் பாடமாக வைத்த பாடல்களுக்கு உரையும் விளக்கமும் எழுதியுள்ளார். ந.சி. கந்தையா பிள்ளை பத்துப்பாட்டின் எல்லாப் பாடல்களுக்கும் பொழிப்புரை (வசனம்) தந்துள்ளார். பத்துப்பாட்டு முழுவதற்கும் பொ.வே. சோமசுந்தரனார் உரை எழுதியுள்ளார். இவருடைய நூல்கள் கழக வெளியீடுகளாக வந்தன.

தொடர்ந்து பத்துப்பாட்டின் ஒவ்வொரு நூலுக்கும் என உரைகள் விளக்கங்கள் வெளிவந்தன. சைவ சமயப் பெரியோர்கள் திருமுருகாற்றுப் படைக்கு உரைகள் எழுதினர். திருத்தணிகைச் சரவணப் பெருமாள் ஐயரும், ஆறுமுக நாவலரும் எழுதிய பதவுரை பல பதிப்புக்கள் வெளிவந்தன. திருமுருகாற்றுப்படைக்குச் சு. அருள் அம்பலனார், எஸ். வையாபுரிப்பிள்ளை, இரா. இராதாகிருஷ்ணன், எம். ஆறுமுகம் பிள்ளை எனப் பலர் சைவ சமய அடிப்படையில் உரை கண்டனர்.

பொருநராற்றுப்படைக்கு 1907 ஆம் ஆண்டு வா. மகாதேவ முதலியார் உரை எழுதியுள்ளார். அவரைத் தொடர்ந்து கா. ஸ்ரீ. கோபாலாச்சாரியார் விளக்கவுரை

எழுதினார். பெரும்பாணாற்றுப் படைக்கு அருள் அம்பலனாரும், ரா. இராகவையங்காரும் விளக்கவுரை எழுதியுள்ளனர். நெடுநல்வாடைக்குப் 'புனையா ஓவியம்' என்ற பெயரில் செ. வேங்கடராமச் செட்டியார் நுண்பொருள் கண்டுள்ளார். குறிஞ்சிப்பாட்டுக்குச் சுவை நுகர் அடிப்படையில் மார்க்கபந்து சர்மா விளக்கம் கண்டுள்ளார். பட்டினப்பாலைக்கு ரா. இராகவையங்காரும், சாமி. சிதம்பரனாரும் விளக்கம் எழுதியுள்ளனர்.

இவ்வாறு, தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் அரும்பெருந் தொண்டில் பத்துப்பாட்டின் ஒவ்வொரு பாடலும் சிறு சிறு வெளியீடுகளாகவும், உரை விளக்கங்களாகவும், கதைகளாகவும் தமிழகத்தின் பட்டித் தொட்டி எங்கும் பரவியது எனலாம். தமிழ்ப் படித்தவர்களையெல்லாம் சங்க இலக்கியத்தின் பக்கம் திரும்பிப் பார்க்கச் செய்தனர்.

### 6.2.4. எட்டுத்தொகை உரைகள்

எட்டுத்தொகையில் ஒன்றான நற்றிணைக்குப் பழைய உரை இல்லை. இந்நூலை 1914-ல் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் தமது உரையுடன் வெளியிட்டார். நீண்ட இடைவெளிக்குப் பிறகு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை நற்றிணைக்கு உரை எழுதினார். இவை இரண்டும் இடைக்கால உரையாசிரியரின் உரைபோன்றே மூலத்தை விளங்கிக்கொள்ளும் விதத்தில் இருந்தன.

1915 ஆம் ஆண்டு திருமாளிகைச் சௌரிப் பெருமாள் அரங்கன் குறுந்தொகைக்கு முதன் முதலாக உரை எழுதிப் பதிப்பித்தார். பொ.வே. சோமசுந்தரனாரும் குறுந்தொகைக்கு விளக்கவுரை எழுதினார். இராகவையங்கார் குறுந்தொகையில் முதல் 112 பாடல்களுக்கு விளக்கவுரை இயற்றியுள்ளார். இந்நூல் அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடாக வந்தது. கல்வியாளர்கள் தங்கள் அறிவுத்திறத்தை வெளிப்படுத்தும் போக்கில் உரை கண்டனர். மேலும் தாங்கள் எண்ணிய கருத்தை விளக்குவதற்கு ஏற்ப பாடல் அடியைப் பொருள் கொண்டனர். இவ்வாறு கல்வியாளர்களிடையே விவாதங்களை உருவாக்கும் நோக்கிலும் இவ்வுரைகள் விளங்கின.

ரா. இராகவையங்கார் குறுந்தொகை விளக்கத்தில், குறுந்தொகையின் இருபத்தோராம் பாடலில், 'கானங் காரெனக் கூறினும்' என்ற அடிக்கு விளக்கம் கூறுமிடத்து, "ஓதாத கானம் காரெனக் கூறினும் என்ற இச்சிறப்பால் இது பாடியவர் ஓதல் ஆந்தையார் எனப்பட்டாரோ என நினைத்தலுமாம்" [25] என எழுதுகிறார். இவ்வாறு தங்கள் கற்பனைக்கு ஏற்ற விதத்திலும் புதிய செய்திகளை விதைக்கின்றனர்.

இந்த உரைகாரர்களின் உரைகளையெல்லாம் நுணுக்கமாக ஒருங்கு வைத்து ஆய்வுக்கு உட்படுத்தும்போது இன்னும் பல உண்மைகள் வெளிவர வாய்ப்பிருக்கிறது. இப்புதிய உரைகாரர்களின் சமூக அரசியல் பின்னணியில் வைத்து இவர்களின் உரைவேறுபாட்டை ஆராயவும் இடமிருக்கிறது.

தொகை நூல்களில், இடம் பெற்றிருக்கும் பாக்களின் நலங்களை நம் காலத்தவரும் உணர்ந்து மகிழவேண்டும் என்ற அவாவினால் எளிய உரையினை வெளியிடுவதாகக் குறிப்பிடுகிறார் புலவர் கா. கோவிந்தன்.[26] இவர் நற்றிணைக்கு 'நற்றிணை விருந்து' என்ற தலைப்பிலும், குறுந்தொகைக்கு 'குறுந்தொகைக் கோவை' என்ற தலைப்பிலும், கலித்தொகை முழுமைக்கும், பதிற்றுப்பத்தில் முதல் ஐந்து பத்துக்கும், பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டுக்கும் எனத் தொடர்ந்து உரையெழுதி வெளியிட்டு வருகிறார்.

ஐங்குறுநூற்றுக்கு ஒளவை. சு. துரைசாமிப்பிள்ளையும், பொ.வே. சோமசுந்தரனாரும் விளக்கவுரை எழுதியுள்ளனர். பதிற்றுப்பத்துக்கு ஒளவை. சு.துரைசாமிப்பிள்ளை விளக்கவுரையும், ஈழநாட்டுப் புலவர் அருள் அம்பலனார் ஆராய்ச்சியுரையும் எழுதியுள்ளனர். அகநானூற்றுக்கு ந.மு. வேங்கடசாமி நாட்டாரும், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளையும் உரை எழுதியுள்ளனர். இவர்களின்றிப் புலியூர் கேசிகன் முதலான பலர் தொடர்ந்தும், அண்மைக்காலங்களிலும் சங்க இலக்கியங்களுக்கு உரை எழுதி வருகின்றனர். இப்புது உரைகாரர்களில் ஒளவை.சு. துரைசாமிப்பிள்ளையும், பொ.வே. சோமசுந்தரனாரும் குறிப்பிடத்தக்கவர்களாவர். இவர்களைக் கொண்டு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சங்க இலக்கியங்களுக்கு உரை வெளியிட்டுச் சிறப்பெய்தியது. இந்த இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களின் உரைகளை நுணுக்கமாக ஆய்வதற்கு மிகுதியாக

இடமிருக்கிறது. எனினும் இங்கே காலச் சூழல் இடம் தராததால் அவற்றைப் பொது நிலையில் சுட்டும் போக்கு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வுரையாசிரியர்களின் தன்மையாகக் க. பஞ்சாங்கம் குறித்திருப்பது பொருத்தமாக இருப்பதால் அக்கருத்துக்கள் இங்கே தரப்படுகின்றன.

" 1. இடைக்கால உரைகள் போன்றே இலக்கணக் குறிப்பு, நயவுரை, சொல் விளக்கம் முதலியன கொண்டு விளங்குகின்றன.

2. இடைக்கால உரை போன்றே, பழம்பெரும் நூல்களின் பெருமையைப் பாராட்டுவதையே நோக்கமாகக் கொண்டு விளங்குகின்றன.

3. இடைக்கால உரைகாரர்கள் வட மொழியோடு ஒப்பிட்டு விளக்கினார்கள் என்றால், இக்கால உரைகாரர்கள், வடமொழியோடும் ஆங்கில இலக்கியத்தோடும் ஒப்பிட்டு விளக்கினர்.

4. இக்காலத்து உரைகாரர்கள், உரை எழுதும்போது தம் காலத்திய திறனாய்வுச் சிந்தனைகளையும் பயன்படுத்திக்கொண்டனர்".[27] இவ்வாறு இக்கால உரைகளின் போக்குத் தொழிற்பட்டது எனலாம்.

## 6.3. கல்வியாளர் திறனாய்வு

சங்க இலக்கியங்களின் அச்சேற்றத்துடனேயே, தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் அதனை மக்கள் மத்தியில் பரவச்செய்யும் வேலையிலும் மும்முரமாக ஈடுபட்டனர். இது ஒரு புறம் நடக்க, பல்கலைக்கழகம், கல்லூரிகள், கல்விக் கூடங்களில் இலக்கியக் கல்வி பாடமாக வைக்கப்பட்டது. இதன் காரணமாகக் கல்வியாளர்கள் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபடத் தலைப்பட்டனர். இவ்வாறு, சங்க இலக்கியமானது கல்வியாளர்களிடையே அறிமுகமாகத் தொடங்கியது. அன்றிலிருந்து இன்று வரை சங்க இலக்கியமானது கல்வியாளர்களால் பல்வேறு கோணங்களில் ஆராயப்பட்டு வருகின்றது. பரந்து விரிந்து கிடக்கும் கல்வியாளர்களின் சங்க இலக்கிய ஆய்வுச் செல்நெறி குறித்துச், சுருக்கமாக விளக்கும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

### 6.3.1 மறைமலையடிகள்

சங்க இலக்கியத்தை ஆய்வுக்குட்படுத்திய கல்வி நெறியாளர்களில் முதன்மையாகக் குறிப்பிடத் தகுந்தவர் மறைமலையடிகள் ஆவார். இவர் முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை (1903), பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை (1906) என முல்லைப்பாட்டுக்கும், பட்டினப்பாலைக்கும் ஆராய்ச்சியுரை எழுதினார். நச்சினார்க்கினியர் உரை புரியவில்லையே என்ற மாணவர்களுக்காக எழுதப்பட்டதால், இவ்வுரை பெரும்பாலும் விளக்கமுறைத் திறனாய்வு அடிப்படையிலேயே செல்கிறது. மலைமலையடிகள் கல்வி நெறியாளராக விளங்கியபோதும், தீவிர சைவ சமயப் பற்றும், தனித்தமிழ்ப் பற்றும், திராவிட இன உணர்வும் கொண்டவராக விளங்கினார். இத்தன்மையை அவருடைய எழுத்துக்களில் வெளிப்படையாகவே காணமுடிகிறது.

### 6.3.2. மு. வரதராசனார்

கல்விநெறியாளர்களில் சங்க இலக்கியத்தைப் பற்றி மிகுதியாக எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவர் மு. வரதராசனார் ஆவார். சங்க இலக்கியம் பற்றிய இவருடைய எழுத்துக்கள் 'எளிமையாக விளக்குதல்' என்ற அடிப்படையிலேயே அமைகின்றன. கல்வி நிறுவனம் சார்ந்து, மாணவர்களோடு தொடர்ந்து இயங்கியதால் இவருடைய எழுத்துக்களில் எளிமை இயல்பாக அமைந்துவிடுகின்றது. திராவிட இயக்கச் சிந்தனையுடையவரான இவர், வெகுசன இலக்கியமாகச் சங்க இலக்கியம் மாறவேண்டும் என்ற எண்ணம் உடையவராக விளங்கினார். சங்க இலக்கியக் கருத்துக்கள் அனைத்து மக்களுக்கும் சென்றடைய வேண்டும் என்ற துடிப்புடன், இலக்கியக் கருத்துக்களை எளிமைப்படுத்தி எழுதினார். சான்றாக,

> "மணலில் வீடு கட்டி விளையாடும்போது குழந்தைகளின் உள்ளத்தில் எவ்வாறு தூய்மையும் உண்மையும் அன்பும் குடிகொண்டிருக்கின்றனவோ, அவ்வாறே காதலரின் உள்ளத்திலும் அந்த உயர்ந்த பண்புகள் விளங்குகின்றன. சங்கப்பாட்டுக்களில் பல இந்த அகப்பொருள் பற்றிய உணர்வு ததும்பியவை" [28]

என்று மு.வ., செய்திகளை எளிமையாக விளக்கிச் செல்வதைக் காணமுடிகிறது.

கல்வியாளர்கள் தாங்கள் கற்ற ஆங்கில நூற் கருத்துக்களை மேற்கோள் காட்டி எழுதுவதை மரபாகக் கொண்டனர். இதனை மு.வ. எழுத்துக்களிலும் காணமுடிகிறது. தமிழ் முல்லைப் பாடல்களைக் குறித்து விளக்க வரும்போது, வாஷிங்டன் இர்விங் என்பவர் ஆங்கில முல்லைப்பாடல்கள் பற்றிப் புகழ்ந்த புகழ்ச்சியை எடுத்துக்காட்டி ஒப்பிடுகிறார். இதனை,

"வாஷிங்டன் இர்விங் என்பவர் புகழும்போது, "மற்ற நாடுகளின் முல்லைப் பாடல்களைப் பாடியவர்கள் இயற்கையை என்றோ ஒருமுறை சென்று கண்டு பொதுவான எழிலை மட்டும் அறிந்தவர்களாகவே தோன்றுகின்றனர். ஆனால் ஆங்கிலப் புலவர்களோ இயற்கையோடு கலந்து வாழ்ந்து திளைத்தவர்கள். கண்ணுக்கெட்டாத இயற்கையின் நுட்பங்களையும் நெருங்கிக் கண்டு பழகியவர்கள். இயற்கையின் நுண்ணிய திருவிளையாடல்களையும் துருவிக் கண்டறிந்தவர்கள்" என்கிறார். இக்கருத்து தமிழில் உள்ள முல்லைப் பாடல்களுக்கும் பொருந்தும்; மிக மிகப் பொருந்தும்" [29]

என்று எழுதுவதன் மூலம் அறியலாம். கல்வியாளர்கள் தாங்கள் கற்ற கல்வியை இடம் நோக்கிப் பயன்படுத்தும் போக்கை இங்குக் காணமுடிகிறது.

கல்வி நெறியாளர்கள் இயங்கும் தளம், விவாதங்களை உருவாக்கும் இடம் என்பதால், சிக்கலான பொருளை எடுத்துக்கொண்டு அதனை மேன்மேலும் ஆய்வுக்கு உட்படுத்த வாய்ப்பு அதிகமாகிறது. இதனால் ஆய்வுச் சிந்தனைகளை அவர்கள் வெளியிடமுடிகிறது. இத்தகைய ஆய்வுக் கருத்துக்களை மு.வ. விடத்தும் காண முடிகிறது. சான்றாக, 'கொங்கு தேர் வாழ்க்கை' எனத் தொடங்கும் குறுந்தொகைப் பாடலை ஆய்வுக்கு உட்படுத்தும் மு.வ., அப்பாடல்மேல் ஏற்றப்பட்ட புராணத் தன்மை பிற்காலத்தது என மதிப்பிடுகிறார்.

"எல்லார்க்கும் பொதுவான - காதலர் பெயர் முதலியன குறிப்பிடப்படாத - காதல் வாழ்வு பற்றிய பாட்டுக்களே அகப்பொருள் தொகை நூல்களில் இடம்பெறுவன. பாண்டிமாதேவியின் கூந்தல் மணம் குறித்த ஆராய்ச்சி முடிவு பற்றிய பாட்டாய்ப் பழங்காலத்தில் விளங்கியிருக்குமேயானால், குறுந்தொகை

தொகுத்த அறிஞர் இதனைத் தனிச் சிறப்புடையதாக விட்டிருப்பாரே அன்றி மற்ற அகப்பாட்டுக்களோடு ஒன்றாக சேர்திருக்கமாட்டார். பாட்டினுள் பாண்டிமாதேவியின் பெயரோ, பாண்டிய மரபைக் குறித்த தொடரோ இல்லாமற் போயினும் பொற்கிழியைப் பற்றிய வரலாறு வழக்கில் இருந்திருப்பினும் அது ஒன்றே அகப்பாட்டுக்களோடு சேர்க்காமல் விடுதற்குரிய காரணமாக அமைந்திருக்கும். தொகுத்த புலவரின் காலத்தில் இக்கதை இல்லாதிருந்தமையால்தான் இப்பாட்டுப் புறநானூற்றில் இடம் பெறாமல் குறுந்தொகையுள் இடம்பெற்றது" [30]

இவ்வாறு எழுதுவதன் மூலம், நீண்ட நெடும் விவாதங்களை உருவாக்கும் கல்வியாளர்களின் குணம் தெரியவருகிறது.

### 6.3.3. ந.மு. வேங்கடசாமி நாட்டார்

பழந்தமிழ் நூல்களுக்கு உரை எழுதுவதில் சிறந்து விளங்கிய ந.மு. வேங்கடசாமி நாட்டார், சங்க இலக்கிய ஆய்வுகளிலும் ஈடுபட்டவராவார். நக்கீரர் (1919), கபிலர் (1921), சோழர் சரித்திரம் (1928), ஆகிய இவரது நூல்கள் விளக்கமுறைத் திறனாய்வு அடிப்படையில் அமைந்துள்ளன. தமிழ்த் திறனாய்வில் ஆரம்பநிலையில் ஒரு புலவருடைய பாடல்கள், அவர் பற்றிக் கிடைக்கும் செய்திகளையெல்லாம் தொகுத்து ஒருங்கு வைத்து ஆராயும் போக்குத் தோன்றியதற்கு இந்நூல்கள் சான்றுகள் ஆகும். திராவிட இன உணர்வுடையவராக விளங்கிய நாட்டார் பழந்தமிழ்ச் சோழமன்னர்களின் சிறப்பியல்புகளைச் 'சோழர் சரித்திரம்' என்ற நூலில் எடுத்தியம்புகிறார். மனு, முசுகுந்தன் முதலாகக் கோச்செங்கட்சோழர் ஈறாக பதின்மூன்று சோழ மன்னர்கள் வரலாற்றையும் பழந்தமிழ் நாட்டின் சிறப்பையும் இந்நூலில் விளக்கிச் செல்கிறார்.

### 6.3.4. ந.சி. கந்தையா பிள்ளை

ந.சி. கந்தையா பிள்ளை, தமிழகம் (1934), வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழந்தமிழர் (1943) தமிழ் இந்தியா (1945), முச்சங்கம் (1947), தமிழர் சரித்திரம் (1950) முதலான நூல்களில் தமிழர்களின் தொன்மைச் சிறப்பைப் பொற்கால வாழ்க்கையை

மதிப்பிடுகிறார். இவரது எழுத்துக்களில் திராவிட இன உணர்வு மேலோங்கி இயங்குவதைக் காணமுடிகிறது.

### 6.3.5. ரா. இராகவையங்கார்

ரா. இராகவையங்கார், வஞ்சி மாநகர் (1917), நல்லிசைப் புலமை மெல்லியலார் (1933), பாரிகாதை (1937), தித்தன் (1949), கோசர் (1951), பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சி (1958) முதலான நூல்களை எழுதியுள்ளார். வஞ்சி மாநகர் என்ற நூலில் சேரர் தலைநகரை ஆராய்கிறார். கொங்குநாட்டிலுள்ள கொல்லிமலைப் பக்கத்து ஆண்பொருநைக் கரையிலுள்ள கருவூரே 'வருபுனனீர்த் தண்பொருநை சூழ்தரும்' வஞ்சி மாநகர் என அறுதியிடுகிறார். [31] 'பெருபாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும்' என்ற நூலில் தொண்டைமான் இளந்திரையனைத் துரோணன் மரபென்று எழுதிச்செல்கிறார். துரோணம் என்ற பதமே தொண்டை என மருவிற்று என்பது அவரது கூற்றாகும். [32] தித்தன் என்ற நூலில், தித்தனை சோழர் குலத்தவனாகக் குறிப்பிடும் கொள்கையை மறுத்து அவனை வேளிர் குலத்தவனாக நிறுவுகிறார். [33]

கோசர் என்ற நூலில், கோசர்கள் பற்றி ஆராயும்போது, கோசர்கள் தொன்று தொட்டு வந்த தமிழ்க்குடிகள் அல்லர் என்றும், வத்ஸம் என்னும் வட சொல்லுக்கு இளைமை எனப் பொருளுண்டாகலின் வத்ஸ கோசரே இளங்கோசர் என வழங்கியிருத்தல் கூடும் என்றும், கோசம் என்ற ஓர் அரிய சூள் முறையைக் கையாண்டதனால் அவர்கள் கோசர் எனப்பட்டனர் என்றும் கூறிகிறார். மேலும், கோசர் காஷ்மீர நாட்டிலிருந்து வேளிரை அடுத்துத் தமிழ்நாடு போந்தவர் என்றும், மோகூர் மன்னர்க்கு உற்ற துணையாக மோரியரை எதிர்த்த பெருவீரர் என்றும், அகுதை, திதியன், குறும்பியன், ஆதனெழினி, தழும்பன் முதலிய வீரர்கள் கோசர் மரபினரென்றும், கோசர் புத்தூரே கோயமுத்தூர் எனத் திரிந்தது என்றும் எழுதுகிறார். [34] குடிவழி ஆராய்ச்சியில் ஆர்வம் காட்டும் இவரது எழுத்துக்களில் வட மொழியுடன் தொடர்புபடுத்திப் பேசும் போக்கு மேலோங்கிக் காணப்படுகிறது.

### 6.3.6. மு. ராகவையங்கார்

மு. ராகவையங்கார், வேளிர் வரலாறு (1913), சேரன் செங்குட்டுவன் (1915), சேர வேந்தர் தாய வழக்கு (1930) முதலான நூல்களை எழுதியுள்ளார். இவர் சேரன்

செங்குட்டுவன் என்ற நூலில், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டே செங்குட்டுவனும், சங்கத்துச் சான்றோரும் வாழ்ந்த காலம் என மதிப்பிடுகிறார். நா. கனகராஜையர் பாண்டிய மன்னர் (1930), தமிழ்ப்புலவர் வரலாறு (1947) முதலான நூல்களையும், வே. வேங்கடராஜீலு ரெட்டியார் பரணர் (1933), கபிலர் (1936) முதலான நூல்களையும் எழுதியுள்ளனர். இந்நிலை, சங்க இலக்கியம் குறிப்பிடுகின்ற ஒவ்வொரு மன்னனையும், புலவரையும் தனித்தனியே விரிவாக ஆராயும் போக்குச் சங்க இலக்கிய ஆய்வு நெறியில் தோன்றி வளர்ந்தமையைக் காட்டுகிறது.

### 6.3.7. எஸ். வையாபுரிப்பிள்ளை

தமிழ் ஆய்வுகளில், ஆராய்ச்சி நெறிமுறையின்படி நின்று, ஆய்வு செய்யும் ஆய்வாளராக அறிமுகப்படுத்திக் கொண்டவர் எஸ். வையாபுரிப்பிள்ளை ஆவார். இவர் இலக்கியத்தின் காலம் குறித்த ஆய்வுகளில் பெரிதும் கவனம் செலுத்தியவராகக் காணப்படுகிறார். இவர் சங்க காலத்தை முற்சங்க காலம், பிற்சங்க காலம் என இரண்டாகப் பிரிக்கிறார். இவருடைய பாகுபாடு வருமாறு.

"1. முற்சங்க காலம் : கி.பி. 100-350 தொகைச் செய்யுட்கள், பத்துப்பாட்டிற் பல. பண்டைத் தமிழ்

2. தொகை செய்காலம் : கி.பி. 400-500 முற்சங்கப் பாடல்களைத் தொகையாகத் தொகுத்தது. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகம், புறம் என்பன.

3. பிற்சங்க காலம் : கி.பி. 600-750 கலித்தொகை, பரிபாடல்" [35]

என்பதாகும். இவர், முற்சங்க காலத்தைக் கி.பி. 100க்கு முன் எடுத்துச் செல்லாமைக்குக் காரணமாகக் கூறுவதாவது. கி.மு. 5ஆம் நூற்றாண்டில் நூல்களை எழுத்தால் எழுதி வைக்கும் கருத்து இந்தியா முழுமையிலும் உண்டாகவில்லைபோலும் என்ற விண்டர் நீட்ஸின் கருத்தாகும். அதே போல், பிற்கால நூல்களாகக் குறிப்பதற்குக் காரணம், இப்பிற்சங்க காலத்தில் வழங்கிய தமிழ் பிற்கால வழக்குகள் பல உடையது என்பதாகும். [36]

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய சங்க நூல்களை எஸ். வையாபுரிப்பிள்ளை காலமுறை அடிப்படையில் வரிசைப்படுத்தித் தருவது குறிப்பிடத் தக்கதாகும். பத்துப்பாட்டினை, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம், மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, சிறுபாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை எனக் கால வரிசைப்படுத்துகிறார். இவற்றுள் சிறுபாணாற்றுப்படை, முதல் எட்டு நூல்களுக்கும் 2 அல்லது 3 தலைமுறைகள் பிற்பட்டுத் தோன்றியிருக்கலாம். முருகாற்றுப்படை இவற்றிற்குப் பல நூற்றாண்டுகள் பிற்பட்டு இயற்றப் பெற்றதாதல் வேண்டும் என்பது அவரது முடிபாகும். [37]

தொகை நூல்களைக், குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு என்ற முறையில் கால வரிசைப்படுத்துகிறார். கலித் தொகையையும், பரிபாடலையும் மிகப் பிற்காலத்ததாகக் குறிப்பிடுகிறார். [38]

### 6.3.8. தி.சு. பாலசுந்தரம் பிள்ளை

தி.சு. பாலசுந்தரம் பிள்ளை (இளவழகனார்), அன்பின் ஐந்திணை வாழ்க்கையை விதந்து போற்றுகிறார். சங்க நூற்கட்டுரைகள் அல்லது பழந்தமிழர் நாகரிகம் (1942), பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை (1945) முதலான நூல்களில் அகத்திணை அடிப்படையில் தமிழர்களின் காதல் வாழ்வை வியந்து போற்றுகிறார். இதே முறையில் ந.சுப்பு ரெட்டியார், காதல் ஓவியங்கள் என்ற நூலில் தமிழரின் காதல் வாழ்வை சித்திரிக்கிறார். வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் (1962), சங்க நெறி (1989) முதலான நூல்களில் காதல் வாழ்நெறி தமிழரின் தனிப்பெரும்நெறி எனப் போற்றுகிறார்.

### 6.3.9. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை

பேராசிரியர் லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், சங்க காலத் தமிழ்வாழ்வு (1957), எட்டுத்தொகைச் செல்வம் (1973), பத்துப்பாட்டு வளம் (1968) முதலான நூல்களில் பண்டைத் தமிழ் மக்களுடைய அகவாழ்வு, புறவாழ்வுகளின் உயர்ந்த நோக்கங்களை விளக்கிச் செல்கிறார்.

உரையாசிரியராக விளங்கிய ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, சேர மன்னர்

வரலாறு (1957) என்னும் நூலில் சேர மன்னர்களின் வரலாற்றை விரிவாக விளக்குகிறார். இந்நூலில், சங்க இலக்கியங்களின் கீழெல்லை கி.பி. முதல் நூற்றாண்டு என்று முடிவு கட்டுகிறார். மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டுக் காட்சிகள் (1955), தமிழ் இனம் (1956), தமிழ் இலக்கண இலக்கியக் கால ஆராய்ச்சி (1957) தமிழ்மொழி இலக்கிய வரலாறு (1963), சோழர் வரலாறு, தமிழக ஆட்சி ஆகிய நூல்களின் மூலம் சங்க இலக்கியம் குறித்த ஆய்வுக் கருத்துக்களை வெளியிட்டுள்ளார். தமிழ் இலக்கண இலக்கியக் கால ஆராய்ச்சி என்ற நூலில் புறநானூற்றின் காலத்தை ஏறத்தாழ, கி.மு. 1000 முதல் கி.பி. 300 வரைப்பட்டதாகும் என்று வரையறுக்கிறார். [39]

6.3.10. மயிலை. சீனி. வேங்கடசாமி

மயிலை. சீனி. வேங்கடசாமி, அஞ்சிறைத்தும்பி (1958), மறைந்துபோன தமிழ் நூல்கள் (1959), துளு நாட்டு வரலாறு (1966), சேரன் செங்குட்டுவன் (1966), சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள் (1970), சங்க காலத்துப் பிராமி கல்வெட்டெழுத்துக்கள் (1981) என்ற நூல்களில் சங்க இலக்கியம் குறித்து ஆராய்ந்துள்ளார். 'சேரன் செங்குட்டுவன்' என்ற நூலில், "சங்க காலத்தில் சோழ மன்னர்கள் தங்களுக்குள் ஓயாமல் போரிட்டுக் கொண்டிருந்ததாகவும், அதற்கு நேர்மாறாகச் சேர மன்னர்கள் ஒற்றுமையாக இருந்து செயல்பட்டதாகவும் குறிப்பிடுகிறார். [40] செங்குட்டுவன் காலத்தைக் கி.பி. 130-185 வரையிலான காலமாகக் கொண்டு மற்ற சேர மன்னர்களின் காலத்தை அறுதியிடுகிறார்.

6.3.11. கா. கோவிந்தன்

புலவர் கா. கோவிந்தன், திருமாவளவன் (1951), சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை (1953, 54), சங்க கால அரசர் வரிசை (1954), பண்டைத்தமிழர் போர்நெறி (1965), முதலான ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளார். இவர் திராவிட இன உணர்வு அடிப்படையில் பழந்தமிழ்ப் புலவர்களையும், அரசர்களையும், ஆராய்கின்றார். 'பண்டைத் தமிழர் போர்நெறி' என்ற நூலில், பழந்தமிழர் போர்நெறி, நின்று தாங்கிய போர்நெறியே யாகும்; சென்று தாக்கிய போர்நெறி அல்ல என்று எழுதுகிறார். தமிழர்கள் தாமாகப் போரை விரும்பிச் செல்லாத வளமான வாழ்க்கையையே வாழ்ந்தனர் என்று கூறுகிறார். அதற்குத் தகுந்த முறையில் தொல்காப்பியம் புறத்திணையியலுக்குச் சங்க

இலக்கியத்தை எடுத்துக்காட்டி விளக்கம் அளிக்கிறார். [41]

க.வித்தியானந்தன், சங்க காலத் தமிழ்ப் பண்பாட்டை விரிவாக ஆராய்கிறார். சங்க காலத் தமிழரின் அரசியல் அமைப்பும், வாழ்வியல் முறைகளும், சமயக் கோட்பாடுகளும், வழிபாட்டு முறைகளும், இலக்கியங்களும், வடமொழியினின்றும் வேறுபட்ட தனித்தன்மை உடையன என விளக்குகிறார். [42] தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், புறநானூறும் பத்துப்பாட்டும் குறிப்பிடும் மன்னர், புலவர் பற்றிய செய்திகள், பிற்காலக் கல்வெட்டுக்களில் இடம் பெற்று இருப்பதாகவும், அவை ஒற்றுமை உடையனவாகக் காணப்படுவதாகவும் குறிப்பிடுகிறார். [43]

### 6.3.12. அ.சிதம்பரனார்

திருமந்திரமணி, துடிசைகிழார் அ.சிதம்பரனார், தமிழ்ச்சங்கங்களின் வரலாற்றை விரிவாக ஆராய்கிறார். தமிழ்ச்சங்கங்களை இக்காலத்துப் பல்கலைக்கழகத்துக்கு ஈடாக மதிப்பிடுகிறார். இந்நூலில் பதினான்கு தமிழ்ச்சங்கங்களைக் குறிப்பிட்டு விளக்குகிறார். [44] சேரர் வரலாறு குறித்து அ.சிதம்பரனார் விரிவாக எழுதியிருக்கிறார். சேரர் தம் குடிமையை உதியன் குடும்பம், பொறையன் குடும்பம் என இரண்டாகப் பிரிக்கிறார். உதியன் குடும்பத்துச் சேரமன்னர் முப்பத்து நால்வர் வரலாறும், பொறையன் குடும்பத்துச் சேர மன்னர் பதினெண்மர் வரலாறும் அவரவர்தம் காலவரையறையுடன் விளக்கிச் சொல்கிறார். நூலின் பின் இணைப்பில் பண்டைத் தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் பெயர்களும், அவர் இருந்த தலைநகரங்களும், அவர்களுடைய காலங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. [45]

### 6.3.13. சாமி. சிதம்பரனார்

சாமி. சிதம்பரனார், பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் (1956), எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் (1957), பழந்தமிழ் அரசியல் (1960), சங்கப் புலவர் சன்மார்க்கம் (1961), தமிழர் வீரம் (1964), பட்டினப்பாலை (ஆராய்ச்சி உரை) (1967), முதலான நூல்களில் சங்க காலத் தமிழர் பண்பாட்டை விளக்குகிறார். சங்க காலத் தமிழர்கள் மதப்பற்றோ, இனப்பற்றோ, சாதிப்பற்றோ இல்லாமல் மனிதப் பற்றுடன் வாழ்ந்தனர். சங்க காலப் புலவர்கள் மனிதப்பற்று ஒன்றையே உளங்கொண்டவர்கள். ஆதலால் அவர்கள் பாடல்களிலே பொது தர்மமே ஓங்கி நிற்கின்றது என்கிறார். [46]

6.3.14. பிற கல்வியாளர்கள்

'தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை' (1964) என்ற தலைப்பில் ச. சாம்பசிவம் நெய்தற்பாடல்களை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற அடிப்படையில் விளக்குகிறார். [47] ச. மெய்யப்பன், கபிலர் பாடல்களை ஆராய்ந்து கபிலரைச் சங்க காலக் கம்பர் எனப் போற்றுகிறார். [48] சு. குப்புசாமி, 'மலையமான்கள்' (1978) குறித்து ஆராய்கிறார். மலையமான்கள், சேதிராயர், மிலாடுடை எனக் குடிப்பெயரோடு சார்த்தி வழங்கும் சிற்றரசர்கள் குறித்து ஆராய்கிறார். மலையமான் திருமுடிக்காரி முதலான மலைய மன்னர்களைச் சேரர் குடியினராக இவர் விளக்கிச் செல்கிறார். [49]

சோ.ந. கந்தசாமி, 'பரிபாடலின் காலம்' (1972) குறித்து விரிவாக ஆராய்துள்ளார். கி.மு. 100 - கி.பி 200 க்குள் இப்பாடல்கள் தோன்றின என முடிவு செய்துள்ளார்.[50] இரா. சாரங்கபாணி, 'பரிபாடல் திறன்' (1972) என்ற நூலில் பரிபாடலின் காலத்தைக் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்று மதிப்பிட்டுள்ளார்.[51] வெ. வரதராசனார், 'தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும்' (1973) என்ற நூலில், பாணருக்கும் சமூகத்துக்கும் உள்ள உறவுகள் குறித்து மதிப்பிட்டுள்ளார்.

கு. முத்துராசன், 'சங்க காலம்' (1980) என்ற நூலில் சங்க இலக்கியச் செய்திகளைத் தொகுத்துப் பல்வேறு தலைப்புகளில் எழுதியுள்ளார். சி.ஈ. இராமச்சந்திரன், 'சங்க கால வரலாறு' என்ற தலைப்பில் சங்க இலக்கியச் செய்திகளைப் பட்டப்படிப்பு மாணவர்களுக்காகத் தருகிறார். அரங்க. சீனிவாசனின், 'சங்க நூல்களில் தேசியம்' (1980) என்ற நூல் இந்தியத் தேசியப் பின்னணியில் சங்க இலக்கியத்தை ஆராய்கிறது. ஆதி. பாலசுந்தரனின், 'சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்' (1981), என்ற நூல், இந்து சமயக் கருத்துக்கள் சங்க இலக்கியங்களில் கால்கொண்டிருப்பதாகக் கூறுகிறது. [52] ஈ.கோ. பாஸ்கரதாஸ், 'அகப்பொருள் பாடல்களில் தலைவி' (1982) என்ற தலைப்பில் சங்க இலக்கியம் சுட்டும் தலைவியின் சிறப்பியல்புகளை எடுத்துரைத்துள்ளார்.

மு.பெரி.மு. இராமசாமி, 'நக்கீரர் ஓர் ஆய்வு' (1983) என்ற தலைப்பில் விரிவாக ஆராய்ந்துள்ளார். இந்நூலில் இவர், 1. நக்கீரர் பெயரால் வழங்கும் அனைத்துச் சங்கப்

பனுவல்களையும் இயற்றியவர் கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஒருவரேயன்றிப் பலரல்லர் என்கிறார். 2. முருகு நக்கீரர் சங்க காலத்துக்குப் பிந்தியவர் என்பார் கூற்றை மறுக்கிறார். 3. நக்கீரர் காலம் கி.பி. 175 முதல் கி.பி. 240 வரை ஆகும் என்கிறார். 4. களவியலுக்கு முதலுரை கண்டார் நக்கீரரே எனவும், அவர் உரை பல தலைமுறையாகக் கேட்கப்பட்டு வந்து இறுதியில் ஈழத்துப் புலவர் மாதளவம் இளநாகனாரால் வரிவடிவு பெற்றது என்கிறார். [53]

கு.வெ. பாலசுப்பிரமணியன், 'சங்க இலக்கியத்தில் வாகைத்திணை' (1989) குறித்துத் தனியே ஆராய்ந்துள்ளார். இந்நூல், சங்க இலக்கியங்களிற் காணப்பெறும் வாகைத்திணைப் பனுவல்களையெல்லாம் தொல்காப்பிய இலக்கணத்தோடு பொருத்திப் பார்த்தல், அவ்விலக்கணப் பகுதிகளுக்கு உரை கூறுதல், பாடற் பகுதிகளுக்கு உரிய இலக்கணம் காட்டுதல் என்ற நிலைகளில் செல்கிறது. [54]

சுசீலா கோபாலகிருஷ்ணன், 'சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள்' (1987) குறித்து ஆராய்ந்திருக்கிறார். நாள் நிமித்தம், புள் நிமித்தம், ஏனைய நிமித்தம், மாந்தர் தொடர்பான நிமித்தங்கள், தெய்வம் தொடர்பான நிமித்தங்கள் எனப் பகுத்துக்கொண்டு சங்க நூல்களில் இடம்பெறும் நிமித்தங்களை விளக்கியுள்ளார்.

சி. கலைமகள், 'அகநானூற்றில் பாலைத்திணைப் பாடல்கள் - ஓர் ஆய்வு' (1993) என்ற தலைப்பில் ஆய்வு நிகழ்த்தியுள்ளார்கள். 'சங்க காலத்தில் அமைந்த இனக்குழு சமுதாய அமைப்பின் சிதைவினையும், நிலவுடைமைச் சமுதாய அமைப்பின் தோற்றத்தையும் அகநானூற்றுப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன [55] என்கிறார். கோ. கண்ணன், 'பண்டைத் தமிழரின் ஒலி உணர்வும் இசை உணர்வும்' (1994) குறித்து ஆராய்ந்துள்ளார். இந்நூல் பண்டைத்தமிழரின் கருவி இசை பற்றி ஆராய்கிறது. சங்க இலக்கியம் காட்டும் சமுதாய வாழ்க்கை முறை, இயற்கையோடு இயைந்த பாங்குடையது என்பதும், இந்த இயற்கைச் சார்பு வாழ்க்கையின் ஒரு கூறே ஒலி உணர்வு என்பதும், இயற்கை ஒலி உணர்வுக்கு ஈடாகவே கருவி இசை அமைந்தது என்பதும், கருவி இசை பொழுதுபோக்காக மட்டுமன்றிக் குழு ஆற்றலாகவும் விளங்கியது என்பதும் விளக்கப்பட்டுள்ளன. [56]

ஞா. விக்டர் ராசமாணிக்கம், வே.சா. அருள்ராஜ் ஆகியோர் இணைந்து, 'சங்க இலக்கியத்தில் கலங்கள்' (1994) குறித்து ஆராய்ந்துள்ளார்கள். பண்டைத் தமிழரின் கடலியல் அறிவு, கடம்பர் நாட்டுக் கடற்கொள்ளையர்களைத் தமிழர்கள் எதிர்கொண்டு வென்ற வரலாறு, தமிழர் பயன்படுத்திய பல்வேறு படகு வகைகள், இயற்கைச் சூழலைக் கடற்பயணத்திற்குப் பயன்படுத்திக் கொண்ட பாங்கு முதலானவை குறித்து விளக்கப்பட்டுள்ளன. வி.சி. சசிவல்லி, பண்டைத் தமிழரின் தொழில்கள் குறித்து ஆராய்ந்துள்ளார். சாலினி இளந்திரையன், 'சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள்' (1995) என்ற தலைப்பில் சங்க இலக்கியத்தை மனிதநேய இலக்கியமாகக் கண்டுள்ளார்.

'சங்க இலக்கியம் (அகம்)' (1988) என்ற தலைப்பில் சரளா ராசகோபாலன் சங்க இலக்கிய அகப்பாடல்களை ஆராய்ந்துள்ளார். இராம. குருநாதன், 'குறிஞ்சி வளம்' (1998) என்ற தலைப்பில் சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களைப் பல்வேறு நிலைகளில் ஆராய்ந்துள்ளார்.

இவ்வாறு, கல்வியாளர்கள் ஆரம்பநிலையில் காலத்தின் தேவையால் சங்க இலக்கியத்தை ஆராயத் தலைப்பட்டனர். எளிமையான முறையில் இலக்கியத்தை ஆராய்ந்து இலக்கியம் கற்காத படித்த மக்களுக்குச் சங்க இலக்கியச் செய்திகளைக் கொண்டு சென்று சேர்த்தனர். தாங்கள் இயங்கும் தளம் கல்வித்தளம் என்பதாலும், எந்நேரமும் விவாதங்களுக்கு உரிய வாய்ப்பு உருவாகிக் கொண்டிருக்கும் இடமாக இருப்பதாலும், தொடர்ந்து சிந்திக்கவும் நூல் எழுதவும் முடிகிறது. இன்னும், ஒருவருக்கொருவர் போட்டிப் போட்டுக்கொண்டு இயங்குவதால் பல நேரங்களில் நூல்கள், ஏற்கனவே சொல்லப்பட்ட செய்திகளையே சொல்லிக் கொண்டிருந்தாலும் புதிய செய்திகளையும் அவ்வப்போது காணமுடிகிறது.

சமூக அரசியல் காரணங்களால் தொடங்கப்பட்ட சங்க இலக்கிய ஆய்வுகள் அக்காலத்தில் (ஆரம்ப நிலையில்) உணர்ச்சி நிலையில் கருத்துக்களை முன்வைத்தன. அப்படி வைக்கப்பட்ட முடிவுகளின் வன்மை மென்மைகள் கல்வியாளர்களின் தொடர்ந்து தேடும் முயற்சியால் கண்டறியப்படுகின்றன. அரசியல் தேவை காரணமாகப் பொதுமக்கள் வரையில் எடுத்துச் செல்லப்பட்ட சங்க இலக்கியமானது,

அத்தேவை முடிந்தவுடன் மீண்டும் மூலையில் முடங்காவண்ணம் கல்வியாளர்கள் தங்கள் கையில் எடுத்துக்கொண்டனர்.

எந்த இலக்கியமும் பேசப்படாத போது அதனுடைய நிலைத்தன்மை அழிந்துவிடத்தான் செய்கிறது. அந்த வகையில் கல்வியாளர்கள் சங்க இலக்கியத்தைப் புதிய புதிய கோணங்களில், இன்று பெருகிவரும் புதிய இலக்கியத் திறனாய்வுக் கோட்பாட்டு அடிப்படையில் விளக்கிச் செல்கிறார்கள். இதனால் இலக்கியம் நிலைத்த தன்மை பெறுகிறது. அத்துடன் வாழும் காலத்திற்குத் தேவையான வளமானச் சிந்தனைகளைக் கொடுப்பதையும் காணமுடிகிறது.

### 6.4. அழகியல் திறனாய்வு

இரசனை முறைத்திறனாய்வு, உருவவியல் திறனாய்வு, மனப்பதிவு முறைத் திறனாய்வு, வெளியீட்டு முறைத் திறனாய்வு, உள்வட்டத்திறனாய்வு, பகுப்பு முறைத் திறனாய்வு எனக் குறிக்கப்படும் கவிதையியல் குறித்த திறனாய்வுகள் அனைத்தையும், இங்கு அழகியல் திறனாய்வு என்ற தலைப்பிலேயே விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

அழகியல் திறனாய்வு, கவிதையின் உள்ளடக்கத்தைவிட உருவத்திற்கே முதன்மைதருகிறது. அழகியல் திறனாய்வின் அடிப்படை குறித்துத் தி.சு. நடராசன்,

> "உருவமே முதன்மையானது; அதுவே இலக்கியத்திற்குக் கலையழகைத் தரக்கூடியது என்பதும், இலக்கியத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பதைவிட எப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதே பார்க்கப்பட வேண்டும் என்பதும் அழகியல் திறனாய்வின் அடிப்படை ஆகும்"[57]

என்பார். அழகியல் திறனாய்வு குறித்து மேலும் எழுதும் தி.சு. நடராசன்,

> "முக்கியமாகச் சொல்லிலும் ஓசையிலும் காணக்கூடிய ஒருவித ஒழுங்கமைவு, தொனி, பொருட்சுழற்சி, உணர்ச்சி வடிவங்கள், உவம, உருவகங்கள், ஆர்வத் தூண்டல்கள் முதலியவற்றை ரசனைக்குரிய பகுதிகளாக இது, விளக்கவும் வருணிக்கவும் செய்கின்றது. உள்ளடக்கம் பற்றி இது அக்கறை காட்டுவதில்லை.

இலக்கியத்தின் பயன் குறித்தோ, இலக்கியத்தின் போக்குகள், கொள்கைகள் குறித்தோ வரலாறு பற்றியோ இது கவனம் கொள்வதில்லை; மட்டுமல்ல, இவற்றைப் பல சமயங்களில் மறுக்கவும் செய்கிறது" [58] என்பார்.

### 6.4.1. மறைமலையடிகள்

தமிழ்ச் சூழலில் மறைமலையடிகளும், டி.கே. சிதம்பரநாத முதலியாரும் ரசனை முறைச் சிந்தனையில் இலக்கியத்தை அணுகியவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்களுக்கு முன்னமே வ.வே.சு. ஐயர் அழகியல் கூறுகளின் அடிப்படையில் இலக்கியத்தை அணுகியிருக்கிறார். எனினும், அடிகளும், டி.கே.சியும் எதிர் எதிர் அணியில் நின்று இலக்கியத்தின் சுவை பற்றி வாதிட்டிருக்கின்றனர். சங்க இலக்கியம் தான் உயர்ந்தது என்று மறைமலையடிகளும், கம்பனது பாடல்கள்தான் சுவையானது என்று டி.கே. சியும் எதிர் எதிர் நிலையில் நின்று இலக்கியத்தை அணுகினர். டி.கே.சி., சங்க இலக்கியத்தைப், ''புரியாத மொழி, வழக்கில்லாத மொழி, செத்தமொழி,பாவமில்லாத மொழி" என உரைப்பதோடு,

> "பத்துப்பாட்டு எட்டுத்தொகையையும் வைத்துக்கொண்டு எத்தனை வருஷமாக மாரடித்துக் கொண்டிருக்கிறார்கள்? ஏன்? பண்டித மனப்பாங்கிலுள்ள அகம்பாவந்தான். எனக்குத் தெரியும், உனக்குத் தெரியாது என்ற அகம்பாவமே காரணம்... இந்தச் சோக நாடகத்தைப் பார்த்தால் (Hamlet and lear) சோக நாடகங்கள் ஆகுமா?" [59]

என்று கிண்டல் செய்கிறார். இங்கே தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்கள் இயங்கியுள்ளதே தவிர கோட்பாட்டு அடிப்படையில் இலக்கியத்தை அணுகவில்லை என்பது தெரிகிறது.

மறைமலையடிகள், 'முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரையில்' முல்லைப்பாட்டை பத்துப்பாட்டின் ஏனைய பாட்டோடு சுவை குறைந்ததாகக் காணுகிறார்.இதனை,

> "இம் முல்லைப்பாட்டை ஏனை ஒன்பது பாட்டுக்களோடும் ஒப்பவைத்து நோக்குங்கால், இஃது ஏனையவற்றைப் போல் மிக உயர்ந்த தீஞ்சுவை நடையினதாகக் காணப்படவில்லை... இழுமென் ஓசையுடன் தித்திப்பாக

எழுதப்பட்ட ஓரடியையாவது இம்முல்லைப்பாட்டிற் காண்டல் அரிது; இஃது ஏனையவற்றை, நோக்கப் பெரும்பாலும் வல்லென்ற ஓசையுடையதாயிருக்கிறது. ஏனைப் பாட்டுக்களிற் போலச் சொல்லின் கொழுமை இதன்கண் மிக முதிர்ந்து தோன்றாமையின், இது தன்னைக் கற்பார்க்கு ஏனைய போல் மிக்க சொல்லின்பம் பயவாதென்று கருதுகின்றோம்" [60]

என்று எழுதுவதன் மூலம் அறியமுடிகிறது. மேலும், இப்பாட்டின் நடையைக் கொண்டே இதன் ஆசிரியரை மதிப்பிடுவதையும் காணமுடிகிறது. அதனை,

"இப்பாட்டின் நடையினால் இதனை யியற்றிய ஆசிரியர் நப்பூதனார், துறவொழுக்கமும், வல்லென்ற இயல்பும், அறிவாழமும் மிக்க மனவமைதியும் உடையரென்பது குறிப்பாக அறியப்படும். காட்டிடத்தையும், மழை காலத்தையுந், தலைவி தனிமையையும் பொருளாகக் கொண்டு இச்செய்யுள் யாத்தமையானுந், துறவோர் கருவிகளை உவமை எடுத்துக் காட்டுதலானும் அவையே இவர் தன்மையாமென்பது தெளியப்படும்" [61]

என்ற கூற்றின் மூலம் அறியலாம்.

தமிழ்ச் சூழலில் சங்க இலக்கிய நூல்கள் பெருகத் தலைப்பட்டபோது சங்க இலக்கியக் கவிதைகள் வியந்து போற்றப்பட்டன. ந.மு. வேங்கடசாமி நாட்டாரின், 'நக்கீரர்' (1919), 'கபிலர்' (1921), நூல்களும், வே.வேங்கடராஜுலு ரெட்டியாரின், 'பரணர்' (1933), 'கபிலர்' (1936) நூல்களும், வி.எத்திராஜுலு எழுதிய, 'ஔவையார்' (1957) நூலும், பி.ஸ்ரீ.எழுதிய 'ஔவையார்' (1944) நூலும், ஆ.மாரிமுத்து எழுதிய 'கபிலர் கவிநயம்' (1958), ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை எழுதிய, 'பரணர்' என்னும் நூலும், ச.மெய்யப்பன் எழுதிய, 'கபிலர்' (1975) நூலும், ச. தண்டபாணி தேசிகர் எழுதிய, 'நக்கீரர்' (1973) நூலும் சங்க இலக்கியத்தின் கவிதைச் சிறப்புக்களைப் பேசத் தவறவில்லை. எனினும், மேலை நாட்டாரின் அழகியல் கோட்பாட்டு அடிப்படையில் இந்நூல்கள் சங்கக் கவிதைகளை ஆராயவில்லை என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

6.4.2. கா.சிவத்தம்பி

கா.சிவத்தம்பி, 'பத்துப்பாட்டின் கவிதையியல்' குறித்து ஆராய்ந்துள்ளர். அதில் சங்கப் பாடல் தொகுதி குறித்து, இலக்கண மயப்படுத்தித் தரப்பட்டுள்ள பண்புகளிலிருந்து ஒரு மாற்றுச் செல்நெறி பத்துப்பாட்டுத் தொகுதியின் மூலம் புலப்படுகின்றது என்கிறார். சங்க இலக்கியப் பாடல்களை அடியளவு கொண்டு நோக்கும் போது கவிதையியல் மட்டத்தில் பத்துப்பாட்டின் பாடல் நீட்சிக்கு ஏதாவது காரணம் இருக்க முடியுமா? என்ற வினாவை எழுப்பி விடைகாண முயற்சிக்கிறார். அவர் தரும் முடிவுகளாவன,

'1. பத்துப்பாட்டினுள் இடம்பெறும் முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய பாடல்களில் அகத்திணை, புறத்திணை இயைக்கப்பட்டுள்ள முறைமையில், நியமமான திணை, துறை மரபில் இல்லாத ஒரு நெகிழ்ச்சியை அவதானிக்கலாம். இந்நெகிழ்வு வெறுமனே பாடல் அடிகளின் பெருக்கத்தினால் ஏற்படுவதன்று. இது கவிதையியலில் ஏற்படும் வளர்ச்சியாகும்.

2. ஆற்றுப்படை தனியொரு இலக்கிய வகையாக மேற்கிளம்பியுள்ளமை சங்க காலத்தினூடே ஏற்பட்ட ஒரு சமாந்திரமான (Parallel) வளர்ச்சியாகும். ஆற்றுப்படையில் இடம்பெறும் விரிவான வர்ணனை முறை, திணை துறை முறைமையின் செறிவை உடைத்து ஒரு நீட்சியை ஏடுபடுத்துகின்றது.

3. சங்க இலக்கியத்தின் பெரும்புலவருள் ஒருவரான கபிலர் குறிஞ்சிப்பாட்டில், தான் எடுத்துக்கொண்ட பாடுபொருளை, வேறொரு தளத்தில் நின்று பாடும் தன்மையானது (குறிஞ்சிப்பாட்டின் பிற்பகுதியில் வருகின்ற மாலைக் கால வருணனை முல்லை நிலப் பின் புலத்தில் எடுத்துரைக்கப்படுதல்), தொல்காப்பியம் அகத்திணையியல் (இலக்கணநிலை நின்று) கூறும் இயல்பாக எழுதல் (Spontaneity) என்னும் பண்பைச் சங்க இலக்கியம் இழந்துக் கொண்டு வருவதைக் காட்டுகிறது.

4. புறத்திணையிற் புகழப்பெறும் 'அடுபோர் நியமத்தை'க் கைவிடுமாறு மதுரைக்காஞ்சி கோருகின்றது. இது சங்கக் கவிதையியலின் அழகியலையே (aesthetics of cankam poetics) கேள்விக்குள்ளாக்கி, ஒரு புதிய அழகியலுக்கு எம்மை இட்டுச் செல்கிறது.

5. உருத்திரங்கண்ணனார் பெரும்பாணாற்றுப்படையில் நியம முறைமைகட்கேற்பவும், அதே வேளையிற் பட்டினப்பாலையில் நியமப்பிறழ்வை ஏற்படுத்தும் வகையிலும் பாடும் பொழுது, இந்த இரண்டு செல்நெறிகளும் ஒரே காலத்திலேயே காணப்பட்டன என்பது புலனாகின்றது. [62]

என்பனவாகும். பத்துப்பாட்டுச் சங்க இலக்கியத்திலிருந்து மாறும் தன்மையைச் சுட்டுவதன் காரணமாகவே இறையனார் களவியலுரை பத்துப்பாட்டு நூல்களைக் குறிப்பிடாமலிருந்திருக்கலாம் என்கிறார். அழகியல் அடிப்படையிலான இந்த ஆய்வு இன்னும் வளர்த்தெடுக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

### 6.4.3. ச.அகத்தியலிங்கம்

ச. அகத்தியலிங்கம், 'உள்ளடக்கமும் உருவ ஆக்கமும்' குறித்துக் கட்டுரை வரைந்துள்ளார். இதில் ஒரு நல்ல கவிதையானது உலகப் பொது உணர்வுகளை, பொது உண்மைகளைப் பாடுவதாக இருக்க வேண்டும். அத்தகைய பண்புடன் சங்க இலக்கியக் கவிதைகள் விளங்குவதாகக் குறிப்பிடுகின்றார். [63] இல. குளோறியா சுந்தரமதி, 'திணை துறை வரையறையும் பாடலின் அமைப்புத் தளமும்' என்ற கட்டுரையில், "திணை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலவகை, பயன், மெய்ப்பாடு, பொருட்கூறு, உரைப்பாங்கு என்ற கூறுகள் செறிந்தமைந்த ஒரு திட்டத்தை உட்கொண்ட அமைப்புடைய கூற்றாக அகப்பாடல் உருவாக்கப்பட்டுள்ளது தெளிவாகிறது" [64] என்கிறார்.

தி. செல்வம், சங்க இலக்கியத்தின் 'அழகியல் கோட்பாடுகள்' குறித்து எழுதியுள்ளார். இதில், தொல்காப்பியர் கூறிய செய்யுளுறுப்புக் கோட்பாடுகள் பின்னாளில் தமிழில் நன்கு வளர்க்கப்பெறவில்லை. ஆனால் வடமொழியில் தொனி, இரசம், ஔசித்தியம் முதலிய அழகியல் கோட்பாடுகள் வளர்க்கப்பட்டுள்ளன

என்கிறார். இக்கட்டுரையில், தொல்காப்பியர் கூறியுள்ள உள்ளுறை என்னும் அழகியல் கோட்பாட்டு அடிப்படையிலும் தொனி, இரசம், ஔசித்தியம் ஆகிய வடமொழிக் கோட்பாட்டு அடிப்படையிலும் காணலாகும் சங்கப் பாடல்களை எடுத்து விளக்கியுள்ளார். [65] வி.சி. சசிவல்லி, தமிழர்கள் அழகியல் சிந்தனை உடையவர்களாக வாழ்ந்தனர் என்றும், உணர்ச்சி, படிமம், ஒலிநயம், குறிப்புப் பொருள், சுவை போன்ற பல உத்திகளைக் கையாண்டு கவிதை படைத்தனர் என்றும், சங்க இலக்கியக் கவிதைகளைக் கொண்டு விளக்கியுள்ளார் [66]

இரா. தமிழரசி, சங்க இலக்கியத்தின் 'உத்திகள்' குறித்து ஆராய்ந்துள்ளார். இவர் சங்க இலக்கிய உத்திகளனைத்தையும், சொல்நிலை உத்திகள், தொடர்நிலை உத்திகள், வருணனை உத்திகள், பொருளமைப்பு உத்திகள் என்ற நான்கு நிலைகளில் பகுத்துக் காண்கிறார். [67] அம்மன்கிளி முருகதாஸ், 'எடுத்துரைப்பு முறைகள்' குறித்து ஆராந்துள்ளார். சங்க அகப்பாடல்களின் எடுத்துரைப்பு முறைகள் குறித்துக் கூறும்போது, கா.சிவத்தம்பியின்,

'1. பாத்திரம் தானே தனது மனநிலையைத் தெரிவித்துப் பாடுதல், 2. பாத்திரம் பாடுவதாகப் பாணர் பாடுதல், 3. பாணர் மரபு வழியில் புலவர் பாடுதல்' என்ற கருத்துக்கு அரண் சேர்க்கிறார். அதேபோல்,'புறநானூற்றுத் தலைவர்கள் பற்றியதுவே அகப்பாடல்கள்' என்ற கைலாசபதியின் கருத்தையும் ஏற்றுக் கொள்கிறார். அகப்பாடல்களில் பெண்களை வருணிக்கும் போது, மன்னர்களோடு தொடர்புடைய வரலாற்று உவமைகள் கூறப்படுவதை எடுத்துக்காட்டுகிறார். இந்நிலையானது, "உவமைகள் இயற்கைப் பொருளிலிருந்து மனித (மன்னர்) செயற்பாடுகளுக்கு மாறியதைக் காட்டுவதுடன் அகத்துக்கும் புறத்துக்குமுள்ள தொடர்பை, அதாவது புகழ்பாடுதலின் ஒரு கூறாக அகம் இருந்ததை இவை காட்டும்" என்று எழுதுகிறார். மேலும்,'அகப்பாடல்களில் எடுத்துரைப்பு முறையில் இயல்பு நிலையிலிருந்து பாடிய (Formal poetry) அதாவது இன்னின்ன விடயங்கள் உள்ளடக்க வேண்டும் என்று எண்ணி அமைத்த விதிமுறையான பாடல்களும் உள்ளன. இவை அசமத்துவ வளர்ச்சியாகும்' என்கிறார்.[68]

### 6.4.4. சோ.ந.கந்தசாமி

தி.வே. கோபாலய்யர், 'செய்யுளிலும் யாப்பும்' என்ற தலைப்பில் சங்க இலக்கியத்தை ஆய்ந்துள்ளார். தொல்காப்பியச் செய்யுளியற் செய்திகள், சங்க இலக்கியத்தில் எந்த அளவு பின்பற்றப்பட்டுள்ளன என ஆராய முற்படும் அவர் சங்க இலக்கியம் பெரும்பாலும் தொல்காப்பிய யாப்பின் அடிப்படையில் அமைந்தது என்ற முடிவுக்கு வருகிறார். [69] அ.சண்முகதாஸ், சங்க இலக்கியப் பாடல் மரபு குறித்து ஆராய்கிறார். அகவலிலே தொடங்கிய சங்க இலக்கியப் பாடல் மரபு பரிபாட்டாகவும், நீண்ட பாட்டாகவும் வளர்ச்சியடைந்ததற்குக் காரணம் இலக்கியப் பாடுபொருள்களின் வளர்ச்சியே என்கிறார். [70]

சோ.ந. கந்தசாமி, சங்க இலக்கியத்தின் 'யாப்பு' குறித்து ஆராய்ந்துள்ளார். இதில் தொல்காப்பியர் தொகை வகை செய்த, பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்ற எழுவகை யாப்புக்களில் பாட்டு யாப்பு மட்டுமே சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. இதற்குள் வாய்மொழி, அங்கதம், முதுசொற்கூறுகள் ஆங்காங்கே இடம் பெற்றன என்றும், தொல்காப்பியர் வரையறுத்துள்ள யாப்பியல் நெறிகள் பல சங்கப்பாக்களில் நெகிழ்ச்சியுற்றுப் புதிய இலக்கணத் தோற்றத்திற்கு வழியமைத்தமையால், தொல்காப்பியம் சங்க இலக்கியத்தின் தொன்மை வாய்ந்த இலக்கணம் என்று துணியப்படும்என்றும் கூறுகிறார். [71] இரா. இளங்குமரன், 'யாப்பியல் கொடை' என்ற தலைப்பில் எழுதும் போது, தமிழில் பிற்காலத்து எழுந்த யாப்பியல் வளர்ச்சிக்குச் சங்க இலக்கிய யாப்பியலே காரணம் என்கிறார். [72]

இவ்வாறு சங்க இலக்கிய அழகியல் குறித்துப் பல்வேறு அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். அழகியல் கோட்பாட்டு அடிப்படையில் சங்க இலக்கியத்தை இன்னும் ஆராய மிகுதியான இடமிருக்கிறது. அப்படி ஆராய்ந்து வெளிவரும் முடிவுகள் சங்க இலக்கியம் குறித்து விளங்காமல் இருக்கும் பல்வேறு புதிர்களுக்கு விடையாக அமையவும் வாய்ப்பிருக்கிறது எனலாம்.

## 6.5. சமூகவியல் திறனாய்வு :-

இலக்கியத்திற்கும், தனிமனிதனுக்கும் உள்ள உறவைவிட, இலக்கியத்திற்கும்,சமூகத்திற்கும் உள்ள உறவின் அடிப்படையில் இலக்கியத்தின் மேல்

நிகழ்த்தப்படும் ஆய்வு சமூகவியல் திறனாய்வு எனப்படுகிறது. இது குறித்துக் க.பஞ்சாங்கம்,

"சமூகவியல் திறனாய்வு என்பது (Sociological criticism) சமூகவியல் என்கிற புதிய சமூக விஞ்ஞானத்துறையின் ஆய்வியல் நெறிமுறைகளைப் பின்பற்றியும், அஃதாவது, அட்டவணை, புள்ளிவிவரம், பரிசோதனை, வரைபடம், முதலிய அறிவியல் உத்திமுறைகளைப் பின்பற்றியும் சமூகவியல்துறை ஆய்ந்தறிந்து கண்ட சமூக உண்மைகளைப் பயன்படுத்தியும் இலக்கியத்தை விளக்குவது எனக் கொள்ளலாம்" [73]

என்பார். சமூகவியல் அணுகுமுறை தொடர்பான க. கைலாசபதியின் கருத்தும் இந்த இடத்தில் சுட்டத்தக்கதாகும்.

"இலக்கியத்தை அடிப்படையில் சமூக விளைபொருளாகக் கொண்டு, அதனை உரிய வரலாற்றுச் சூழலில் வைத்து நோக்கி, அதன் உயிராற்றல் காலத்துக்குக் கட்டுப்பட்டும் காலத்தை வென்றும் நிற்கும் தன்மையை விளக்குவதே சமூகவியல் அணுகுமுறையின் பிரதான அம்சங்களாகும்"[74] என்பது கைலாசபதியின் கருத்தாகும். அண்மையில் வேகமாக வளர்ந்து வரும் துறைகளில் ஒன்றாகச் சமூகவியல் விளங்குகிறது. இங்குச் சமூகவியல் அடிப்படையில், நிகழ்த்தப்பட்டுள்ள சங்க இலக்கிய ஆய்வுகள் குறித்து விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

### 6.5.1. நா.வானமாமலை

தமிழ் இலக்கிய விமர்சனத் துறையில் புதிய திருப்பங்களையும் மரபுகளையும் ஏற்படுத்தியவர்களில் குறிப்பிடத்தக்கவர் நா. வானமாமலை ஆவார். 1969-82 காலக் கட்டத்தில் இவரால் நடத்தப்பெற்ற 'ஆராய்ச்சி' என்ற இதழ், கலை இலக்கிய உலகில் முற்போக்குக் களம் கட்டுவதில் தீவிரப் பங்காற்றியது எனலாம். இலக்கிய ஆராய்ச்சிக்குப் பலதுறை அறிவை இவர் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது. 'பொருளாதார வாழ்வையும் வர்க்க முரண்பாடுகளையும் அடிப்படையாகக் கொண்டு தமிழ்நாட்டு மக்களின் வரலாறு முழுதும் எழுதப்படவேண்டும்' [75] என்னும் கருத்தை முன்வைக்கிறார்.

தமிழிலக்கியத்தில் மோரியர் குறித்து ஆராயும் போது, அகநானூற்றிலும் புறநானூற்றிலும் மோரியரைப் பற்றிக் குறிப்பிடும் பாடல்கள் மோரியர் காலத்திலேயே தோற்றம் பெற்றன என்கிறார். வையாபுரிப்பிள்ளை குறிப்பிடும், "புலவர்கள் தங்களது மன்னர்களைப் பெருமைப்படுத்துவதற்காக, முற்காலத்தில் வாழ்ந்த மோரியர்களோடு அவர்களை ஒப்பிட்டுப் பேசியிருக்கிறார்கள்" என்ற கருத்தையும், டி.டி. கோசாம்பி கூறும், 'மோரியர் காலத்தில் தமிழ்நாட்டில் புதுக் கற்கால நாகரிகம் நிலவியது' என்ற கருத்தையும் நா. வானமாமலை மறுக்கிறார். அதற்கு ஆதாரமாகப் புறநானூற்றுப் பாடலில் ஆதனுங்கன் காலமும், மோரியர் காலமும் நிகழ்காலத்தில் பேசப்படுகின்றன என்பதை முன்வைக்கிறார். இன்னும் கிரேக்க, வடமொழி நூல்கள் மூலமும் சான்றுகளைத் தருகிறார்.[76] இவருடைய எழுத்தில் விஞ்ஞானப் பூர்வமான இயக்கவியல் வாதத்தைக் கொண்ட முறையியல் தென்படுகிறது.

வர்க்கப் பார்வையில் சங்க இலக்கியத்தை அணுகியதில் நா.வா.வின் 'ஆராய்ச்சி' இதழில் வெளியான கட்டுரைகள் முன்னின்றன எனலாம். "கா. சுப்பிரமணியனின் 'சங்க இலக்கியத்தில் இனக்குழு வாழ்க்கை (21,22,1975) 'ஆற்றுப்படை - ஒரு சமுதாய வரலாற்று விளக்கம்' (14,1974) ஆகிய கட்டுரைகளும், கா. சிவத்தம்பியின் 'திணைக் கோட்பாட்டின் சமூக அடிப்படைகள்' (சூன் 1971) என்ற கட்டுரையும் முக்கியமானவையாகும். 'சங்க காலம் பொற்காலம்' என்கிற மாயையை இவை தகர்த்தன. சங்க கால மக்களின் வாழ்க்கை முறை திணைப் பாகுபாட்டுடன் எவ்வாறு கலந்திருந்தது என்பதையும் எடுத்துரைத்தன. குறிஞ்சி, முல்லை... முதலிய திணைப்பிரிவுகள் அந்த நில மக்களின் பொருளாதார வாழ்வோடும், உற்பத்தித் திறனோடும் இணைந்திருந்த விவரத்தைச் சிவத்தம்பி எடுத்துரைத்தார்." [77]

### 6.5.2. க. கைலாசபதி

'தினகரன்' வாரப்பத்திரிகையின் ஆசிரியராகவும், பல்கலைக் கழகத்தில் ஆசிரியராகவும் விளங்கிய க. கைலாசபதி, பல்துறை அறிவுச் சார்புடன் ஆய்வு, திறனாய்வு என்பவற்றில் ஈடுபட்டவர் ஆவார். கலை இலக்கியத்தை அழகியல் வெளிப்பாடுகள் என்ற வகையில் மட்டும் பார்க்காமல், அவற்றைச் சமுதாயப் பிரச்சினைகளின் பதிவுகளாகவும், சமூக வர்க்கங்களின் குரல்களாகவும் கண்டவர்.

தமிழ், தமிழினம் எனப் பேசி, திராவிட இயக்கத்தினர் சங்க காலம் குறித்து வைத்த பொற்காலச் சிந்தனைகளை மறுதலித்து அறிவாராய்ச்சி அடிப்படையில் இலக்கியத்தை விளக்கினார். இப்பணியைப் 'பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்' என்ற நூல் செம்மையாகச் செய்தது. 'அழிவும் ஆக்கமும்' என்ற கட்டுரையில்,

"மற்றெக்காலப் பெருமாற்றங்களைப் போலவே சங்க கால நாகரிகமும் உக்கிரமான போராட்டத்தின் பயனாகும். அப்போராட்டத்தின்போது கணக்கற்ற படையெடுப்புக்கள் நடந்தன; ஊர்களும் கிராமங்களும் எரிபுகையில் மண்டின; வீடுவாசலிழந்த பல்லாயிரக்கணக்கானோர் வெம்பி வெந்து புலம்பிச் சாம்பினர். அபலைகளின் ஓலமும் விதவைகளின் அவலமும் ஊர்களில் எதிரொலித்தன. துன்ப மிக்க அப்போராட்டத்தை வழிநடத்தியது அக்கால வர்க்கப் போராட்டமாகும். இப்போராட்டம் புராதனப் பொதுவுடைமையிலிருந்து முதலாளித்துவம் வரை வரும் வர்க்கப் போராட்டமான சங்கிலிப் பின்னலின் ஒரு படியாகும். இதையுணராது, கற்பனாவாதம் பேசுவது பழந்தமிழருக்கும் பெருமையன்று, எமக்குஞ் சிறப்பன்று"[78] என்று எழுதுவதன் மூலம் இதனை அறியலாம். மேலும்,

"குலமரபுக்குழுக்கள் (Tribes) நிறைந்த புராதனக் கூட்டுச் சமுதாயங்கள் அழிக்கப்பட்டு வேந்தர்கள் (அரசு) உருவானபோது, ஆளும் வர்க்கத்திற்கு அனுசரணையாகப் புலவர்கள் பிரசாரம் செய்தனர்; அழிவில் அழகைக் காட்டினர்" என விளக்குகிறார்.[79]

### 6.5.3. கோ.கேசவன்

வரலாற்றுப் பொருள்முதல்வாத அடிப்படையில் இலக்கியத்தை அணுகியவர் கோ. கேசவன். இவர், 'மண்ணும் மனித உறவுகளும்' என்ற நூலில் சங்க இலக்கியத்தை வர்க்க அடிப்படையில் ஆராய்கிறார். குலமரபுக் குழுக்களின் கூட்டுச் சமுதாய வாழ்நெறிகளைச் சிதைத்து அரசு என்னும் அமைப்பில் உடைமைச் சமுதாயம் உருவாக்கப்பட்டதை இயங்கியல் அடிப்படையில் 'போரும் புதுமையும்' என்ற கட்டுரையில் விரித்தெழுதுகிறார். கொள்ளைமேவலை அறமாகக் கொண்ட காலம்

என்றே சங்க காலத்தைக் குறிக்கிறார். பண்டைக் காலத்தில் போர் முறைகள் மிகவும் அறவழிப்பட்டதாக இருந்ததெனக் கூறும் ஆய்வாளர்களின் கருத்தை மறுத்து,

"கொள்ளை மேவலை அறமாகக் கொண்ட காலத்தில், அறவழிப் போர் முறைகள் என எண்ணுவது வரலாற்றுணர்வுக்கு முரணிய சிந்தனையாகும்"[80]

எனக் கூறுகிறார். "சமுதாயத்தில் ஒரு பக்கம் 'அடுபசி உழந்த இரும்பேர் ஒக்கலைக்' காண்கிறோம்; இன்னொரு பக்கம், 'தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை' யினரையும் காண்கிறோம்" என்று சங்கச் சமுதாயம் வர்க்கச் சமுதாயமாக வளர்ந்துவிட்டிருந்ததை எடுத்துரைக்கிறார்.

க. கைலாசபதியின் சங்க இலக்கியம் குறித்த கருத்துக்களை வளர்த்தெடுக்கும் கோ. கேசவன், புறநானூற்றில் காணப்படும் புலவர்-மன்னர் உறவுமுறையைப் பின்வருமாறு மதிப்பிடுகிறார்.

" (1) அரசனைப் புலவன் அண்டியிருக்க வேண்டியுள்ள தென்றும், (2) அரசனோடு மனமுரண் கொள்கையில் பணிவாக முரண்பட்டு அமைதி கொள்கின்றனர் என்றும் இல்லையெனில் அடுத்த அரசனுடன் தொடர்பு கொண்டுள்ளனர் என்றும், (3) அரசனது நிலை பேற்றுக்குத் தம் அறிவைச் சரியான பிரச்சாரக் கருவியாக்கியுள்ளனர் என்றும்,

(4) காலத்தின் தவிர்க்க இயலாத அம்சமாகிய போரைச் சிறப்பித்து, நியாயப்படுத்திப் பாடியுள்ளனர் என்றும்,

(5) தம் உலகியல் வாழ்வில் உயர்ந்த கிழார்களுள் புலவருமாயிருப்போர் தம் கருத்துகளை வரம்பு அறிந்து பணிவோடு தெரிவித்துள்ளனர் என்றும்,

(6) இன்னோரன்ன சேவைகளுக்காகப் போரில் கொணர்ந்த பொருள்கள் உட்படப் பல பரிசில்கள் பெற்றனர் என்றுந் தெரியவருகிறது".

இவ்வாறு வர்க்க அடிப்படையில் சங்க இலக்கியத்துக்குப் புது விளக்கம் கொடுப்பதைக் கேசவனிடம் காணமுடிகிறது.

### 6.5.4. செ. வை. சண்முகம்

செ. வை. சண்முகம், மொழிச் சமுதாயவியல் (Sociology of language) நோக்கில், சங்க காலத்தில் நடைபெற்ற மொழி வளர்ச்சி நிலைகளாக எழுத்தாக்கம், இலக்கிய உருவாக்கம், தொகையாக்கம், இலக்கண உருவாக்கம், ஆகியவற்றை விரிவாக ஆராய்கிறார். 'மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும்' என்ற நூலின் மூலம் இதனைச் செய்கிறார். சங்க காலத்தின் மொழி உணர்வுகளை, அந்தச் சமூகத்தின் அரசியல், பொருளாதாரப் பின்னணிகளில் பொருத்திப் பார்ப்பதன் மூலம் வெளிக்கொண்டு வருகிறார். இந்நூலில் அவர்தரும் முடிவுகளில் சில வருமாறு.

'1. சங்க இலக்கியம் நாட்டுப்புறப் பாடல்களின் மரபை ஒட்டி எழுத்து இலக்கியமாக உருவாகியிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

2. புலவர்களுக்கு அரசர்கள் கொடை கொடுத்து ஆதரித்ததற்கு அரசியல், மொழி, சமயம் ஆகிய மூன்று காரணங்களும் கலந்தே செயல்பட்டுள்ளன.

3. தொகையாக்கம் அரசியல் உணர்வும் இலக்கிய உணர்வும் கலந்தது என்பதில் ஐயமில்லை.

4. சங்க இலக்கியங்களில் தமிழ்மொழி மதுரையோடு இணைத்துப் பேசப்பட்டதற்கு முக்கியக் காரணம் மதுரைத்தமிழ் அல்லது பாண்டிநாட்டுத் தமிழ் நிலைமொழியாக - இயற்சொல்லாகக் கருதப்பட்டது என்று தன்கால நோக்கிலிருந்து கூறலாம்"[82]

இவ்வாறு எழுதிய செ. வை. சண்முகம். இந்நூலில் பல்வேறு ஐயங்களையும் வினாக்களையும் எழுப்பி மேல் ஆய்வுக்கு வழிகாட்டுதல் குறிப்பிடத்தக்கதாகும்.

### 6.5.5. கு.வெ.பாலசுப்பிரமணியன்

கு.வெ. பாலசுப்பிரமணியன், 'சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்' (1994) குறித்து ஆராய்ந்துள்ளார். இந்நூலில் அவர் சங்க காலத்தில் வருணப்பாகுபாடு, சமூக மதிப்புகள் (உயர்தகவுகள், Values), சமயநிலை, நாடு மொழி இனம் ஆகிய ஒருமை உணர்வுக் காரணிகள், பிற சமூக அமைப்புகளோடு கொண்ட தொடர்புகள் என

ஆராய்ந்து தமிழ் மக்களின் பரந்த உள்ளத்தை வெளிக்கொணர்ந்துள்ளார். சிலம்பு நா. செல்வராசு, 'சங்க இலக்கியம் சமூக மானுடவியல் ஆய்வுக்கட்டுரைகள்' என்ற நூலில் பரிபாடலையும் கலித்தொகையையும் நீதி இலக்கியக் காலத்தைச் சேர்ந்ததாகக் கூறுகிறார். அவருடைய கூற்றாவது,

"பரிபாடலின் தொல் இலக்கிய உள்ளடக்கம் அல்லது பாடுபொருள் வெறும் காமச்சுவை மட்டுமின்றி அது காதலர் வழிபாடாகவும் அமைந்திருந்ததும் வைதிக சமயத்திற்குப் பெரும் வாய்ப்பாக அமைந்தது. ஆகப் பல்லவர் காலப் பக்தி இயக்கத்திற்கான வித்தைப் பரிபாடல் கலித்தொகையிலிருந்தே அறிய முடிகிறது. வித்து தோன்றிய காலமாகிய நீதி இலக்கியக் காலமே பரிபாடல் கலித்தொகை தோன்றிய காலமாகக் கொள்ள முடியும் - சமூகவியல் ஆராய்ச்சியும் இதனை உறுதி செய்கிறது" [83] என்பதாகும்.

### 6.5.6. ராஜ் கௌதமன்

ராஜ் கௌதமன், 'அறம்/அதிகாரம்' என்ற நூலில் சங்க இலக்கிய அறக்கருத்துக்களைப் பின்னை நவீனத்துவச் சிந்தனைகள் அடிப்படையில் விளக்கும் முயற்சியில் ஈடுபடுவதைக் காணமுடிகிறது. தமிழ் இலக்கிய அறக்கருத்துக்களை மறுபொருள் கோடல் முயற்சியில் ஈடுபட்டுள்ள ராஜ் கௌதமன்,

"அறங்கள், எதார்த்தத்தில் குறிப்பிட்டவிதமான சமூக ஒழுங்கை, உடைமை நாகரிகத்தின் ஆதிக்க ஒழுங்கைப் பேணிப் பராமரிக்க ஏற்பட்டவை... அறங்கள் எல்லாம் ஆதிக்கத்திலுள்ள சக்திகளின் பச்சையான நலன்களை நிலைக்கச் செய்பவை, இவை எப்போதும் ஒடுக்குமுறைக்கான கருத்தியல் கருவிகளாகவே செயல்பட்டு வந்துள்ளன" [84]

என்று எழுதுகிறார். இவ்வாறு சமூகத்தின் கீழ்நிலையில் உள்ள மக்களை அதிகார வர்க்கத்தினர் ஒடுக்குவதற்காக அறம்பற்றிய சொல்லாடல்களைப் பயன்படுத்தினர் என்கிறார்.

க. பூரணசந்திரன், 'பின் நவீனத்துவ நோக்கில் முன் இலக்கியங்கள்' என்ற கட்டுரையில், சங்க இலக்கியம் ஓர் உயர்குடி/மேட்டுக்குடி ஆதிக்கக் கலாச்சார அடிப்படைகளைத்தான் காட்டுகின்றது என்கிறார். சங்க அகப்பாடல்களில் ஆணாதிக்கச் சமூகத்தின் சொல்லாடல் நிரம்பியிருப்பதாகக் கூறுகிறார். சங்க அக இலக்கியம் நாடக வழக்கு. நிஜ வாழ்க்கையில் மானிடத் தன்னிலைகள் இயங்குதல் இதற்குள் வருவதில்லை. ஒரு வகை இலட்சிய மயமாக்கப்பட்ட புனைவுலகம் இது என்கிறார். மேலும்,

"அக இலக்கியம் ஒரு புனைவு. கட்டுக்கதை என்பதற்கு (இது வாழ்விலக்கியம், அப்படியே நடந்தது, அக்காலச் சமூகமுறை என்று கூறுவோர்க்காக) ஒரே ஒரு சான்றினை மட்டும் சுட்டிக்காட்டலாம். சங்க அக இலக்கியத்தில் குழந்தைகள், சிறுவர் சிறுமியர் கிடையாது; பாலுறவு கொள்ள இயலாது மூத்த முதிர்ந்தோர் கிடையாது; சாவு அறவே கிடையாது. சாதிப்பாகுபாடு கிடையாது. இடம்பெறும் தலைமாந்தர்களோ பிறப்பு குடிமை போன்ற பத்துவிதப் பொருத்தங்களும் உடையவர்கள்" [85] என்று விளக்குகிறார்.

க.ப. அறவாணன், சொரோக்கின் சமுதாயவியல் கோட்பாட்டு அடிப்படையில் பண்டைத் தமிழரின் முப்பொருள் கோட்பாட்டை விளக்குகிறார். 'மனிதனுடைய உணவு, உடை, உறைவிடம், பழக்க வழக்கம், பண்பாடு, சிந்தனை ஆகிய அனைத்தையும் அவன்சார்ந்து இருக்கும் நிலச்சூழலே பெரிதும் தீர்மானிக்கிறது என்ற சொரோக்கின் கருத்தை எடுத்துரைத்து, சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்ததாகவும், நிலத்தின் இயல்பே அவர்களின் வாழ்க்கை முறையைத் தீர்மானித்ததாகவும் கூறுகிறார். முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன நில அடிப்படையின் காரணமாகவே அமைந்தது இதனை விளக்கும் என்கிறார். [86]

### 6.5.7. ஞானி

ஞானி, சங்க இலக்கியத்தில் சமுதாயப் பிரச்சினைகள் இடம்பெற்றமை குறித்து ஆராய்கிறார். 'சங்க காலம் ஒரு மாறுதல் காலம். குறிஞ்சி, முல்லை, நெய்தல் நில நாகரீகங்களை மீறி மருதநில நாகரீகம் வளர்ந்து, அவற்றை வெற்றி கொண்ட காலம்' என்று கூறி அப்போது நிகழ்ந்த சமுதாயப் பிரச்சினைகள் குறித்துச் சிந்திக்கிறார்.

காதல் பற்றிய அவருடைய சிந்தனை வருமாறு,

"சான்றோர்கள் அன்பின் ஐந்திணையைப் பாராட்டிக் கொண்டிருந்த போதிலும், சமுதாய நடைமுறை வேறுவகையாக இருப்பதைத்தான் இலக்கியம் தெரிவிக்கின்றது. காதலித்தவன் கைவிட்டுவிடுவானோ, பொருளுக்குப் பிரிந்தவன் தன்னை மறந்துவிட்டானோ என்றெல்லாம் தலைவியரும், தோழிகளும், செவிலித் தாயாரும் ஐயுற்றதில், அவலம் கொண்டதில் பொருள் இல்லாமல் இல்லை. ஒரு வகையில், காதலர்க்கும் சமுதாயத்திலுள்ள பெற்றோர் முதலியவர்க்கும் கடுமையான பகை இருக்கவே செய்கிறது. காதலைச் சான்றோர்கள் எவ்வளவு பாராட்டியபோதிலும், சமுதாயத்தில் பெருகி நடைமுறையாகவில்லை. தனியுடைமை தன் ஆதிக்கத்தை நிலை நிறுத்திக்கொள்வதில் வெற்றிபெற்றவுடன் காதல் புதைக்கப்பட்டது"[87] என்பதாகும்.

மு. பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் மெய்ப்பாட்டு இயக்கம் (1998) என்னும் நூலில், தொல்காப்பியம் குறிப்பிடும் எண்வகை மெய்ப்பாட்டில் நான்கு வகையான மருட்கை பெருமிதம் வெகுளி உவகை என்னும் மெய்ப்பாடுகளை உளவியல் அணுகுமுறையில் நின்று ஆய்ந்துள்ளார். மெய்ப்பாட்டு இயக்கத்தால் சங்க இலக்கியம் பொருட்பாட்டில் சிறந்து விளங்கியது என்கிறார். மேலும், மக்கள் நலன்களைப் பொதுமை நோக்கில் தெளிந்து வெளிப்படுத்திய தமிழ்ப் புலவர்கள் வீரம் காரணமாகப் போரினால் உருவாகும் தீமைகளைப் பெரிதும் கடிந்து ஒதுக்காததற்கு வீரநிலைக்கால பெருமித உணர்வுகளே காரணம் என்கிறார்.[88]

இவ்வாறு சமூகவியல் நோக்கில் சங்க இலக்கியம் பற்றி அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். இதன்காரணமாகச் சங்க இலக்கியம் புதிய விளக்கங்களுக்கு உள்ளாகியதைக் காணமுடிகிறது.

### 6.6. ஒப்பிலக்கியத் திறனாய்வு

"ஒப்பியல் என்பது வேறுபட்ட பல பொருட்களிடையிற் காணப்படும் பொதுமைக் கூறுகளை இனங்காணும் ஆய்வு முறைமையாகும். இது கலை

இலக்கியம் ஆகிய துறைகளின் அனைத்துலகப் பொதுமையை இனங்காணும் ஒரு ஆய்வு நெறியாக வளர்ந்து வந்துள்ளது. நாடு, இனம், மொழி, காலம் முதலியவற்றில் வேறுபட்ட சூழல்களில் உருவாகும் கலை, இலக்கியம் ஆகியவற்றில் காணப்படக்கூடிய பொதுமைக் கூறுகளை இனங்கண்டு அவ்வாறான பொதுமைக்குரிய காரணிகளை ஆராய்ந்தறியும் செயற்பாங்காக இது திகழ்கிறது. ஒன்றோடொன்று ஒப்பிடும் முறைமையால் இது 'ஒப்பியல்' எனப் பெயர் பெறுகிறது" [89]

என ஒப்பியல் ஆய்வு குறித்து விளக்குவர் நா. சுப்பிரமணியன்.

தி.சு. நடராசன், ஒப்பீட்டுத் திறனாய்வு குறித்து, "ஒன்றனை இன்னொன்றனோடு ஒப்பிடுவதற்குக் காரணம், ஒன்றனைவிட இன்னொன்று சிறப்பானது என்று செம்மாப்புக் கொள்வதற்காக அன்று; மாறாகக், குறிப்பிட்ட இலக்கியத்தின் பண்புகளை மேலும் சரியாகவும் நிறைவாகவும் விளங்கிக்கொள்வதற்கும் பிறர்க்கு விளக்குவதற்காகவுமேயாகும்"[90] என்று எழுதுவார்.

இலக்கியத்தை மேலும் மேலும் விளங்கிக் கொள்ளவேண்டும் என்ற அடிப்படையில் வளர்ந்து வரும் திறனாய்வு முறைகளில் ஒன்றாக ஒப்பிலக்கியத் திறனாய்வும் விளங்குகிறது. தமிழிலக்கிய ஆராய்ச்சியிலும் இத்துறை வேகமாக வளர்ந்து வருகிறது. ஒப்பீட்டு முறையில் நடைபெற்ற சங்க இலக்கிய ஆய்வுகளை விளக்கும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

### 6.6.1. கைலாசபதி

மேனாட்டு ஆய்வாளர்களின் ஒப்பியல் கோட்பாட் டடிப்படையில் சங்க இலக்கியத்தை முதன் முதலில் ஆய்வுக்கு உட்படுத்தியவர் க. கைலாசபதி ஆவார். 'தமிழ் வீரயுகப் பாடல்கள்' என்ற நூலில் இம்முயற்சியை இவர் மேற்கொண்டுள்ளார். இந்நூலில் இவர் சங்கப் பாடல்களைப் பண்டைய கிரேக்க இலக்கியங்களுடன் ஒப்புநோக்கியுள்ளார். இதன் காரணமாகச் சங்கப் பாடல்கள் எழுந்த காலப்பகுதியைத் தமிழரின் வீரயுகம் என்றும், அப்பாடல்கள் வாய்மொழிப் பாடல்களாக உருவானவை என்றும் முடிவு கண்டுள்ளார். [91]

கைலாசபதி பற்றி ஆராயும் நா. சுப்பிரமணியன், "சங்க இலக்கியங்கள் பண்டைய கிரேக்க மற்றும் மேலைத் தேய இலக்கியங்களுடன் ஒப்பு நோக்கத்தக்கன என்ற எண்ணக் கரு வணை. ஜி.யு. போப், என்.கே. சித்தாந்தா, எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ். வையாபுரிப்பிள்ளை முதலியோரால் முன்னரே உருவான ஒன்றாகும். இந்த எண்ணக்கருவுக்கு ஆய்வு நிலையில் வடிவம் தந்த வகையில் கைலாசபதியின் மேற்குறித்த ஆய்வேடு வரலாற்று முக்கியத்துவமுடையது. சி.எம். பௌரா, சாட்விக் தம்பதியர் மற்றும் மில்மன்பரி ஆகிய மேல்நாட்டு ஆய்வாளர்களின் கோட்பாடுகள் கைலாசபதியின் இந்த ஒப்பியல் ஆய்வுக்குப் பெரிதும் துணைபுரிந்தன." [92]

என்று எழுதுவதைக் காணமுடிகிறது.

### 6.6.2. கதிர் மகாதேவன்

கைலாசபதியைத் தொடர்ந்து தமிழ் ஆய்வியலில் ஒப்பிலக்கிய ஆய்வுகள் வெளிவரத் தொடங்கின. இவ்வகையில் குறிப்பிடத்தக்கது கதிர் மகாதேவன் எழுதிய, 'ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம்' (1975) என்ற நூலாகும். இந்நூலில் சங்க இலக்கியங்களை, கிரேக்க, வடமொழி இலக்கியங்களுடன் ஒப்பிடுகிறார். இதன் காரணமாக வீர ஊழிக் காலத்தின் பொதுக்குணங்களாக, மிகுசினம், போர், ஆண்மை, வஞ்சினம் கூறல், உயிரின் மீது பற்றின்மை, புகழாசை, கொடைத்தன்மை, பாணர்கள் தம்மைப் பாடவேண்டும் என விரும்புதல், காதல், பரத்தமை, வீர வழிபாடு முதலானவை என வரையறுக்கிறார். சங்க இலக்கியத்தை வீர ஊழிக்கால இலக்கியமாக மதிப்பிடுகிறார். [93]

தமிழண்ணல், 'சங்க இலக்கிய ஒப்பீடு' (1975) என்ற நூலில் சங்க இலக்கியத்தையும் வடமொழி இலக்கியத்தையும் இலக்கியக் கொள்கை அடிப்படையில் ஒப்பிடுகிறார். அலங்காரக்கோட்பாடு, நோக்கும் அவுசித்தியமும், நாடகவழக்கும் வக்கிரோத்தியும், இரசக்கோட்பாடு, தொல்காப்பியரின் மெய்ப்பாட்டியலும் பரதமுனிவரின் இரசக் கோட்பாடும், நெறி (ரீதி)க் கோட்பாடு, தொனிக் கோட்பாடு ஆகிய தலைப்புக்களில் இருமொழி இலக்கியக் கொள்கைகளை ஒப்பிடுகிறார். மேலும் தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியக் கொள்கைகளை வரையறுக்க முயற்சி செய்கிறார். தமிழ் இலக்கியக்

கோட்பாடுகளாக, முன்னம், மரபு, உவமை அல்லது அணி, உள்ளுறை, இறைச்சி, மெய்ப்பாடு, வண்ணம், நோக்கு, வனப்பு, யாப்பு ஆகியவற்றை முன்வைத்துச் சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் விளக்குகிறார். [94]

### 6.6.3. பெ.சு. மணி

பெ.சு. மணி, 'சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்' (1977) என்ற தலைப்பில் ஆராய்ந்திருக்கிறார். இந்நூலில் அவர், வேதகாலப் பெண்பாற் கவிஞர்கள், பிராகிருத மொழிப் பெண்பாற் கவிஞர்கள், ஈப்ரு மொழி, கிரேக்க மொழி, இலத்தீன் மொழி, சீன மொழி, தேரிகாதா பௌத்த பிக்குணிகள் ஆகியோர் பாடல்களோடு சங்க காலப் பெண்பாற் கவிஞர்களின் பாடல்களையும் ஔவையாரின் பாடல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளார். பலமொழிக் கவிஞர்களின் கவிதைகளிலுள்ள பொதுத்தன்மைகளைக் குறிப்பிட்டு, ஔவையார் பாடல்கள் பொதுத்தன்மையோடு சிறப்புத்தன்மையும் கொண்டு விளங்குவதாகக் குறிப்பிடுகிறார். சான்றாக,

> "சாப்போவோடு, ஔவையாரை ஒப்பிட்ட வகையில், ஔவையார் சாப்போவையும் விஞ்சி நிற்பது புலனாகுகின்றது. சாப்போ பாடிய காதலில் ஆண்-பெண் காதல் உறவு கூறப்படவில்லை. சாப்போ வீரத்தைப் பற்றிப் பாட முன்வரவில்லை. ஔவையார் வீரம், காதல் இரண்டையும் அதன் எல்லைகளைத் தொட்டுக்காட்டும் வண்ணம் பாடியிருக்கிறார். சங்கத் தமிழ் இலக்கிய மரபு முற்றும் பொலிவுறப் பாடி, உலக இலக்கிய மரபிற்குப் புதிய நன்கொடையை அளித்தவர் ஔவையார்" [95]

என்று எழுதுகிறார். இவ்வாறு ஒப்பிலக்கிய அடிப்படையில் சங்க கால ஔவையாரின் பாடற்சிறப்பை வெளிக்கொணர்கிறார் எனலாம்.

இராம. குருநாதன், 'சங்கப் பாட்டும் ஜப்பானியக் கவிதையும்' (1986) குறித்து ஆய்ந்துள்ளார். சங்க இலக்கியத் தொகுதியை ஜப்பானிய மன்யோசி தொகை நூலுடன் பொருத்திப் பார்க்கிறார். அவருடைய முடிவுகளில் குறிப்பிடத்தக்கன,

'1. சங்க இலக்கியப் பாடல்கள் பல்வேறு பிரிவினரால் பாடப்பட்டதுபோல மன்யோசிப் பாடல்களும் சமூகத்தின் பல்வேறு பிரிவினரால் பாடப்பட்டது.

2. சங்க இலக்கிய யாப்பில் ஆசிரியம் தலைமை ஓச்சியது போல மன்யோசி காலத்தில் 'தங்கா' என்னும் யாப்பு வடிவமே தொடக்கக் காலக் கவி மரபில் தலைமை ஓச்சியது.

3. உள்ளத்து உணர்வுகளைக் காட்ட, கருப்பொருள் சூழ்நிலைகளைப் பின்னணியாகக் கொண்டதைச் சங்கப் புலவர்களிடையே காண்கிறோம். மன்யோசி கவிஞர்களும் மனித மன உணர்ச்சியை வெளிக்காட்ட இயற்கையை நாடினர்.

4. சங்க அகப்பாடல்களில் குறியீட்டு உத்தியும் உள்ளுறை இறைச்சி போன்றவையும் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. ஜப்பானிய அகப்பாடல்களிலும் உய்த்துணர் சொல், மையச்சொல் ஆகியன இடம் பெறுகின்றன.

5. சங்க அகப்பாடல், மக்கள் பெயரைச் சுட்டாத மரபுடையது. சங்கப் புலவர்கள் பாடல்களைத் தற்சாரா நிலையில் பாடியுள்ளனர். ஜப்பானியக் காதற் பாடல்கள் தற்சார்ந்த நிலையில் சொந்த மனவுணர்ச்சியைக் காட்டுகின்றன.

6. காதல் இயல்பைத் தலைவனைக் காட்டிலும் தலைவி அல்லது தோழி எடுத்துரைப்பதைச் சங்க நூல்கள் காட்டும். ஜப்பானிய அகப்பாடல் மரபும் அவ்வாறே. இது உலகப் பொது மரபாக இருக்கலாம்'[96] என்பனவாகும்.

### 6.6.4. சிலம்பு நா. செல்வராசு

சிலம்பு நா. செல்வராசு, இரிக் வேதமும் சங்க இலக்கியமும் சுட்டும் வீரயுகத்தை ஒப்பிட்டுள்ளார். இரிக் வேதம் போலவே சங்க இலக்கியமும் நான்கு கட்டங்களைக் கடந்து வந்திருக்கவேண்டும் என்கிறார். அதாவது, சங்க இலக்கியக்கரு தோன்றிய காலம், பாடப்பெற்ற காலம், எழுதப்பெற்ற காலம், தொகுக்கப்பெற்ற காலம், ஆகியவற்றைக் கடந்தே இன்றைய வடிவநிலையை எய்தியிருக்க வேண்டும் என்கிறார்.

மேலும், சங்க இலக்கியத்தின் வெட்சித்திணைப் பாடல்கள், இரிக் வேதத்தின் பல பாடல்கள் ஆகியவை தரும் வீரயுகச் செய்திகள் அடிப்படையில் ஒத்துப் போகின்றன என்கிறார். அவர் கூறும் செய்திகளாவன,

"1. அளவுக்கு அதிகமாக மது அருந்துதல், ஊன் உண்ணுதல்

2. பசுக்களைக் காத்தல், கவர்தல்

3. இனக்குழு போர் முறைகள்

4. தலைவனைப் பலவாறாக வாழ்த்துதல், பரிசுகள் பெறுதல்"[7] என்பனவாகும்.

செ. சாரதாம்பாள், சங்க கிரேக்க வீரயுகப் பாடல்களில் இடம்பெறும் வஞ்சினம் குறித்து ஆராய்ந்துள்ளார். அவருடைய கருத்துக்களில் குறிப்பிடத்தக்கன,

"1.வஞ்சினம் கூறுதல் என்பது, வீரயுகத்தின் வீரர்களுக்கே உரிய அடிப்படைப் பண்பாக உள்ளது.

2. சூழல் சார்ந்த வஞ்சினத்தின் நோக்கம், பழிக்குப்பழி வாங்குதலாகும். இந்நோக்கம் பாத்திரம் சார்ந்துள்ளது.

3.வஞ்சினப் பாத்திரங்கள் வீரயுகப் பாடல்களில் உயர் குடிமக்களாக உள்ளனர்.

4.வஞ்சினத்தின் பாடுபொருளாவது உயிர் இழப்பு போன்ற ஏழுபொருண்மைக் கூறுகளை உள்ளடக்கி உள்ளது.

5. மாந்தர்களின் செயல்கள் தெய்வத்தின் ஆற்றலுடன் இணைத்துக்கூறும் மரபுள்ளது" [8] என்பனவாகும்.

**6.6.5. நா.சுப்பிரமணியன்**

நா.சுப்பிரமணியன், சங்க இலக்கியமும் காவியமரபும் குறித்து ஒப்பிட்டுள்ளார். சங்க கால அகத்திணை, புறத்திணை மரபுகள் காவியங்களில் உள்வாங்கப்பட்டுள்ளதாகக் கூறுகிறார். உதாரணமாக முற்காலக் காவியமானச் சிலம்பில் இடம்பெறும் கானல்வரி, வஞ்சிக்காண்டத்தில் அமைந்த காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல் என்பன சங்க இலக்கியமரபின் தொடர்ச்சியாகும் என்கிறார்.

அதேபோல், பிற்காலக் காவிய மரபில் இடம்பெறும் நாட்டுவளம், நகர்வளம் என்பவை பண்டைத் தமிழ் மரபில் முதற்பொருள் பற்றிப் பேசி வந்ததன் தொடர்ச்சியாகும் என்றும், திருமணத்துக்கு முற்பட்ட காதலை முதன்மைப்படுத்தி அமையும் கதைக் கட்டமைப்புச் சங்க கால அன்பின் ஐந்திணை மரபின் தொடர்ச்சியாகும் என்றும் குறிப்பிடுகிறார். [99]

சு. நிர்மலாதேவி, சங்க அக இலக்கியத் தலைவனின் தோழனாக வரும் பாங்கன் பாத்திரப் படைப்பையும், கதைப்பாடல் இலக்கியத் தலைவனின் காதல் வாழ்க்கைத் தோழனாக வரும் சிறுக்கன் பாத்திரப் படைப்பையும் ஒப்பாய்வு செய்துள்ளார். இதன் மூலம், 'கதைப்பாடல் இலக்கியச் சிறுக்கனைக் கொண்டு சங்க இலக்கியப் பாங்கனை மீட்டுருவாக்கம் செய்யலாம். கதைப்பாடற் சிறுக்கனின் பாத்திரப்படைப்பு சிறந்த வளர்ச்சியடைந்த பாங்கனின் பாத்திரப்படைப்பாகத் திகழ்கிறது' என்கிறார். மேலும் இப்பாத்திரங்களின் ஒப்புமைக் கூறுகளைக் குறிக்கும்போது, சங்க இலக்கியப் பாங்கனுக்கு எவ்வாறு பெயர் சுட்டப்பெறவில்லையோ அதே போன்று, கதைப்பாடல் இலக்கியச் சிறுக்கனுக்கும் பெயர் காணப்படவில்லை என்றும், சங்க அக இலக்கியங்களில் மட்டும் பாங்கன் பாத்திரம் வருவது போல சமூகக் காதற் பொருண்மை கொண்ட கதைப் பாடல்களில் மட்டுமே சிறுக்கன் பாத்திரம் வருகிறது என்றும் குறிப்பிடுகிறார். [100]

சங்க இலக்கியம் குறித்த ஒப்பிலக்கிய ஆய்வுகளைக் காணும்போது, பிறமொழி இலக்கியங்களுடன் கால அடிப்படையிலும், கருத்து அடிப்படையிலும், இலக்கியக் கோட்பாட்டு அடிப்படையிலும், புலவர்கள் அடிப்படையிலும் ஒப்புமை செய்யப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. அதேபோல் ஒரே மொழிக்குள் கருத்து அடிப்படையிலும், பாத்திரப்படைப்பு அடிப்படையிலும் ஒப்பிடப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இன்னும் இலக்கியத்தின் பல்வேறு நுண்கூறுகள் வாயிலாக ஒப்பிடவும் வாய்ப்பு இருக்கிறது என்பதையும் தெளிய முடிகிறது.

## 6.7. கருத்துரை

1. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரால் வளர்த்தெடுக்கப்பட்ட சங்க இலக்கிய ஆய்வுகள், புதுத் திறனாய்வு நூல்களின் வருகையால் கூர்மையடைந்தன.

2. சங்க இலக்கியப் பதிப்பின்போது மூலப்பாட ஆய்வுகள் கவனமாகச் செய்யப்பட்டுள்ளன. இருந்த போதிலும், தமிழ்ச் சூழலில் மூலப்பாட ஆய்வைத் தனித்துறையாக வளர்த்தெடுத்தல் தமிழாய்வுக்கு வளம் சேர்க்கும் எனலாம்.

3. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரால் சங்க இலக்கியங்களுக்கு புதிய உரைகள் எழுதப்பட்டன. இவ்வுரைகள் இடைகால உரையாசிரியர்களின் உரைகள் போன்றே இருந்தன. எனினும், சமகாலத் தேவையை நிறைவுசெய்யும் போக்கில் இவ்வுரைகள் தொழிற்பட்டன.

4. கல்வியாளர்கள் தாங்கள் பெற்ற ஆங்கில அறிவின் காரணமாகச் சங்க இலக்கிய ஆய்வைச் செழுமைப்படுத்தினர். இவர்களுடைய முடிவுகள், தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் ஆரம்ப நாட்களில் உணர்வுப் பூர்வமாகக் கொடுத்த முடிவுகளின் தெளிவுக்கு உதவின.

5. மார்க்சிய ஆய்வாளர்கள் சங்க இலக்கியத்துக்கு வர்க்க அடிப்படையில் விளக்கம் அளித்தனர். சங்க காலம் ஒரு பொற்காலம் என்று நிறுவிய தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் ஆய்வுகளுக்கு நேர்மாறாக இவை அமைந்தன.

6. இவ்வாறு ஆராய்ந்ததன் மூலம்,'எவ்வளவு தொன்மையான இலக்கியங்களையும் கூடத் தன் காலத் தேவைக்குத் தகுந்தவாறு வாசித்து பொருள்காணமுடியும். அவ்வாறு காண்பதன் மூலம் அந்த இலக்கியத்திற்கு நிரந்தரத் தன்மையை வழங்க முடியும்' என்ற ஆய்வேட்டின் இரண்டாவது கருதுகோள் வலிமை பெறுகிறது எனலாம். அடுத்த இயலில், சங்க இலக்கியம் பற்றி நூல்களாக வெளிவந்துள்ள முனைவர்ப்பட்ட ஆய்வேடுகளின் தனிநிலைப் போக்குகளைத் தொகுத்துத் தருவதற்கான முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

## அடிக்குறிப்புக்கள்

1. செ.வை.சண்முகம், மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும், ப.134
2. க. பஞ்சாங்கம், தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு, ப.51
3. இல. குளோறியா சுந்தரமதி, டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள், ப.3
4. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), பத்துப்பாட்டு மூலம், முகவுரை, ப. VI
5. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), புறநானூறு மூலமும் உரையும், முகவுரை, ப.எ
6. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், மூன்றாம் பகுப்பின் முகவுரை, ப. XI
7. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), புறநானூறு முகவுரை
8. மேற்கோள், மு.வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.707
9. மேலது., ப.707
10. மேற்கோள்., க. பஞ்சாங்கம், மு.நூ., ப.49
11. மேற்கோள், மு.வை. அரவிந்தன், மு.நூ., ப.710
12. மேலது., பக்.712, 713
13. மேலது., ப.713
14. அனந்தராமையர், (பதி.ஆ.), கலித்தொகை (பாலைக்கலி, குறிஞ்சிக்கலி), ப. க0
15. மேலது., பக். கூ, க0
16. சங்க இலக்கியம் சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு, முகவுரை, பக். IX
17. மேலது., ப.XII
18. க. பஞ்சாங்கம், மு.நூ., ப.52
19. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், முகவுரை, ப.2
20. மேலது., ப.4
21. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), புறநானூறு மூலமும் உரையும், ப.கூ
22. உ.வே. சாமிநாதையர், (பதி.ஆ.), ஐங்குறுநூறு முகவுரை, ப. 3
23. இல. குளோறியா சுந்தரமதி, மு.நூ., ப.35
24. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை, ப.நடஎ
25. ரா. இராகவையங்கார், குறுந்தொகை விளக்கம், ப.48
26. கா. கோவிந்தன், முல்லை, முன்னுரை, ப.சூ
27. க. பஞ்சாங்கம், மு.நூ., ப.53
28. மு. வரதராசனார், மணல் வீடு, ப.3

29. மு. வரதராசனார், முல்லைத்திணை, பக்.11,12

30. மு. வரதராசனார், கொங்குதேர் வாழ்க்கை, ப.22

31. ரா. இராகவையங்கார், வஞ்சிமாநகர், ப. 165

32. ரா. இராகவையங்கார், பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், ப.49

33. ரா. இராகவையங்கார், தித்தன், பக். 12, 13

34. ரா. இராகவையங்கார், கோசர், இ.செ. வரதராஜையர், முன்னுரை, ப.இ.

35. எஸ். வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், ப.28

36. மேலது., பக்.28,29

37. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், ப.141

38. மேலது., ப. 193

39. மா. இராசமாணிக்கனார், தமிழ் இலக்கண இலக்கியக் கால ஆராய்ச்சி, ப.48

40. மயிலை. சீனி. வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப.2

41. கா. கோவிந்தன், பண்டைத் தமிழர் போர்நெறி, ப.3

42. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு

43. தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும், பக். 104, 129, 130

44. அ. சிதம்பரனார், தமிழ்ச் சங்கங்களின் வரலாறு, ப.6

45. அ. சிதம்பரனார், சேரர் வரலாறு

46. சாமி. சிதம்பரனார், சங்கப் புலவர் சன்மார்க்கம், ப.6

47. ச. சாம்பசிவம், தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை

48. ச. மெய்யப்பன், கபிலர்

49. சு. குப்புசாமி, மலையமான்கள், ப.21

50. சோ.ந. கந்தசாமி, பரிபாடலின் காலம், ப.106

51. இரா. சாரங்கபாணி, பரிபாடல் திறன், ப.26

52. ஆதி. பாலசுந்தரன், சங்க இலக்கியத்தில் சமயக் கருத்துக்கள், ப.27

53. மு.பெரி.மு. இராமசாமி, நக்கீரர் ஓர் ஆய்வு

54. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் வாகைத்திணை

55. சி. கலைமகள், அகநானூற்றில் பாலைத்திணைப் பாடல்கள் ஓர் ஆய்வு, ப.75

56. கோ. கண்ணன், பண்டைத் தமிழரின் ஒலி உணர்வும் இசை உணர்வும், ப.XIX

57. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை, ப.29

58. மேலது., ப.29.

59. மேற்கோள், க. பஞ்சாங்கம், மு.நூ., ப.75

60. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை, ப.ருஎ

61. மேலது., ப.ருஎ

62. கா. சிவத்தம்பி, பத்துப்பாட்டின் கவிதையியல், ந.கடிகாசலம், ச.சிவகாமி, (பதி.ஆசி.), சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு, சிந்தனைப் பின்புல மதிப்பீடு, பக்.71-84

63. ச. அகத்தியலிங்கம், உள்ளடக்கமும் உருவ ஆக்கமும், மேலது., ப.2

64. இல. குளோறியா சுந்தரமதி, திணைதுறை வரையறையும் பாடலின் அமைப்புத்தளமும், மேலது., ப.30

65. தி. செல்வம், அழகியல் கோட்பாடுகள், மேலது., பக். 61-70

66. வி.சி. சசிவல்லி, அழகியல் சிந்தனை, மேலது., ப.51

67. இரா. தமிழரசி, உத்திகள், மேலது., ப.34

68. அம்மன்கிளி முருகதாஸ், எடுத்துரைப்பு முறைகள், மேலது., ப.34

69. தி.வே. கோபாலையர், செய்யுளியலும் யாப்பும், மேலது., பக்.103-114

70. அ. சண்முகதாஸ், பாடல்மரபு, மேலது., பக்115-126

71. சோ.ந.கந்தசாமி, யாப்பு, மேலது., பக்.127-152

72. இரா.இளங்குமரன், யாப்பியல் கொடை, மேலது., பக்.153-160

73. க. பஞ்சாங்கம், மு.நூ. பக்.90-91

74. நா.சுப்பிரமணியன், தமிழாய்வியலில் கலாநிதி க. கைலாசபதி, ப.23

75. நா. வானமாமலை, தமிழர் வரலாறும் பண்பாடும், ப.9

76. மேலது., பக்.81-90

77. இராம. சுந்தரம், ஆராய்ச்சி, (தொகு.), முற்போக்கு இலக்கியத் திறன், ப.83

78. க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.50

79. மேலது., பக்.34-50

80. கோ. கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப.43

81. மேலது., ப.92

82. செ.வை. சண்முகம், மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும், பக்.78,88,104,209

83. சிலம்பு நா. செல்வராசு, சங்க இலக்கியம் சமூக மானுடவியல் ஆய்வுக் கட்டுரைகள், ப.40

84. ராஜ். கௌதமன், அறம்/அதிகாரம், ப.7

85. க. பூரணிசந்திரன், பின் நவீனத்துவ நோக்கில் முன் இலக்கியங்கள், தி.சு.நடராசன், அ. ராமசாமி, (தொகு.ஆசி.), பின்னை நவீனத்துவம் கோட்பாடுகளும் தமிழ்ச்சூழலும், ப.113

86. க.ப. அறவாணன், சொரோக்கின் சமூகவியல் கோட்பாடும் பண்டைத்தமிழ் முப்பொருள் கோட்பாடும், ந.கடிகாசலம், ச.சிவகாமி, (பதி.ஆசி.), மு.நூ., பக்.283-290

87. ஞானி, சங்க இலக்கியத்தில் சமுதாயப் பிரச்சினைகள், ஞானி, (தொகு.ஆ.), மார்க்சியத்தின் புதிய பரிமாணங்கள், ப. 110

88. மு. பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் மெய்ப்பாட்டு இயக்கம், ப. 118

89. நா. சுப்பிரமணியன், தமிழாய்வியலில் கலாநிதி க. கைலாசபதி, ப. 23

90. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை, ப.25

91. K. Kailasapathy, Tamil Heroic Poetry, PP. 26, 27, 31-34, 135-186

92. நா. சுப்பிரமணியன், மு.நூ., ப. 27

93. கதிர். மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம்

94. இரா. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு

95. பெ.சு. மணி, சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப. 379

96. இராம. குருநாதன், சங்கப் பாட்டும் ஜப்பானியக் கவிதையும், பக். 22, 57, 58, 98, 99

97. சிலம்பு நா. செல்வராசு, மு.நூ., ப.84

98. செ. சாரதாம்பாள், சங்க கிரேக்க வீரயுகப் பாடல்களில் வஞ்சினம், ந.கடிகாசலம், ச.சிவகாமி, (பதி.ஆசி.), மு.நூ., ப.371

99. நா. சுப்பிரமணியன், சங்க இலக்கியமும் காவிய மரபும், மேலது., பக். 333-336

100. கு. நிர்மலாதேவி, பாங்கனும் சிறுக்கனும், மேலது., பக். 337-346

# சங்க இலக்கிய ஆய்வேடுகள்

7.0. பல்கலைக் கழகங்களின் பெருக்கத்தினாலும், உயர்கல்விப் படிப்பின் வளர்ச்சியினாலும், பல்கலைக் கழக நிதிக்குழு அளிக்கும் நிதி உதவியினாலும் நெறிமுறைகளுக்கு உட்பட்ட ஆய்வேடுகள் பெருகிவருகின்றன. "இலக்கிய முதுவர், ஆய்வியல் நிறைஞர், முனைவர் ஆகிய பட்டங்களுக்கெனத் தமிழில் ஏறத்தாழ 2000 ஆய்வேடுகள் வெளிவந்துள்ளன. சங்க இலக்கியம் தொடர்பாக மட்டும் 150 ஆய்வேடுகள் வெளிவந்துள்ளதாகக் குறிப்பிடுவர் இராமசுந்தரம்.[1] இங்கு, நூல்களாக வெளிவந்துள்ள சங்க இலக்கியம் தொடர்பான முனைவர்ப் பட்ட ஆய்வேடுகள் மட்டும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இவற்றின் ஆய்வுச் செல்நெறியை விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. அதற்கு உதவும் வகையில், மொழியியல் அணுகுமுறை, ஒப்பிலக்கிய அணுகுமுறை, சமூகவியல் அணுகுமுறை, கலைநுட்ப அணுகுமுறை தொல்காப்பியர் நெறிப்பட்ட அணுகுமுறை என்ற உட்தலைப்புக்களாகப் பகுத்துக்கொள்ளப்படுகிறது.

## 7.1 மொழியியல் அணுகுமுறை

மொழியியல் அடிப்படையில் இலக்கியத்தை அணுகும் இம்முறையில், 'சங்காலத் தமிழ்' குறித்துத் தெ.பொ. மீனாட்சிசுந்தரம் ஆராய்ந்துள்ளார். ஒலியனியல், உருபொலியனியல், உருபனியல், தொடரியல் முதலான மொழியியல் கூறுகளைக் கொண்டு சங்க இலக்கிய மொழிநடையை ஆராய்கிறார். இம்முறையில் தொல்காப்பியத் தமிழுக்கும் சங்கத் தமிழுக்கும் பெருமளவு வேறுபாடு இல்லை என்கிறார். மேலும் சங்க இலக்கியத்தைப் பத்துப்பாட்டு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு என வரிசைப்படுத்துகிறார். திருக்குறளுக்குப் பிற்பட்டதாகப் பரிபாடல், கலித்தொகையைக் குறிப்பிடுகிறார்.[2]

1960 முதல் தமிழகத்தில் மொழியியல் கல்வி அறிமுகமானதால் இம்முறையிலான ஆய்வுகள் வெளிவரத் தொடங்கின. "1962-இல் வ.அய்.சுப்பிரமணியம் உருவாக்கிய புறநானூற்றுச் சொல்லடைவு அச்சில் வந்தது. இதன் தொடர்ச்சியாய்,

1962 - பதிற்றுப்பத்து, எஸ். அகத்தியலிங்கம்

1962 - பரிபாடல், சோ.ந. கந்தசாமி (எம். லிட்)

1964 - நற்றிணை, ஏ. காமாட்சிநாதன்

1964 - பத்துப்பாட்டு, இராம. சுந்தரம்

1970 - கலித்தொகை, டி. ஆண்டியப்பிள்ளை

1972 - அகநானூறு, ச.வே. சுப்பிரமணியன்

1974 - குறுந்தொகை, எம். இளையபெருமாள்

1975 - ஐங்குறுநூறு, எஸ்.ஆர். கிருஷ்ணம்மாள்

எனும் சொற்பொருள் அடைவுகள் உருவாக்கப்பட்டுள்ளன".[3]

1964-67 காலக் கட்டத்தில், எஸ்.வி. இராமசாமி அய்யர், சி.ஆர். சங்கரன், ரா.பி. சேதுப்பிள்ளை, வி.ஐ. சுப்பிரமணியம், ரா. சீனிவாசன், பி.எஸ். இந்திரா முதலான பல அறிஞர்கள் மொழியியல் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆய்ந்து கட்டுரைகளை வெளியிட்டுள்ளனர். 'Tamil Culture' Journal of the Acadamy of Tamil Culture என்னும் ஆய்விதழில் இவர்களின் ஆய்வுக்கட்டுரைகள் தொடர்ந்து வெளிவந்தன.[4]

மொழியியல் நோக்கில் சங்க இலக்கியத்தை மிகுதியான அளவில் ஆய்வுக்கு உட்படுத்தியவர் ச.அகத்தியலிங்கம் ஆவார். இவர் 'சங்கத்தமிழ்' என்ற நூல்வரிசையில் சங்க இலக்கியத்தை மொழியியல் அடிப்படையில் விரிவாக ஆய்வுக்கு உட்படுத்துகிறார். இந்நூல், கால நிர்ணயம், தமிழை உலக மொழிகளோடு ஒப்பிடுதல், பண்டைத் தமிழுக்கும் இடைக்காலத் தமிழுக்கும் இடையேயுள்ள மொழியியல் வேறுபாடுகள், பண்டைத் தமிழ் நூல்களில் காணப்படும் தன்மை, முன்னிலை விகுதிகள், படர்க்கை விகுதிகள், வினையெச்சங்களின் பல்வேறு வகைகள், ஆகியவற்றை விரிவாக ஆராய்கிறது. அதன் காரணமாகத் தமிழ் மொழியின் தொன்மையையும், உலக மொழிகளில் தமிழ் தனிச்சிறப்புடையது என்பதையும் எடுத்துரைக்கிறது. பழந்தமிழ் இலக்கியங்களுக்கு ஒரு சேர நல்லதொரு இலக்கணம்

வேண்டும் என்ற எண்ணத்தில் இந்நூற்கள் எழுந்ததாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[5]

இவ்வாறு மொழியியல் நோக்கில் சங்க இலக்கிய ஆய்வுகள் நடைபெற்றபோதும் முனைவர்ப் பட்ட ஆய்வேடுகள் என்ற நிலையில் அருகியே காணப்படுகிறது. இவ்வகையில் பா.வீரப்பன் எழுதிய, 'சங்க இலக்கிய நடை' என்ற ஆய்வேடு குறிப்பிடத் தக்கதாகும். இவர், மேலைநாட்டு நடையியல் பின்னணியில் வடமொழி நடையியல் கருத்துக்களையும் கருத்தில் கொண்டு, தொல்காப்பியர் குறிப்பிடும் உறுப்புக்களுடன் பொருத்தி நடையியல் ஒன்றைப் பின்காணும் வகையில் பகுத்துக் கொள்கிறார்.

'1. ஒலிக்கூறுகள் : யாப்பும் ஒலியும், தொடைக்கூறுகள், ஓசை, வண்ணம், ஒலிக்குறிப்புச் சொற்கள்.

2. சொற்கூறுகள் : சங்க இலக்கியச் சொற்கள், வடமொழிச் சொற்கள், ஆகுபெயர் போன்றன, திருப்புரைச் சொற்கள், செய்யுள் இலக்கணக் கூறுகளின் சிறப்புப் பயன்பாடுகள், புணர்ச்சி.

3. தொடர்க்கூறுகள் : தொடர்நீளம், தொடர் அமைப்பு, உருவகமும் உருவக நிலையும்.' [6]

இக்கூறுகளைச் சங்க இலக்கியத்தின் பத்துப்பாட்டை எடுத்துக் கொண்டு பொருத்திப்பார்த்துச் சங்க இலக்கிய நடையை மதிப்பிடுகிறார். பத்துப்பாட்டு, தோல் எனும் வனப்பினை உடையதாகவும், விவரிப்பு நடையாகவும் (Descriptive Style) அமைந்துள்ளதாகக் கூறுகிறார்.[7]

மொழியியலின் பல்வேறு கூறுகள் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்தல் சங்க இலக்கிய ஆய்வுச் செழுமைக்கு உதவும் எனலாம்.

### 7.2. ஒப்பிலக்கிய அணுகுமுறை

ஒப்பிலக்கிய ஆய்வுகள் குறித்து ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது. ஆய்வேடுகள் என்ற நிலையில் இவ்வகையில் முதல் ஆய்வேடாகத் 'தமிழில் வீரநிலைக் காலச் செய்யுள்' (1968), (Tamil heroic Poetry) அமைகிறது. மார்க்சிய நோக்கில் அமைந்த ஒப்பிலக்கிய ஆய்வாக இது விளங்குகிறது. சி.எம்.பௌரா, சாட்விக் தம்பதியர்,

மில்மன்பரி ஆகிய மேனாட்டு ஆய்வாளர்களின் கோட்பாடுகள் கைலாசபதியை வழிநடத்தின எனலாம். இவ்வாய்வில், சங்கப் பாடல்களைக் கிரேக்க வீரநிலைக்கால இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்துள்ளார். இவர் இவ்வாய்வின் முடிவாகச் சங்கப் பாடல்கள் எழுந்த காலத்தை, 'வீரயுகம்' என்றும், சங்கப் பாடல்களை 'வாய்மொழிப் பாடல்கள்' என்றும் கருதுகிறார். [8] இவ்வாய்வு தமிழாய்வாளர்களிடம் மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. இவருடைய கருத்துக்கு உடன்பட்டும் எதிராகவும் எனப் பின்னர் ஆய்வாளர்கள் கருத்துக்களை வெளியிட்டனர்.

கு.வெ. பாலசுப்பிரமணியம், கைலாசபதியின் கருத்தை மறுத்து, வாய்மொழிப்பாடற் காலத்திலிருந்து நெடுந்தொலைவு வந்தன சங்கப் பாடல்கள் எனக் குறிப்பிடுகின்றார்.[9] நா. செயராமன், 'சங்க காலப் பாடாண்திணைப் பாடல்கள் வீரநிலைக் காலத்துக்கு உரியவை அல்ல; வீரநிலைக் காலத்துக்குப் பிற்பட்ட காலத்துக்கு உரியவை ஆகும்' என்று கூறிச் சங்க காலத்தைப் 'பாடாண் காலம்' என்றும், 'வீர நிலைக் காலத்தை அடுத்த காலம்' என்றும் கூறுவார்.[10] சங்க இலக்கியத்தை வாய்மொழிப் பாடல்களாக முழுவதும் ஏற்றுக்கொள்ளமுடியாது என்ற கருத்தை தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் [11], செ.வை. சண்முகம் [12], நா. சுப்பிரமணியன் [13] ஆகியோரும் ஏற்றுக்கொள்வர். வாய்மொழிப்பாடல்கள் எனச் சுவலபில், சிவத்தம்பி ஆகியோர் கூறுகின்றனர்.[14] தமிழண்ணல், சங்கப்பாடல்கள் வாய்மொழி இலக்கிய மரபிலிருந்து தோன்றிவளர்ந்து வரிவடிவம் பெற்றவை' என்கிறார். [15] இவ்வாறு, ஆய்வறிஞர் பலரின் கவனத்தை ஈர்த்த ஒரு ஆய்வேடாக கைலாசபதியின் ஆய்வேடு விளங்கியது குறிப்பிடத்தக்கதாகும்.

கைலாசபதியை ஆய்வுக்கு உட்படுத்திய நா.சுப்பிரமணியன், அவருடைய எழுத்தை,

> "(அ) தமிழரின் சமூகப் பண்பாட்டு வரலாற்றுச் செல்நெறியை அறிவு நிலைக்குப் பொருந்தும் வகையில் இனங்கண்டு காட்டுதல் (ஆ) கலை இலக்கியச் செயற்பாடுகளை மதிப்பிட்டு அவற்றை அடுத்த கட்டத்துக்கு வளர்த்தெடுத்தல்" [16]

என மதிப்பிடும் கருத்து ஏற்புடையதாகும். இவ்வாறு, சமூக வரலாற்றடிப்படையில் ஒப்பிலக்கிய ஆய்வுக்கு வழிகாட்டினார் கைலாசபதி.

கைலாசபதியைத் தொடர்ந்து, சங்கப் பாடல்களை மேலை நாட்டுக் கவிதைகளுடன் ஒப்பிட்டுப் பண்பாட்டு அடிப்படையில் ஆராய்ந்தவர் கதிர். மகாதேவன் ஆவார். இவருடைய ஆய்வேடு,'பழந்தமிழர் வீரப்பண்பாடு (ஒப்பிலக்கியக் கணிப்பு)' (1980) என்பதாகும். இவர் இவ்வாய்வேட்டில் கைலாசபதியின் கருத்துக்கு வலுசேர்ப்பதைக் காணமுடிகிறது. "சங்கப் பண்பாடு, உலக வீரநிலைக் காலப் பண்பாடுகளோடு ஒத்தது என்றும், ஏறத்தாழ அப்பண்பாடுகளின் காலத்திற்குச் சமகாலத்தது என்றும்" எடுத்துக்காட்டியுள்ளார். இவ்வாய்வேட்டில் இவர் கொண்ட முடிவுகளில் குறிப்பிடத்தக்கன வருமாறு,

"1. பழந்தமிழ்க் கவிதைகள் உண்மையான வாழ்க்கையின் (Realistic background) எதிரொலியாய் விளங்குகின்றன.

2. மேலைநாட்டினர் கொள்ளும் பண்பாட்டின் பொது விளக்கமும், வீரநிலைக்காலப் பண்பாட்டின் சிறப்பு விளக்கமும் பழந்தமிழர்தம் பெருமித வாழ்க்கைக்கு இலக்கணங்களாக அமைகின்றன.

3. மேலை நாட்டினர் காட்டும் வினைநவில் கவிதை (Poetry of action) வகைகளின் முழுமையைப் பழந்தமிழ்க் கவிதைகளில் காண முடிகிறது. அன்றியும் தமிழ்மரபுமுறை பிறழாமல், தமிழ்க் கவிதைகளை மேலைநாட்டுக் கவிதை வகைகளோடு ஒப்பிடமுடிகிறது.

4. உறுதியாக வீரநிலைக்கால வினைநவில் கவிதைகள் நாநவில் பெற்றி உடையன என்று தெளியலாம்.

5. சங்க இலக்கியத்தில், புறப்பொருள்பற்றிய பாடல்களைவிட அகப்பொருள் பற்றிப் பாடிய பாடல்கள் அதிகம். ஆனால் கூற்று வகையில் பார்க்கும்போது தலைவனைப் பற்றிப் பாடிய பாடல்களே மிகுதியாகும். தலைமைக்குத் தரும் சிறப்பு வீரநிலைக் காலப் பண்பாடாகும்"[17] என்பன.

இவ்வாய்வேடு ஒப்பிலக்கிய ஆய்வுக்கு மேலும் செழுமை கூட்டுகிறது எனலாம்

கி. பாண்டுரங்கன், 'பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும்' (1986) என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். 'பழந்தமிழகத்தின் நிலவியல் அமைப்பும், அவ்வமைப்புக் கேற்ற வகையில் அக்கால மன்னர்கள் வகுத்திருந்த போரியல் நெறிகளும், தற்காலப் போரியல் கொள்கைகளுடனும் நெறிகளுடனும் ஒத்திருக்கின்றன' என்ற முடிவைத் தருகிறார். இவ்வாய்வு, போரும் புவியியலும், தொல்காப்பியம் காட்டும் போரியல், பழந்தமிழ் இலக்கியங்களும் பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும், பண்டைத் தமிழர் பாதுகாப்புத்திறன் என்ற உட்தலைப்புக்களில் நிகழ்த்தப்பட்டுள்ளது. இவ்வாய்வேடு,

"1. பண்டைத்தமிழர் வீரச்சிறப்புடனும், போர்ச்சிறப்புடனும் வாழ்ந்ததற்கு நிலவியல் கூறுகள் வாய்ப்பாக அமைந்தன.

2. அன்றைய போரியலை முறையாகவும், உண்மையாகவும் கண்டறிய புறத்திணையியல் உதவுகிறது.

3. பண்டைத் தமிழர்கள் போர்மீது நாட்டம் செலுத்தினர் என்பது உண்மையேயெனினும் அவர்கள் போர் வெறியர் அல்லர்

4. போர்முறைக் கோட்பாடுகள், மரபுகள் ஆகியவை பழந்தமிழ்நாட்டில் சிறந்திருந்தது"[18] என்ற கருத்துக்களை முன்வைத்துச் செல்கிறது.

தங்கங் கந்தசாமி, 'போரியல் அன்றும் இன்றும்' (1987) என்ற தலைப்பில் பழந்தமிழர் போரியலை இக்காலப் போரியல் கூறுகளுடன் ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளார். பண்டைத் தமிழ் நூல்களிலுள்ள போர்த்தொடர்பான செய்திகளையெல்லாம் தொகுத்துக் கொடுத்திருக்கிறார். இவ்வாய்வேடு, போர்வகையும் தலைமையும், படைவகைகள், அரண் வகைகள், படைக்கலங்கள், பழமையும் புதுமையும், போரியல் நுட்பங்கள், போர் மரபுகள் என்ற உட்தலைப்புக்களில் ஆராய்கிறது. புறத்திணைகளை இக்காலச் சூழலுடன் ஒப்பிடும் போக்கு இங்குச் சுட்டத்தக்கதாகும்.

"பழந்தமிழர் குறிக்கும் புறத்திணைகள் அனைத்தும் இக்காலப் போரியல் செயல்கள் பலவற்றுடன் பெரிதும் ஒத்துள்ளன. வெட்சி ஒழுக்கம், ஒற்றறிதலுடனும், புலங்காண் குழு சிறப்புச் செயல் செய்தலுடனும் ஒத்தது; கரந்தை ஒழுக்கம், கொரில்லாப் போர் எனப்படும் பதுங்கிப்பாய்தல் போன்றது; வஞ்சி ஒழுக்கம் படைகள் பகைப்புலம் நோக்கி முன்னேறுவதை ஒக்கும்; தும்பை ஒழுக்கம் தாக்கல் ஒத்தது. உழிஞை நொச்சி ஒழுக்கங்கள், பாதுகாப்புப்பணி போன்றன. இக்காலப் போரியலில் இடம்பெறும், பின்வாங்கல், எனும் செயல், பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் தனி ஒழுக்கமாகக் குறிக்கப்படவில்லை. வாகைத்திணை போரின் வெளிப்பாடாக விளங்குவது; போரின் பின்விளைவான போரியல் தத்துவத்தைப் புகல்வது காஞ்சித்திணை எனக்கொள்ளலாம். போரால் புலப்பட்டுத் தோன்றும் ஆள்வினைச் செயல்கள், நல்லொழுக்கங்கள், நடைமுறைகள் ஆகியவற்றை உள்ளடக்கியது பாடாண்திணை எனலாம்."[19]

இவ்வாறான விளக்கங்கள் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் தாக்கத்தை நினைவுபடுத்துகின்றன. தம்மேம்பாட்டுக் கொள்கை இங்கு எதிரொலிப்பதைக் காணலாம். கைலாசபதியின் எழுத்தில் மார்க்சிய அரசியல் இயங்குவதையும் அறியலாம். ஒப்பிலக்கியக் கொள்கைகளின் அடிப்படையில் சங்க இலக்கியத்தை மேலும் பல ஆய்வுகளுக்கு உட்படுத்தும் போது இன்னும் பல புதிய விளக்கங்கள் வெளிப்பட வாய்ப்பிருக்கிறது எனலாம்.

### 7.3. சமூகவியல் அணுகுமுறை

சமூகவியல் ஆய்வுகள் குறித்து ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. சமூகவியல் அணுகுமுறையிலான ஆய்வேடாகக் க. கைலாசபதியின், 'தமிழ் வீரநிலைக் காலச் செய்யுள்' (1968) அமைந்துள்ளது. இவ்வாய்வேடு குறித்து ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. இனி, ஆய்வேடு என்ற நிலையில் இப்பொருளோடு தொடர்புடைய ஆய்வுகள் குறித்து இங்கு விளக்க முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

நா. ஆறுமுகம், 'கலித்தொகை ஓர் ஆழ்வாய்வு' (1985) என்னும் தலைப்பில் கலித்தொகையை ஆராய்ந்துள்ளார். இவ்வாய்வேடு, முறைவைப்பு, முதலும் கருவும், காதல் வாழ்வு, சமுதாய வாழ்வு, ஏறுதழுவல், அறக்கருத்துகள், உவமைநலம் என்ற உட்தலைப்புக்களில் கலித்தொகைப் பாடல்களை ஆராய்கிறது. மேலும் இவ்வாய்வு,

"1. கலித்தொகையில் பாலைக்கலிப்பாடல்கள் மற்றக் கலிப்பாடல்களைவிடச் சுவையும் பயனும் நிரம்பியவை. வாழ்வியல் உண்மைகளையும் அறநெறி விளக்கங்களையும் கொண்டவை. அதனாலும் அவை முதலில் இடம் பெற்றிருக்கலாம்.

2. கைக்கிளை, பெருந்திணை ஆகிய காதல் ஒழுக்கங்களைக் கூறி உள்ளடக்கத்தில் புரட்சி செய்த கலித்தொகை உருவத்திலும்-அகநானூற்றைத் தவிர எந்த நூலும் முதலிற்கொள்ளாத பாலையை முதலிற்கொண்ட திணை வைப்பு முறையிலும் புரட்சிக் கோலத்தைக் கொண்டிலங்குகிறது.

3. இயற்கையின் எழிலை அதன் சுவைக்காகவே படைத்துக் காணும் பாங்கு கலித்தொகையில் காணப்படவில்லை. சில விடங்களில் அறக்கருத்துகளையும், வாழ்வியல் உண்மைகளையும் முதலும் கருவும் வெளிப்படுத்துகின்றன. மேலும் சில விடங்களில், சமூக இயல்புகளையும் வாழ்க்கை நெறிகளையும் எடுத்துக்காட்ட அவை பயன்படுத்தப்பட்டுள்ளன எனலாம்.

4. நீதி இலக்கியப் பண்புகள் கலித்தொகையில் அரும்பத் தொடங்கியுள்ளன எனலாம்". [20]

முதலான கருத்துக்களைக் குறிப்பிடுகிறது. கலித்தொகையை விளக்குதல் என்ற முறையில் இவ்வாய்வு அமைகிறது.

கு.வெ. பாலசுப்பிரமணியன், 'சங்க இலக்கியத்தில் புறப்பொருள்' (1986) குறித்து ஆராய்ந்துள்ளார். தமிழியல் பண்பாட்டு ஆய்வாக அமையும் இவ்வாய்வேடு, புறத்திணைத் தோற்றமும் வளர்ச்சியும், புறத்திணைப் போரியல், புறத்திணை அரசியல், புறத்திணைச் சமயவியல், புறத்திணை வாழ்வியல், புறப்பொருள் நூலியல், புறத்திணைப் புலவரியல் என்ற உட்தலைப்புக்களில் அமைந்துள்ளது. இந்த

ஆய்வேடு,

1. விதிகளுக்குட்பட்ட போர்முறைகள் கூறப்பெறுதல்
2. மறவுணர்வு மிக்க போர்த்துறையிலும் அறநெறிகள் காணப்படல்
3. சமய உணர்வும் சமயக்கருத்துக்களும் இடம்பெறுதல்
4. புரவலர்களைப் புலவர்கள் இடித்துரைத்து நெறிப்படுத்தலைச் சொல்லுதல்
5. வரலாற்றுக் கூறுகளைப் பெற்றிருத்தல்

ஆகிய காரணங்களைக் கொண்டு, 'சங்க காலம் வீரநிலைக் காலம் அன்று' எனக் கூறுகிறது. மேலும், மண்ணாசையினும் புகழ் விருப்பமே பல போர்களுக்கு அடிப்படை என்றும், மகள்மறுத்தல், மகட்பாற்காஞ்சி ஆகிய துறைக்குரிய பாடல்கள் உண்மையில் பெண் காரணமாக எழுந்த போர் குறிப்பன அல்ல என்றும், அவை சீறூர்த் தலைவரின் சிறப்பியல்புகளை எடுத்துரைக்கும் இலக்கியப் புனைவு நெறியிற் பிறந்தவை என்றும் கூறுகிறது. [21]

அரங்க, இராமலிங்கம்,'சங்க இலக்கியத்தில் வேந்தர்' (1987) என்னும் தலைப்பில் ஆராய்ந்துள்ளார். இவ்வாய்வேட்டில் சங்க இலக்கிய வேந்தர்களின் தொன்மை, அவர்களிடையே அமைந்திருந்த குடிப்பிரிவுகள், பெற்றிருந்த இடம், வேந்தருக்கும், புலவருக்கும் உள்ள தொடர்பு, புலவராக விளங்கிய வேந்தரின் புலமைத்திறன், வேந்தரின் போர்முறை, ஆட்சிமுறை ஆகியவற்றைச் சங்க இலக்கியத்தின் வாயிலாக விளக்குகிறார்.[22]

அ.முத்துசாமி, 'சங்க இலக்கியத்தில் ஆயர்' (1993) என்ற தலைப்பில், முல்லைநிலத்து ஆயர் பற்றிச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் கருத்துக்களை வகை தொகை செய்து விளக்குகிறார். குலப்பாகுபாடும் ஆயர் குலமும், ஆயர்குல ஆட்சியாளர்கள், ஆயர்குல அறிஞர்கள், ஆயர்தம் சமுதாய வளர்ச்சி, தெய்வ வழிபாடு ஆகிய உட்தலைப்புக்களில் ஆராய்கிறார். அழுந்தூர் வேள், அழும்பிள்வேள், ஆய் அண்டிரன் முதலான ஆயர் குல ஆட்சியாளர்கள் அறம்வழுவாத ஆட்சி நடத்தினர் என்றும், ஆயரின் தனிப்பட்ட விளையாட்டாகிய ஏறுதழுவல், மற்றும் கோனாட்சிமுறை ஆகியன தமிழ்ச்சமுதாயத்திற்கு ஆயர்களால் வழங்கப்பெற்ற

கொடைகளாகும் என்கிறார்.[23]

து.சிவராஜ், 'சங்க இலக்கியத்தில் உளவியல்' (1994) என்ற தலைப்பில் ஆராய்ந்திருக்கிறார். உளவியலின் ஒரு கொள்கையாகிய உளத்தற்காப்பு இயங்குமுறைகளின் பல்வேறு உத்திகள், சங்க இலக்கியத்தில் பயிலும்நிலை இவ்வாய்வேட்டில் இடம்பெறுகிறது. ஒடுக்கம், உணர்வொதுக்கம், பின்னோக்கம், தொடர்பறுதல், பகற்கனவு, பொதுமையாக்கம், துறப்பமைவு, ஈடுசெய்தல், தன்முகத்திருப்பம், நிலைமாற்றம், செயற்படுத்துதல், எதிர்வினை அமைப்பு, இடம்பெயர்தல், புறத்தோற்றம், அறிவார்ந்த விளக்கம், சரிசெய்தல், ஒன்றுதல், உயர்மடைமாற்றம், ஆகிய பதினெட்டுத் தற்காப்பு இயங்குமுறைகள் சங்க இலக்கியத்தில் செயல்படும் முறையும் வகையும் நிலையும் விளக்கப்பட்டுள்ளன.[24]

> 'கள், பொதுமகளிர் உறவு முதலியன சங்க இலக்கியத்தில் இடம்பெற்றிருந்தாலும், அவை வாழ்வின் சிக்கல்களிலிருந்து தப்பியோடி ஒளிந்துகொள்ளும் துறப்பமைவுப் புகலிடங்களாகக் காட்டப்படவில்லை' [25]

என்றும்,

> "உள்ளத்தின் நெருக்கடி உடல்நோயின் அறிகுறிகளாக நிலைமாறுதல் சங்க இலக்கியத்தில் மிகுதியாகவும், சிறப்பாகவும், கூறப்பட்டுள்ளன. பசலை, மேனிநலம் தொலைதல், உறக்கம் இன்மை, வெப்பப் பெருமூச்சு ஆகியன குறிப்பிடத்தக்கன'' [26] என்றும் இவ்வாய்வேடு குறிப்பிடுவது எண்ணத்தக்கதாகும்.

இவ்வாறு சங்க இலக்கியம் குறித்துப் பல்வேறு நிலைகளில் ஆராய்வது சங்க காலத்தை மேலும் விளங்கிக் கொள்ள வாய்ப்பாக அமையும் எனலாம்.

## 7.4. கலைநுட்ப அணுகுமுறை

இலக்கிய ஆக்கத்தில் தொழிற்படும் கலை நுட்பங்களே ஓர் இலக்கியத்தைத் தரமுடையதாக உருவாக்குகின்றது. எனவே, இலக்கியத்தின் உட்கூறுகள் பற்றிய ஆய்வுகளும் கவனத்தில் கொள்ளத்தக்கதாகும். அந்த வகையில், சங்க இலக்கியம்

தொடர்பாக நடைபெற்றுள்ள கலை நுட்ப ஆய்வேடுகளைச் சுட்டிக்காட்டும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

மு. வரதராசனார், 'பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை' (1955) என்னும் தலைப்பில், பண்டைத் தமிழர் வாழ்வில் இயற்கை பெற்றிருந்த இடம் குறித்து ஆராய்ந்துள்ளார். ஆய்வேடு, இயற்கை பெறுமிடம், பாடிய புலவர்கள், நிலம், வானம், பயிரினமும் உயிரினமும், உவமையில் இயற்கை, இயற்கையோடியைந்த வாழ்வு ஆகிய உட்தலைப்புக்களில் அமைந்துள்ளது. இவ்வாய்வேட்டில் மு.வ.,

"சங்கப்புலவர் காட்சி நலனுக்காக இயற்கையைக் காதலித்துப் பாடவில்லை. கவிதையாய் உருக்கொள்ளும் வாழ்க்கையின் ஒரு கூறாக இயற்கையைக் கண்டனர். மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் தெளிவுபடுத்துவதற்காகவே பண்டைத்தமிழ்ச் சான்றோர் இயற்கையைப் பயன்படுத்தினர்" [27] எனக் குறிப்பிடுகிறார்.

தனிநாயக அடிகளார், 'இயற்கைக் காட்சியும் கவிதையும்' (Landscape and Poetry) என்ற பொருளில் ஆய்வு நிகழ்த்தியுள்ளார். இவ்வாய்வு, பின்னணி, வாழ்வும் இயற்கையும், பாட்டுமரபுகள், வரலாற்றுப் புராணப்பொருள் அறநிலை, சமய அடிப்படை அறிநிலை, ஐவகைப் பகுப்பு, நில அமைப்பு, இயற்கைப்பா ஒப்பியல் ஆகிய எட்டு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஹம்போல்ட், இரசுகின், பியஸ், பால்கிரேவ் ஆகியோர் இயற்கையைப் பாடியதிலும் சங்கப் புலவர் பாடியதில் வேறுபட்ட நோக்கு உள்ளது என்றும், மனிதனோடு இயற்கை இவ்வளவு நெருக்கமாக உரைக்கப்பெறும் பண்பைத் தைபர், நைல், கங்கைக்கரை நாகரிகங்களில் காணமுடியாது என்றும் குறிப்பிடுகிறார்.[28]

வ.சுப. மாணிக்கம், 'தமிழ்க்காதல்' (1962) என்ற ஆய்வேட்டில் பழந்தமிழரின் காதல்நெறியைத் தமிழரின் தனிப்பெரும் நெறியாகக் காண்கிறார். தமிழ்க் காதல் குறித்த அவருடைய கருத்தாவது,

"நெறியாகவும் அளவாகவும் உரமாகவும் நாணயமாகவும் கற்பாகவும் காமக்கூறுகளைச் செவ்வனம் காட்டும் ஓர் உலக இலக்கியம் தமிழிற்றான் உண்டு.

அதுவே அகத்திணை. இத்திணைக்கல்வி பருவம் வந்துற்ற நம்பியர் நங்கையர்கட்கெல்லாம் வேண்டும், வேண்டும். அன்னவர் திருமணம் நறுமணம் பெறும். அக்காதலர்தம் வாழ்வில் உள்ளப்பூசல் இராது, ஊடற்பூசலே இருக்கும்; வெங்கட்சினம் இராது, செங்கட் சினமே இருக்கும்" [29] என்பதாகும்.

அகத்திணைக் கல்வியைப் பாற்கல்வியாகக் கருதும் இவ்வாய்வேடு, அகத்திணைப்பாகுபாடு, அகத்திணைத் தோற்றம், அகத்திணைக் குறிக்கோள், அகத்திணைப்பாட்டு, அகத்திணைப் புலவர்கள், அகத்திணைக் கல்வி என்ற இயல்களில் பிரித்து ஆராய்கிறது. "இந்நூல் பல ஆய்வு முடிவுகளைத் தந்துள்ளது. அவையாவன,

1. சங்க காலத்தில் மணமாகாக் குமரியர் மலரணிதல் இல்லை

2. கைக்கிளை என்பது தோன்றியவுடன் அழியும் காதற் குறுங்கரு

3. பெருந்திணை என்பது பெருமூச்சுப் போலத் தன் வரையின்றி வெளிப்படும் மிகையுணர்வு.

4. காதற்காமம் என்பது உயிர் மெய்ப்புணர்ச்சி.

5. தமிழ் என்பது அகப்பொருளைக் குறிக்கும்" [30]

என்பனவாகும். இவ்வாறு பலநிலைகளில் சங்க அகப்பாடல்களை இந்நூல் ஆராய்கிறது.

இராம.தமிழண்ணல், 'சங்கப் பனுவலின் மரபும் அறிவுத்திறனும் (1976) என்ற தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். இந்நூலுள் 1. பாட்டு என்பது ஓசை குறித்தது; செய்யுள் என்பது உள்ளுறை கொண்டது; நூல் இலக்கணம் மொழிவது; உரை யாப்புக்கூறு 2. பரத்தையர் பிரிவைத் தொல்காப்பியர் பிரிவு வகைகளுள் ஒன்றாகக் கூறாமைக்குக் காரணம் அதனை இழிவானதாக அவர் கருதியமையே 3. மகட்பாற்காஞ்சிப் பாடல்கள் பெண்ணழகால் வரும் ஏதம் சுட்டுவன. 4. சங்க இலக்கியம் நாட்டுப்புற இலக்கிய மரபிலிருந்து முகிழ்த்தது முதலான முடிவுகள் இடம்

பெற்றுள்ளன.[31]

ஆ. அமிர்தகௌரி, 'சங்க இலக்கியத்தில் உரையாடல்' (1989) என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வில் சங்க நூல்களான ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, கலித்தொகை, அகநானூறு, பரிபாடல் என்னும் ஆறு நூல்களின் அகப் பாடல்களை மட்டும் ஆய்வுக்கு உட்படுத்துகிறார். இந்நூற்பாடல்களில் இடம்பெறும் உரையாடல் குறித்து ஆராய்கிறார். தனிஉரையாடல், உரையாடல், தனிமொழி, குழு உரையாடல், உரையாடல் கலைத்திறன் என ஐந்து இயல்களாகப் பகுத்துக்கொண்டு ஆராய்கிறார்.

"1. தலைவன் பிறர் கூற்றினைக் குறைவாகக் கொண்டெடுத்து மொழிவது அவனது ஆளுமைத்தன்மையைச் சாற்றும் 2. தலைவன்-தலைவி உரையாடற் பாடல்களில் பெரும்பாலும் தலைவியே உரையாடலைத் தொடங்குபவளாகவும், வளர்நிலைக்கு எடுத்துச் செல்பவளாகவும் விளங்குகின்றாள், 3. களவு நிலையில் தலைவனின் பேச்சு மிகுதியாகவும், கற்பு நிலையில் தலைவியின் பேச்சு மிகுதியாகவும் இடம் பெறுகின்றன, 4. அக ஒழுக்கம் மேம்பட்டுச் சிறக்கக் குழுவினரின் நேரடி பங்கேற்பும் உரையாடலும் அடிப்படையாக அமைகின்றன, 5. கேட்போரை வாழ்த்தித் தொடங்குவதும், வாழ்த்தி முடிப்பதும் அகப்பாடல்களின் நாடகப் பண்பை உணர்த்தும்''[32] என்றெல்லாம் குறிப்பிடுகிறார். இன்னும் உள்ளுறை, இறைச்சி, அங்கதம், இயற்கைப் புனைவு முதலானவை உரையாடலில் பெறும் இடம் குறித்து விரிவாக விளக்கிச் செல்கிறார்.

இவ்வாறு, சங்க இலக்கியத்தைக் கலைநுட்ப ஆய்வுக்கு உட்படுத்தும்போது சங்கப் பாடல்களின் செழுமைக்கான காரணங்களைக் கண்டறியலாம். அத்துடன் பல்வேறு புதிய வெளிச்சங்கள் கிடைக்கவும் வழி இருக்கிறது. மேலும் சங்க இலக்கியத்தைக் கலைநுட்ப அணுகுமுறையில் விளக்கிச் செல்ல எவ்வளவோ இடமிருக்கிறது எனலாம்.

## 7.5. தொல்காப்பியர் நெறிப்பட்ட அணுகுமுறை

தமிழில் கிடைக்கும் இலக்கண நூல்களில் முதன்மையானதாகத் தொல்காப்பியம் கருதப்படுகிறது. அத்துடன் தொல்காப்பியத்திற்குப் பின்னரே சங்க இலக்கியம் உருவானதாகப் பெரும்பாலான அறிஞர்கள் கருதுகின்றனர். இந்நிலையில் தொல்காப்பியரின் சிந்தனை அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராயும் முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. எனவே, தொல்காப்பியர் நெறிப்பட்ட அணுகுமுறையின் மூலம் நடைபெற்ற சங்க இலக்கிய ஆய்வேடுகளை விளக்கும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

ரா.சீனிவாசன்,'சங்க இலக்கியத்தில் உவமைகள்' (1973) என்னும் தலைப்பில் தொல்காப்பிய அடிப்படைகளைக் கொண்டு சங்க இலக்கிய உவமைகளை ஆராய்ந்துள்ளார். இவ்வாய்வில், உவமை வகைகள், உருபுகள் , உருவகம், சொல்லியல் மரபுகள், நயச்சிறப்புகள், பொருளியல் மரபுகள், உள்ளுறை இறைச்சி ஆகிய தலைப்புக்களில் சங்க இலக்கிய உவமைகளை விளக்கியுள்ளார்."சங்க இலக்கிய உவமைகள் சொல்லியலாலும் பொருள் அமைப்பாலும் தனி மரபுகள் பெற்று விளங்குகின்றன"[33] என்கிறார். மேலும்,

> "சங்க இலக்கியம் என எட்டுத்தொகையையும் பத்துப்பாட்டையும் ஒன்று சேர்த்துக் கூறுவதற்குக் காரணமாக மொழி நடையையும், கருத்து ஒற்றுமையையும் அகப்பொருள் புறப்பொருள் மரபு ஒற்றுமையையும் காட்டுவர். அவற்றோடு உவமச் சொற்பொருள் ஒற்றுமையையும் ஒரு காரணமாகச் சேர்த்துக் கூறலாம்" [34]

என்ற கருத்துச் சுட்டத்தக்கதாகும்.

நா. செயராமன்,'சங்க இலக்கியத்தில் பாடாண்திணை'(1975) என்ற தலைப்பில் ஆராய்ந்துள்ளார். அவர் இவ்வாய்வேட்டைப், பாடாண்திணை, இலக்கணத்துள் பாடாண், சங்க இலக்கியத்துள் பாடாண், பிறமொழிகளில் பாடாண், பாடாண் துறைகள்,அகத்திணைப் பாடாண், போர்த் திணைப் பாடாண், தேவ பாடாண், பாடாணும் வீரநிலைக் காலமும் என்ற தலைப்புக்களின் கீழ் ஆராய்ந்துள்ளார்.

தொல்காப்பிய இலக்கணத்தில் இடம் பெறும், பாடாண் திணைத் துறைகளைச் சங்க இலக்கியத்தில் பொருத்திப் பார்ப்பதுடன், அவற்றின் பிற்கால வளர்ச்சி குறித்தும் விளக்குகிறார். சங்க காலத்தை வீரநிலைக் காலம் எனக் குறிப்பிடும் கருத்தை இவர் ஏற்றுக்கொள்ளவில்லை. சங்கப் பாடல்களை வீரநிலைக் காலப் பாடல்களாக ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதற்கு, மேலைநாட்டு வாய்மொழிப்பாடல்களுக்கும் சங்கப்பாடல்களுக்கும் உள்ள வேறுபாடுகளை எடுத்துக்காட்டி,

"சங்க காலப் பாடாண்திணைப் பாடல்கள் வீரநிலைக் காலத்துக்கு உரியவை அல்ல; வீரநிலைக் காலத்துக்குப் பிற்பட்ட காலத்துக்கு உரியவையாகும்" என்றும், "தொல்காப்பியர் காலத்திலும் பின்வந்த சங்க காலத்திலும் தலைவனைப் புகழும் பாடாண் பாடல்களே சிறப்பிடம் பெற்றன. எனவே, சங்க காலத்தைப் 'பாடாண் காலம்' என்றும், 'வீரநிலைக் காலத்தை அடுத்த காலம்' " [35] என்றும் குறிப்பிடுகிறார்.

அர.சிங்கார வடிவேலன்,'சங்க இலக்கிய உவமைகள்' (1986) என்ற தலைப்பில், தொல்காப்பியம், தண்டியலங்காரம் ஆகியவற்றோடு ஒப்பிட்டுச் சங்க இலக்கிய உவமைகளை விளக்குகிறார். தொல்காப்பியத்தின் உவமையியலில் தண்டியலங்கார உவமை வகைகளும், சங்க இலக்கியங்களில், தண்டியலங்கார அணிவகைகளும் அடங்கிப்போகும் தன்மையைக் காட்டுகிறார்.[36]

சரளா. ராசகோபாலன்,'சங்க இலக்கியத்தில் தோழி' (1986) என்ற தலைப்பில் ஆய்வுசெய்துள்ளார். சங்க இலக்கியத்தில் இடம் பெறும் தோழியின் பாத்திரப் படைப்பை விரிவான ஆய்வுக்கு உட்படுத்துகிறார். தோழியின் பாத்திரம் மற்ற பாத்திரங்களுடன் கொண்டிருக்கும் உறவுகளை அலசுகிறார். தொல்காப்பியம் முதலான அகப்பொருள் இலக்கணங்களின் துணையுடன் ஒப்பிட்டு ஆராய்கிறார். மேலும்,'தோழி பாத்திரப்படைப்பு, உண்மையும் கற்பனையும் கலந்த நாடகப் பாத்திரம் என்றும், சங்கப் புலவர்கள் தோழி பாத்திரப் படைப்பிலேயே தங்கள் திறனையும் கருத்துக்களையும் வெளிப்படுத்துகின்றனர்'[37] எனக் காட்டுகிறார்.

நா. பாலகிருட்டிணன், 'தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு' (1988) என்ற தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வைக் கூற்று,

கேட்போர், களன், முன்னம், உவமம் என்ற ஐந்து உட் தலைப்புக்களில் மேற்கொண்டுள்ளார். தொல்காப்பியப் பொருளதிகாரம் குறிப்பிடும் இலக்கணத்தோடு பொருத்தி நற்றிணைப் பாடல்களை மேற்சொன்ன தலைப்புக்களில் ஆராய்கிறார். இவர்,

"கூற்று, கேட்போர், களன், முன்னம் என்ற நான்கு உறுப்புகள் குறித்துத் தொல்காப்பியர் மொழிந்துள்ள இலக்கியக் கொள்கைகள், அவற்றைப் பாடல்களில் புனையும் முறைகள், புனையும்போது கையாளப்படவேண்டிய மரபுகள் ஆகியனவற்றை நற்றிணை பெரிதும் பின்பற்றியே அமைந்துள்ளது. அவற்றுள் எந்த ஒன்றையும் முரணி அமையவில்லை"[38] என்றும்,

"தொல்காப்பியர் சுட்டிக்கூறாத இல்பொருளுவமம், தற்குறிப்பேற்றம் ஆகிய உவமவியல்புகள் நற்றிணையில் காணப்படுகின்றன. அவர் காலத்தில் இல்லாத உருவகம் உவமையினின்று வளர்ச்சியுற்றுக் காணப்படுகின்றது"[39] என்றும் குறிப்பிடுகிறார்.

சங்கப் பாடல்களின் ஐந்திணைகளைப் பற்றிய ஆராய்ச்சி முயற்சிகளாக வெளிவந்துள்ள ஆய்வேடுகள் குறிப்பிடத்தக்கனவாகும். நாகு, 'பாலை' பற்றியும், வெ.தெ. மாணிக்கம், 'மருதம்' பற்றியும், முத்துக்கண்ணப்பர் 'நெய்தல்' பற்றியும் ஜெ. அண்ணாமலை, 'முல்லை' பற்றியும், ஆடியபாதம், 'குறிஞ்சி' பற்றியும் ஆராய்ந்துள்ளனர். இவ்வாய்வேடுகள் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பட்டுப் பின்னர் நூல்களாக வெளிவந்தனவாகும்.[40]

இவ்வாறு சங்க இலக்கிய ஆய்வுகள் தொடர்ந்து கல்வியாளர்களால் ஆராயப்பட்டு வெளிவந்துகொண்டிருக்கின்றன.

### 7.6 கருத்துரை

1. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் ஆய்வுகளைத் தொடர்ந்து, கல்வி நிறுவனங்களில் சங்க இலக்கிய ஆய்வுகள் செய்யப்பட்டன. இவ்வாய்வுகளிலும் கூடத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களின் செல்வாக்கு உள்ளிருந்து செயல்படுவதைக் காணமுடிகிறது.

2. முனைவர்ப்பட்ட ஆய்வுகள் என்ற நிலையில், மொழியியல் அணுகுமுறையிலான ஆய்வுகள் குறைவாகவே காணப்படுகின்றன. மொழியியல் அணுகுமுறையிலான ஆய்வுகள் மிகுதியாகச் செய்யப்பட்டால், சங்க இலக்கியம் மேலும் விளக்கம் பெறுவதற்கு வாய்ப்பிருக்கிறது.

3. ஆராய்ச்சி நெறிமுறை அடிப்படையிலான ஆய்வுகள் பெருகும்போது, ஏற்கனவே இயக்கச் சார்புடன் கொண்ட முடிவுகளின் வன்மை மென்மைகளைக் கண்டறியலாம்.

## அடிக்குறிப்புகள்

1. இராம. சுந்தரம், ஆராய்ச்சி, (தொகு.), முற்போக்கு இலக்கியத்திறன், ப. 79
2. தெ.பொ. மீனாட்சி சுந்தரம், தமிழ் மொழி வரலாறு, ப. 164
3. பெ. மாதையன், ஆய்வுத்துணை நூல்கள், ந. கடிகாசலம், ச. சிவகாமி, (பதி.ஆசி.), சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு, சிந்தனைப் பின்புல மதிப்பீடு, ப. 492
4. இராம. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம், தமிழ்ப் பேராசிரியர்கள், (தொகு.), தமிழ் ஆராய்ச்சி வரலாறு, முதல் தொகுதி, ப. 74
5. ச. அகத்தியலிங்கம், சங்கத்தமிழ்-5, ப. IV
6. பா. வீரப்பன், சங்க இலக்கிய நடை, ப. 42
7. மேலது, ப. 167
8. K. Kailasapathy. Tamil Heroic Poetry, PP. 135-186
9. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், முன்னுரை, ப.இ.
10. நா. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, ப. 331
11. செ.வை. சண்முகம், மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும், ப. 70
12. மேலது., ப. 72
13. நா. சுப்பிரமணியன், தமிழாய்வியலில் கலாநிதி க. கைலாசபதி, ப. 29
14. செ.வை. சண்முகம், மு.நூ., ப. 70
15. இராம. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 114
16. நா. சுப்பிரமணியன், மு.நூ., ப. 20
17. கதிர். மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, (ஒப்பிலக்கியக் கணிப்பு), பக். 2, 300, 304
18. கி. பாண்டுரங்கன், பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், அணிந்துரை, பக். VI-VIII
19. தங்கங் கந்தசாமி, போரியல் அன்றும் இன்றும், ப. 305
20. நா. ஆறுமுகம், கலித்தொகை ஓர் ஆழ்வாய்வு, பக். 21, 226, 80, 166
21. கு.வெ. பாலசுப்பிரமணியன், மு.நூ., ப.இ.
22. அரங்க. இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப. 13
23. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், பக். 68, 131
24. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப. 250
25. மேலது., ப. 253
26. மேலது, ப. 165

27. மு. வரதராசனார், பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை, (பொ. பெ.), ப. 12

28. கு.வெ. பாலசுப்பிரமணியன், ஆய்வுகள், ந.கடிகாசலம், ச.சிவகாமி, (பதி.ஆசி.), மு.நூ., ப. 48

29. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 4

30. கு.வெ. பாலசுப்பிரமணியன், ஆய்வுகள், ந.கடிகாசலம், ச.சிவகாமி, (பதி.ஆசி.), மு.நூ., பக். 481, 482

31. மேலது., ப. 482

32. ஆ. அமிர்தகௌரி, சங்க இலக்கியத்தில் உரையாடல், பக். 97, 168, 169, 282, 337

33. ரா. சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமைகள், ப. 162

34. மேலது., ப. 124

35. நா. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, பக். 331, 332

36. அர. சிங்காரவடிவேலன், சங்க இலக்கிய உவமைகள்

37. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப. 5

38. நா. பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகாரவழி நற்றிணை - ஓர் ஆய்வு, ப. 282

39. மேலது., ப. 284

40. இராம. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம், தமிழ்ப் பேராசிரியர்கள், (தொகு.), மு.நூ., ப. 76

# தொகுப்புரை

'சங்க இலக்கியம் பற்றிய வரலாற்றியல் ஆய்வுகள்' என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, ஏழு இயல்களாகப் பகுத்து ஆராயப்பட்டுள்ளது. ஒவ்வொரு இயலில் கண்ட முடிவுகளும், எதிர்கால ஆய்வு பற்றிய சிந்தனைகளும் இத்தொகுப்புரையில் இடம்பெற்றுள்ளன.

8.1. 'வரலாறு எழுதுதலும் அதற்கான தேவைகளும்' என்ற முதல் இயலில், வரலாறு பற்றிய பல்வேறு விளக்கங்கள் எடுத்துரைக்கப்பட்டன. வரலாற்றுக்கும் அதிகார வர்க்கத்துக்கும் உள்ள தொடர்பு பற்றியும், வரலாற்றை எழுதியவர்கள் தொடர்ந்து உயர்சாதியினராகவே இருந்துவந்துள்ள தன்மை பற்றியும் விளக்கப்பட்டன. இவ்வாறு விளக்கியதன் மூலம் வரலாறானது அதனை எழுதுபவர்களுக்கு ஏற்றவிதமாகச் செயல்படக்கூடியது, என்ற வரலாற்றின் குணம் வெளிக்கொணரப்பட்டது. இதன் காரணமாக, "(அ) அகச்சார்பு இன்றி முற்றிலும் புறவயமாக நின்று வரலாற்றை எழுதமுடியாது. (ஆ) வரலாறு என்பது காலத்தேவைக்குத் தகுந்தவாறு புனையப்படுவதுதான்" என்ற இரண்டு கருத்துக்கள் முன்மொழியப்பட்டன.

8.2. 'இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய ஆய்வுகளும்' என்ற இரண்டாவது இயல், இந்தியத் தேசிய இயக்கச் சிந்தனையின் அடிப்படையில் சங்க இலக்கிய ஆய்வுகள் செயற்பட்ட பாங்கினை வெளிக்கொண்டுவரும் நோக்கத்தில் எழுதப்பட்டுள்ளது. இந்தியத் தேசியச் சிந்தனையாளர்கள் வடமொழி சார்ந்து இயங்கியதால் தமிழ் நூல்களின் காலத்தைப் பின்னுக்குக் கொண்டுவருவதில் ஆர்வம் காட்டினர். ஆரியரின் கூட்டுறவாலேயே தமிழ்ச்சமூகம் நலம் பெற்றது என விளக்கினர். இந்தியப் பண்பாட்டின் ஓர் அங்கமே தமிழ்ப்பண்பாடு என்றும், வட இந்தியப் பண்பாடும் தென்னிந்தியப் பண்பாடும் சேர்ந்த கலவையே சங்க காலப் பண்பாடு என்றும், அவர்கள் சான்றுகள் காட்டி விளக்கினர். இவ்வாறெல்லாம் அவர்கள் விளக்கியதன் காரணமாகத் தங்கள் இயக்க வளர்ச்சிக்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்திக்கொண்ட தன்மையையும், இதனால் சங்க இலக்கியம் புதிய விளக்கம் பெற்றதையும் இவ்வியல் எடுத்துக்காட்டியது.

8.3. 'சமய மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்' என்ற மூன்றாவது இயல், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழகத்தில் தொழிற்பட்ட சமய மறுமலர்ச்சி இயக்கங்கள், சங்க இலக்கியத்தைக் கையாண்ட நிலையை வெளிக்கொணர்வதாக அமைந்துள்ளது. இந்தியா நெடுக இந்து சமயத்தின் பெயரால் சமய எழுச்சி ஏற்பட்ட போது, தமிழகத்தில் அது சைவ எழுச்சியாகப் பரிமாணம் பெற்ற நிலை சுட்டிக்காட்டப்பட்டது. தமிழர்க்கான தனித்தமிழ்ச் சமயத்தைக் கட்டுவதில் முன்னின்றனர் சைவ எழுச்சி இயக்கத்தினர். இவர்களுக்கு எதிராக, இந்து சமயப் பின்னணியில் சங்க இலக்கியத்தை விளக்கியவர்கள், 'தெய்வக் கொள்கையோடு வடநாட்டிற்கும் தென்னாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு ஆதிகாலம் முதற்கொண்டே இருந்து வந்திருக்கிறது என்றெழுதினார்கள். சங்கம் என்ற அமைப்பு சைவ மதத்துடன் இணைத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றில் கூறப் பெற்றுள்ளதால் அவ்வமைப்பின் உறுதித்தன்மையை நிலைநாட்ட சைவ எழுச்சி இயக்கத்தினர் முன்னின்றார்கள். தங்களுக்கான மதத்தைக் கட்டுவதற்கு இத்தகைய தொன்மையான கருத்தியல் உதவும் என்ற அடிப்படையில் அவர்கள் விதந்து எழுதினர். இதன்காரணமாகச் சங்கத்தின் உண்மை இன்மை பற்றிய ஆய்வுகள் மிகுதியாக வெளிவந்தன எனலாம். இவ்வாறு இந்த இயலில் பல்வேறு சமூக அரசியல் பின்னணிகள் வெளிக்கொண்டுவரப்பட்டதால், சங்க இலக்கியம் சமய மறுமலர்ச்சி இயக்கத்தினரின் கருத்தியல் கருவியாகச் செயல்பட்ட நிலை விளக்கம் பெற்றது எனலாம்.

8.4. 'தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்களும் சங்க இலக்கிய ஆய்வுகளும்' என்ற நான்காவது இயல், தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் தங்கள் இயக்கத்தை வளர்த்துக்கொள்ள சங்க இலக்கியத்தைக் கருத்தியல் கருவியாகக் கையாண்ட தன்மையை எடுத்துரைக்கிறது. இந்தியா முழுவதும் இந்தியத்தேசிய இயக்கம் வலுவடைந்த நிலையில் தமிழகத்தில் அதன் தாக்கம் மாறுபட்ட நிலையில் இருந்தது. இங்கு இந்தியத் தேசிய இயக்கத்தின் பார்ப்பன மேலாண்மைக்கு எதிராக, பார்ப்பனரல்லாத தலைவர்கள் மேலெழுந்தனர். இதன் காரணமாகத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கங்கள் வலிமை பெற்றன. இந்தத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர்

ஆரியக் கலப்பற்ற தனித்தமிழ்ப் பண்பாட்டைக் கட்டமைக்க முயன்றார்கள். அதற்குச் சரியாகச் சங்க இலக்கியம் பயன்பட்டது. இவர்கள் சங்க காலத்தைத் தமிழர்களின் பொற்காலமாகச் சித்தரித்தார்கள். இதன் காரணமாகச் சங்க இலக்கியமானது பல பதிப்புக்களைக் கண்டது. எளிய உரைகள், விளக்கங்கள் எழுந்தன. மேடைதோறும் தமிழ் முழங்கப்பட்டது. கல்வி நிறுவனங்களில் எல்லாம் சங்க இலக்கியம் ஆய்வுப் பொருளானது. இவ்வாறு, தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் பல தளங்களில் நின்று செயற்பட்ட தன்மையை இவ்வியல் வெளிக்கொணர்ந்தது. மேலும் இதன் மூலம், 'எவ்வளவு தொன்மையான இலக்கியங்களையும் கூடத் தன் காலத் தேவைக்குத் தகுந்தவாறு வாசித்துப் பொருள்காண முடியும். அவ்வாறு காண்பதன் மூலம், அந்த இலக்கியத்திற்கு நிரந்தரத் தன்மையை வழங்க முடியும்' என்ற ஆய்வேட்டின் இரண்டாவது கருதுகோள் மெய்ப்பிக்கப்பட்டது எனலாம்.

8.5. 'சாதிகளின் எழுச்சியும் சங்க இலக்கிய ஆய்வுகளும்' என்ற ஐந்தாவது இயல், சாதிய இயக்கங்கள் தங்களை வளர்த்தெடுக்க சங்க இலக்கியத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் தன்மையை விளக்குகிறது. சமூகத்தின் மாறி வரும் புதிய சூழலுக்கு ஏற்ப சாதிய இயக்கங்களும் தங்களைப் புதுப்பித்துக்கொள்கின்றன. இவ்வியக்கங்கள் தங்களுக்கான வேர்களைப் பழம்பெரும் இலக்கியங்களில் இருந்து கண்டெடுப்பதில் ஆர்வம் காட்டுகின்றன. இதனால் சாதிய இயக்கங்களுக்கு ஏற்ப சங்க இலக்கியம் புதுவிளக்கம் பெற்றது எனலாம். இப்படி ஆராய்ந்ததன் மூலம், 'தமிழகச் சமூக, அரசியல் இயக்கங்களுக்குத் தேவையான கருத்தாக்கங்களைப் புனைவதற்குச் சங்க இலக்கியம் பயன்பட்டிருக்கிறது என்ற உண்மைக்கு வலிமை கூடுகிறது எனலாம். இதனால் ஆய்வேட்டின் முதற்கருதுகோள் விளக்கம் பெறுகிறது.

8.6. 'புதிய திறனாய்வுப் பார்வைகளும் சங்க இலக்கியமும்' என்ற ஆறாவது இயல், புதிய திறனாய்வுப் பார்வைகள் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த நிலையை எடுத்துரைக்கிறது. தமிழகச் சூழலில் மூலப்பாட ஆய்வின் செயற்பாடு, சங்க இலக்கியத்துக்கு எழுந்த புதிய உரைகளின் தன்மைகள், கல்வியாளர்கள் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த முறைகள், சங்க இலக்கியத்தில் அழகியல் அடிப்படையிலான ஆய்வுகள் தொழிற்பட்ட பாங்கு, மார்க்சிய இயக்கத்தின்

காரணமாகச் சங்க இலக்கியத்துக்குக் கிடைத்த புதிய விளக்கங்கள், சங்க இலக்கிய ஒப்பியல் ஆய்வுகளின் தன்மைகள் ஆகியன விளக்கப்பட்டன. இப்படி ஆராய்ந்ததன் மூலம், காலத்தின் தேவைக்கேற்ப சங்க இலக்கியமானது புதிய புதிய விளக்கங்களுக்கு உள்ளாகும் தன்மை சுட்டிக்காட்டப்பட்டது எனலாம்.

8.7. 'சங்க இலக்கிய ஆய்வேடுகள்' என்ற ஏழாவது இயல், சங்க இலக்கியம் தொடர்பாக நூல்களாக வெளிவந்துள்ள முனைவர்ப்பட்ட ஆய்வேடுகளின் தன்மையைக் கணிப்பதற்கான முயற்சியில் ஈடுபட்டது. இந்த ஆய்வேடுகள் சங்க இலக்கியம் மீதான பல புதிய வினாக்களை எழுப்பி அவற்றுக்கான விடைகளைச் காணும் முயற்சியில் ஈடுபட்டதை ஆய்வு வரலாற்றில் காணமுடிகிறது. சங்க இலக்கியம் தொடர்பான ஆழமானப் புரிதலுக்கும், புதிய விளக்கங்களுக்கும் இந்த ஆய்வேடுகள் உதவுகின்றன எனலாம்.

8.8. இவ்வாறு பகுத்து ஆராய்ந்த முறையானது, ஆய்வேட்டின் கருதுகோள்கள் மெய்ப்பிக்கப்படுவதற்கு வாய்ப்பாக அமைந்தது எனலாம். தமிழகச் சமூக, அரசியல் பின்னணியில் சங்க இலக்கிய ஆய்வுகளை, ஆய்வுக்குட்படுத்திய இவ்வாய்வேட்டின் முடிவுகள் முடிந்த முடிபு அல்ல. தொடர்ந்து ஆய்வுக்கு உட்படக் கூடியவைதான். இதுபோன்ற ஆய்வுகள் மேலும் செழுமையுறும்போது, இவ்வாய்வு முடிவுகள் மாற்றமடையலாம். மீளாய்வுக்கு உட்படுத்தப்படலாம். இத்தகைய, மாற்றங்களை ஏற்றுக்கொள்ளும் ஆய்வு மனப்பக்குவத்துடன்தான் ஆய்வாளர், மேற்கண்ட முடிவுகளை இவ்வாய்வேட்டில் மேற்கொண்டுள்ளார்.

8.9. இந்த ஆய்வேட்டில் ஆய்வாளர் பகுத்துள்ள ஒவ்வொரு இயலையும் ஒரு தலைப்பாகக் கொண்டு இன்னும் ஆராய எவ்வளவோ இடமிருக்கிறது. மேலும், தமிழகச் சமூக, அரசியல் பின்னணியில், இருபதாம் நூற்றாண்டில் சங்க இலக்கியத்திற்கு எழுந்த உரைகளை ஆராய இடமிருக்கிறது. இதுவரை வெளிவந்துள்ள சங்க இலக்கியப் பதிப்புக்களை மூலப்பாட ஆய்வுக்கு உட்படுத்தலாம். சங்க இலக்கியத்தை அழகியல், உளவியல், மொழியியல், கலைநுட்பவியல் அணுகுமுறைகளின் வழி விளக்க எவ்வளவோ இடமிருக்கிறது. இவையன்றி இன்று

வளர்ந்து வரும் பெண்ணியம், அமைப்பியல், பின்நவீனத்துவம் முதலான அணுகுமுறைகளின் வழியாக விரிவாக விளக்க வாய்ப்பிருக்கிறது. இவ்வாறு, சங்க இலக்கியமானது ஆய்வாளர்களுக்கு மேலும் மேலும் ஆராய்வதற்கு வாய்ப்புள்ள பரந்து விரிந்த களமாகவே காட்சிதருகிறது எனலாம்.

# துணைநூற் பட்டியல்


**தமிழ் நூல்கள்**

அகத்தியலிங்கம், ச., — சங்கத்தமிழ்-5, பொன்னகம், அண்ணாமலை நகர், 1987.

அண்ணாத்துரை, சி.என்., — ஆரிய மாயை, பாரதி பதிப்பகம், சென்னை, நான்காம் பதிப்பு, 1996.

-------------------------- — இன்பத் திராவிடம், பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1989,

-------------------------- — ஏ, தாழ்ந்த தமிழகமே!, பாரதி பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1992.

-------------------------- — நிலையும் நினைப்பும், பாரதி பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1990.

அப்பாத்துரை, கா., — இதுதான் திராவிட நாடு, மலர் நிலையம், சென்னை, 1958.

-------------------------- — தென்னாட்டுப் போர்க்களங்கள், அலமேலு நிலையம், சென்னை, 1971.

அமிர்தகௌரி, ஆ., — சங்க இலக்கியத்தில் உரையாடல் பாரி நிலையம், சென்னை, 1989.

அரவிந்தன், மு.வை., — உரையாசிரியர்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1995.

அருணகிரி, அ., — விடுதலைப்போரில் தமிழ் இலக்கியம், வானதி பதிப்பகம், சென்னை, 1993.

அலாய்சியஸ், ஞான., (தொகு.ஆ.), — அயோத்திதாசர் சிந்தனைகள்-I நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், தூய சவேரியார் (தன்னாட்சி) கல்லூரி, பாளையங்கோட்டை, 1999.

| | |
|---|---|
| அனந்தராமையர், (பதி.ஆ.), | கலித்தொகை (பாலைக்கலி, குறிஞ்சிக்கலி), நோபில் அச்சுக் கூடம், சென்னை, 1925. |
| ஆறுமுகம், நா., | கலித்தொகை ஓர் ஆய்வாய்வு, கன்னி நிலையம், ஈரோடு, 1985. |
| ஆனைமுத்து, வே., (பதி.ஆ.), | பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள், சிந்தனையாளர் பதிப்பகம், திருச்சிராப்பள்ளி, 1974. |
| இராகவையங்கார், மு., | சேரன் செங்குட்டுவன், பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி, ஆறாம் பதிப்பு, 1947. |
| இராகவையங்கார், ரா., | குறுந்தொகை விளக்கம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், நான்காம் பதிப்பு, 1983. |
| -------------------------- | கோசர், (பதி.இ.), அண்ணாமலை நகர், 1951. |
| -------------------------- | பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், (பதி.இ.), அண்ணாமலை நகர், 1949. |
| -------------------------- | வஞ்சி மாநகர், தாம்ஸன் அச்சுக்கூடம், சென்னை, 1932. |
| இராமசாமி, மு. பெரி.மு., | நக்கீரர் ஓர் ஆய்வு, பாரிநிலையம், சென்னை, 1983. |
| இராமலிங்கம், அரங்க., | சங்க இலக்கியத்தில் வேந்தர், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1987. |
| இளங்கோவன், எழில்., | அருந்ததியர் வரலாறு, வினாவும்-விளக்கமும், தமிழ்நாடு அருந்ததியர் சங்கம், மும்பை, 1998. |
| எரிதழல் | பண்பாடும் புரட்சியும், சிலிக்குயில், கும்பகோணம், 1986. |

கடிகாசலம், ந., சிவகாமி, ச., (பதி.ஆசி.), சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு, சிந்தனைப் பின்புல மதிப்பீடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

கண்ணன், கோ., பண்டைத் தமிழரின் ஒலி உணர்வும் இசை உணர்வும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1994.

கந்தசாமி, சோ.ந., பரிபாடலின் காலம், அபிராமி பதிப்பகம், அண்ணாமலை நகர், 1972.

கந்தையா பிள்ளை, ந.சி., தமிழ் இந்தியா, கழக வெளியீடு, சென்னை, பதிப்பு, 1959.

-------------------------- முச்சங்கம், முத்தமிழ் நிலையம், சென்னை, 1947.

-------------------------- வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பழந்தமிழர், புரொகிரெசிவ் அச்சகம், (இ.இ.), மூன்றாம் பதிப்பு, 1957.

கம்பர் மாணிக்கம், பீ., மோகன் லார்பியர், பா., (தொகு.ஆசி.), தலித் விடுதலையியல், தலித் ஆய்வு மையம், தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை, 1992.

கலைமகள், சி., அகநானூற்றில் பாலைத் திணைப்பாடல்கள் ஓர் ஆய்வு, பக்கிரியம்மாள் பதிப்பகம், சென்னை, 1993.

கனகசபை, வெ., (மொ.நூ.), ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், தமிழாக்கம் : அப்பாத்துரை, கா., கழக வெளியீடு, சென்னை, 1956.

கால்டுவெல், இராபர்ட்., (மொ.நு.), திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், தமிழாக்கம் : கோவிந்தன்,கா., இரத்தினம்,க., குறள் நிலையம், சென்னை, 1977.

| | |
|---|---|
| **கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ்.,** | **கடை வள்ளலார் காலம்,<br>செந்தமிழ்ப் பிரசுரம்,<br>தமிழ்ச்சங்க முத்திராசாலைப் பதிப்பு,<br>மதுரைத் தமிழ்ச்சங்கம், 1924.** |
| -------------------------- | சேரன் வஞ்சி,<br>எடுகேஷனல் பப்ளிஷஸ் கம்பெனி,<br>சென்னை, 1956. |
| குணா, சா., | இந்தியத் தேசியமும் திராவிடத் தேசியமும்,<br>தாமரை கலை இலக்கிய மன்றம்,<br>வெங்காலூர், 1986. |
| குப்புசாமி, சு., | மலையமான்கள்,<br>சேகர் பதிப்பகம்,<br>சென்னை, 1978. |
| குருசாமி, ம.ரா.போ., | சங்க காலம்,<br>மெர்க்குரி புத்தகக் கம்பெனி,<br>கோயமுத்தூர், 1967. |
| குருசாமி சித்தர், ஞானசேகரன்,<br>தே., (பதி.ஆசி.), | தமிழர் பண்பாட்டு வரலாறு,<br>தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்,<br>கோயமுத்தூர், 1996. |
| குருநாதன், இராம., | சங்கப்பாட்டும் ஐப்பானியக் கவிதையும்,<br>கலைஞன் பதிப்பகம்,<br>சென்னை, 1986. |
| குளோறியா சுந்தரமதி, இல., | டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப்<br>பதிப்புகள்,<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>சென்னை, 1984. |
| கெயில் ஓம்வெட், | வர்க்கம் சாதி நிலம்,<br>அலைகள் வெளியீட்டகம்,<br>சென்னை,<br>இரண்டாம் பதிப்பு, 1998. |
| கேசவன், கோ., | சாதியம்,<br>சரவணபாலு பதிப்பகம்,<br>விழுப்புரம், 1995. |
| -------------------------- | மண்ணும் மனித உறவுகளும்,<br>சென்னை புக் ஹவுஸ்,<br>சென்னை, 1979. |
| கைலாசபதி, கா., | பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,<br>மக்கள் வெளியீடு,<br>சென்னை,<br>இரண்டாம் பதிப்பு, 1978. |

கோசாம்பி, டி.டி. (மொ.நூ.) — பண்டைய இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு, தமிழாக்கம் எஸ்.ஆர்.என்.சத்தியா, இந்தியன் கவுன்ஸில் ஆப் ஹிஸ்டாரிகல் ரிசர்ச், நியூதில்லி, 1989.

கோவிந்தன், கா., — திருமாவளவன், கழகவெளியீடு, சென்னை, 1959.

-------------------------- — பண்டைத் தமிழர் போர்நெறி, வள்ளுவர் பண்ணை, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1984.

-------------------------- — முல்லை, கழக வெளியீடு, சென்னை, 1990.

கௌதமன், ராஜ்., — அறம்/அதிகாரம், விடியல் பதிப்பகம், கோவை, 1997.

-------------------------- — தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு, கௌரி பதிப்பகம், புதுச்சேரி, 1994.

சஞ்சீவி, ந., (பதி.ஆ.), — பல்கலைப் பழந்தமிழ், சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, சென்னை, 1974.

சண்முக பாரதி, செ., — இம்மானுவேல் தேவேந்திரர், முத்தழகு பதிப்பகம், மதுரை, 1993.

சண்முகம், செ.வை., — மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1989.

சதாசிவப் பண்டாரத்தார், தி.வை., — இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும், தொல்காப்பியர் நூலகம், சென்னை, 1961.

சரளா ராசகோபாலன், — சங்க இலக்கியத்தில் தோழி, ஒளிப் பதிப்பகம், சென்னை, 1986.

சாம்பசிவம், ச., — தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1964.

சாமி, அ.மா., 19-ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள், நவமணி பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1995.

சாமிநாதையர், உ.வே., (பதி.ஆ.), ஐங்குறுநூறும் பழைய உரையும், கணேச அச்சுக்கூடம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1920.

-------------------------- குறுந்தொகை மூலமும் உரையும், கேஸரி அச்சுக்கூடம், சென்னை, 1937.

-------------------------- பத்துப்பாட்டு மூலம், கேசரி அச்சுக்கூடம், சென்னை, 1931.

-------------------------- பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, நான்காம் பதிப்பு, 1945.

-------------------------- புறநானூறு மூலமும் உரையும், வெ.நா.ஜூபிலி அச்சுக்கூடம், சென்னை, 1894.

சாரங்கபாணி, இரா., பரிபாடல் திறன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1977.

சிங்கார வடிவேலன், அர., சங்க இலக்கிய உவமைகள், பழநியப்பன் பதிப்பகம், தேவகோட்டை, 1986.

சிதம்பரனார், அ., சேரர் வரலாறு, கழக வெளியீடு, சென்னை, 1954.

-------------------------- தமிழ்ச் சங்கங்களின் வரலாறு, கழக வெளியீடு, சென்னை, 1948.

சிதம்பரனார், சாமி., எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1957.

-------------------------- சங்கப் புலவர் சன்மார்க்கம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1961.

சிதம்பரனார், சாமி., தொல்காப்பியத் தமிழர், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1956.

சிவஞானம், ம.பொ. விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, இன்ப நிலையம், சென்னை, 1970.

சிவத்தம்பி, கா., தமிழ்ச் சமூகமும் பண்பாட்டின் மீள்கண்டுபிடிப்பும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1994.

-------------------------- தமிழில் இலக்கிய வரலாறு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1998.

சிவராஜ், து., சங்க இலக்கியத்தில் உளவியல், சிவம் பதிப்பகம், வேலூர், 1994.

சீனிவாச ஐயங்கார், பி.டி., (மொ.நூ.), தமிழர் வரலாறு தொகுதி I & II, மொழிபெயர்ப்பும் திறனாய்வும், கோவிந்தன், கா., கழக வெளியீடு, சென்னை, 1989.

சீனிவாசன், ரா., சங்க இலக்கியத்தில் உவமைகள், அணியகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1990.

சுப்பிரமணியன், நா., தமிழாய்வியலில் கலாநிதி கைலாசபதி, சவுத்விஷன், 1999.

சுப்ரமணியன், ந., சங்ககால வாழ்வியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1986.

சூரிய நாராயண சாஸ்திரி, வி.கோ., தமிழ் மொழியின் வரலாறு, தமிழ்ச்சங்கம் பிரஸ், மதுரை, 1922.

செயராமன், நா., சங்க இலக்கியத்தில் பாடாண்திணை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1975.

செல்வராசு, சிலம்பு, நா., சங்க இலக்கியம் சமூக மானுடவியல்
ஆய்வுக்கட்டுரைகள், அனிச்சம்
இலக்கிய வட்டம்,
புதுச்சேரி, 1996.

சோமசுந்தர பாரதியார், ச., பழந்தமிழ் நாடு,
மலர்நிலையம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1958.

ஞானி, (தொ.ஆ.) மார்க்சியத்தின் புதிய பரிமாணங்கள்,
புதுமலர் படைப்பகம்,
கோவை, 1999.

டாங்கே, எஸ்.ஏ., பண்டைக்கால இந்தியா,
அலைகள் வெளியீடு,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1999.

தங்கங் கந்தசாமி போரியல் அன்றும் இன்றும்,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை, 1987.

தமிழ்நாடன், மநு தர்மம்,
குயில் பண்ணை, சேலம்,
மூன்றாம் பதிப்பு, 1997.

தமிழ்ப் பேராசிரியர்கள், (தொகு. ஆசி.), தமிழ் ஆராய்ச்சி வரலாறு (முதல் தொகுதி),
பச்சையப்பன் ஆய்வரங்கம்,
தமிழ்த்துறை, பச்சையப்பன் கல்லூரி,
சென்னை, 1998.

தமிழண்ணல், இரா., புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,
சோலை நூலகம்,
மதுரை,
நான்காம் பதிப்பு, 1985.

திருஞான சம்பந்தம், ஆர்., வரலாறு கற்பித்தல்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை,
மறுபதிப்பு, 1983.

திருமாறன், கு., தனித்தமிழியக்கம்,
மருதம் வெளியீடு,
திருச்சி, 1992.

தேவ ஆசிர்வாதம், பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர்,
இராமதேவன் பதிப்பகம்,
தஞ்சாவூர், 1991.

துரைசாமிப் பிள்ளை, ஔவை. சு., சேர மன்னர் வரலாறு, சாந்தி நூலகம், சென்னை, மறுபதிப்பு, 1960.

நடராசன், தி.சு., தமிழின் அடையாளம், வெள்ளி வீதி வெளியீடு, மதுரை, 1999.

-------------------------- திறனாய்வுக் கலை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 1996.

நடராசன், தி.சு., ராமசாமி, அ., (தொகு.ஆசி.), பின்னை நவீனத்துவம் கோட்பாடுகளும் தமிழ்ச்சூழலும், விடியல் பதிப்பகம், கோயம்புத்தூர், 1998.

நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ., தென்னிந்திய வரலாறு (முதல் பகுதி), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 1979.

பஞ்சாங்கம், க., சிலப்பதிகாரத் திறனாய்வுகள்-ஒரு பார்வை, அன்னம் (பி) லிட்., சிவகங்கை, 1993.

-------------------------- தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு, அகரம், கும்பகோணம், 1996.

பாண்டுரங்கன், கி., பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், வெற்றிவேல் வெளியீடு, சென்னை, 1986.

பார்த்தசாரதி, டி.எம்., தி.மு.க. வரலாறு, பாரதி பதிப்பகம், சென்னை, ஏழாம் பதிப்பு, 1998.

பாலகிருட்டிணன், நா., தொல்காப்பியப் பொருளதிகாரவழி நற்றிணை ஓர் ஆய்வு, இளங்கோ பதிப்பகம், சென்னை, 1988.

பாலசுந்தரன், ஆதி., சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள், சக்தி பதிப்பகம், சென்னை, 1981.

பாலசுப்பிரமணியன், கு.வெ., — சங்க இலக்கியத்தில் புறப்பொருள்,
மீரா பதிப்பகம்
புதுக்கோட்டை, 1986.

-------------------------- — சங்க இலக்கியத்தில் வாகைத் திணை
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1989.

பொன்னுசாமி, மு., — சங்க இலக்கியத்தில் மெய்ப்பாட்டு இயக்கம்.
இந்து பதிப்பகம்,
கோயம்புத்தூர், 1998.

மகாதேவன், கதிர்., — பழந்தமிழர் வீரப்பண்பாடு
(ஒப்பிலக்கியக் கணிப்பு)
ஏரக வெளியீடு,
மதுரை, 1980.

மங்கள முருகேசன், ந.க., — இந்தியச் சமுதாய வரலாறு,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
1975.

-------------------------- — தமிழ்நாட்டுச் சமுதாய பண்பாட்டு வரலாறு,
எம்.எஸ்.பப்ளிகேஷன்ஸ்,
சென்னை, 1988.

மணி, பெ.சு., — சங்க கால ஔவையாரும் உலகப்
பெண்பாற் புலவர்களும்,
பூங்கொடி பதிப்பகம்,
சென்னை, 1977.

-------------------------- — இந்திய தேசியத்தின் தோற்றமும்
வளர்ச்சியும்,
பூங்கொடி பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1978.

மதிவாணன், இரா., — சாதிகளின் பொய்த்தோற்றம்,
தமிழ்நாடு பதிப்பகம்,
சென்னை, 1979.

மறைமலையடிகள், — முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை,
கழக வெளியீடு,
சென்னை,
மறு பதிப்பு, 1962.

-------------------------- — வேளாளர் நாகரிகம்,
கழக வெளியீடு,
சென்னை, மறுபதிப்பு, 1975.

மாணிக்கம், வ.சுப., — தமிழ்க்காதல்,
பாரிநிலையம்,
சென்னை, 1962.

| | |
|---|---|
| மார்க்ஸ், அ., | சிற்றிலக்கியங்கள் சில குறிப்புகள், சிலிக்குயில், குடந்தை, 1983. |
| மார்க்ஸ், அ., ரவிக்குமார், வேல்சாமி, (தொகு.ஆசி.), | தேசியம் ஒரு கற்பிதம், விடியல் பதிப்பகம், கோவை, 1994. |
| மார்க்ஸ், அ., வேல்சாமி, பொ., (தொகு.ஆசி.), | விளிம்பு நிலை ஆய்வுகளும் தமிழ்க் கதையாடல்களும், நிறப்பிரிகை வெளியீடுகள், கும்பகோணம், 1998. |
| மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தெ.பொ., (மொ.நூ.), | தமிழ் மொழி வரலாறு, தமிழாக்கம், ச. செயப்பிரகாசம், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, இரண்டாம் பதிப்பு, 1982. |
| முத்துசாமி, அ., | சங்க இலக்கியத்தில் ஆயர், இராணி பதிப்பகம், சென்னை, 1993. |
| முத்தையா, சு., | சங்க கால மறவர், காவ்யா, பெங்களூர், 1998. |
| மூர்த்தி, பூ., மற்றும் சிலர், | தலித் சமூகவியல், ஜெய்பீம் பதிப்பகம், புதுச்சேரி, 1994. |
| மெய்யப்பன், ச., | கபிலர், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1975. |
| ரசனிபாமிதத், | இன்றைய இந்தியா, நியூ செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை, 1978. |
| ராசமாணிக்கனார், மா., | தமிழ் இலக்கண இலக்கியக் கால ஆராய்ச்சி, ஔவை நூலகம், சென்னை, 1957. |
| ராமகிருஷ்ணன், எஸ்., | இந்தியப் பண்பாடும் தமிழரும், மீனாட்சிப் புத்தக நிலையம், மதுரை, இரண்டாம் பதிப்பு, 1982. |
| ராஜதுரை, எஸ். வி., | இந்து இந்தி இந்தியா, அறிவகம், சென்னை, 1993. |

| | |
|---|---|
| ராஜதுரை, எஸ்.வி., வ. கீதா., | பெரியார் சுயமரியாதை சமதர்மம்,<br>விடியல் பதிப்பகம்,<br>கோவை,<br>இரண்டாம் பதிப்பு, 1999. |
| வரதராசனார், மு., | கொங்குதேர் வாழ்க்கை,<br>பாரிநிலையம்,<br>சென்னை,<br>மூன்றாம் பதிப்பு, 1963. |
| -------------------------- | பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,<br>தமிழாக்கம் ம.ரா.போ. குருசாமி,<br>கலைக்கதிர் வெளியீடு,<br>சென்னை, 1955. |
| -------------------------- | மணல்வீடு,<br>பாரிநிலையம்,<br>சென்னை, |
| -------------------------- | முல்லைத்திணை,<br>பாரிநிலையம்,<br>சென்னை, 1952. |
| வானமாமலை, நா., | தமிழர் வரலாறும் பண்பாடும்,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை, 1966. |
| வித்தியானந்தன், சு., | தமிழர் சால்பு,<br>தமிழ் மன்றம்,<br>கண்டி, 1954. |
| வீரப்பன், பா., | சங்க இலக்கிய நடை,<br>பூவழகி பதிப்பகம்,<br>சென்னை, 1989. |
| வேங்கடசாமி, மயிலை. சீனி.,<br>யுனிவர்சிட்டி, | சேரன் செங்குட்டுவன்,<br>அன்னல்ஸ் ஆப் ஓரியண்டல் ரிசர்ச்<br>சென்னை, 1966. |
| வையாபுரிப்பிள்ளை, எஸ்., | இலக்கியச் சிந்தனைகள்,<br>இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இண்டியன் ஸ்டடீஸ்,<br>சென்னை,<br>இரண்டாம் பதிப்பு, 1992. |
| -------------------------- | காவிய காலம்,<br>வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம்,<br>சென்னை, 1991. |

ஸ்ரீ நிவாச ஐயர், ல.,
பண்டைச் சோழர் சரித்திரம்,
லலிதா பிரதர்ஸ் லிமிடெட்,
கும்பகோணம், 1939.

தொ. நா.,
சாதியும் வர்க்கமும்,
அலைகள் வெளியீட்டகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1997.

--------------------------
தமிழக வரலாறு
கழக வெளியீடு,
சென்னை, 1954.

--------------------------
நீதிக்கட்சியின் தோற்றமும் வளர்ச்சியும்,
சாந்தி பப்ளிகேஷன்ஸ்,
சென்னை, 1998.

--------------------------
பாரதியார் கவிதைகள்,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
ஏழாம் பதிப்பு, 1990.

--------------------------
முற்போக்கு இலக்கியத்திறன்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை, 1995.

<u>ஆங்கில நூல்கள்</u>

Kailasapathy. K.,
Tamil Heroic Poetry,
Oxford at the clarendon Press,
London, 1968.

Nilakanta Sastri, K.A.,
A History of South India,
Oxford University Press,
London, 1955.

------------------------
The Cholas, Vol. I & II,
University of Madras,
1935.

Sivaraja Pillai, K.N.,
The Chronology of Early Tamils,
Universityof Madras,
1932.

Srinivasa Aiyengar, M.,
Tamil Studies or Essays on the
History of the Tamil people,
Language, Religion and Literature,
Guardian Press,
1914.

## ஆய்வேடு

கருணாநிதி, வே., தற்காலக் கவிதைகளில் தலித்தியக் கூறுகள், அச்சில் வெளிவராத முனைவர்ப் பட்ட ஆய்வேடு, தமிழாராய்ச்சித் துறை, காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம், புதுச்சேரி, 1999.

## கட்டுரை

பஞ்சாங்கம், க., அதிகார அமைப்புகளும் கலகக் குரல்களும், அச்சில் வெளிவராத கட்டுரை.

## இதழ்கள்

1. காலச்சுவடு,
இதழ் 13, மார்ச் 1996,
151, கே.பி. சாலை,
நாகர்கோவில் 629 001.

2. கவிதாசரண்,
அக்டோபர் (21) - நவம்பர், 1997,
பிப்ரவரி-மார்ச், 1998.

3. தமிழ்ப்பொழில்,
கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
ஆகஸ்டு-செப்டம்பர் 1987.

4. நிகழ் 23,
செப்டம்பர், 1992,
விடியல் பதிப்பகம்,
கோவை.

5. நிறப்பிரிகை,
ஜனவரி 1992, பிப்ரவரி-4-1992,
விடியல் பதிப்பகம்,
கோவை.

6. புதுவிசை,
ஆகஸ்ட், 2000,
அஞ்சல் பெட்டி எண் : 66,
டெலிகாம் குடியிருப்பு,
ஓசூர்-635 109.

## பின்னிணைப்பு–1

## சங்க இலக்கிய பதிப்பாளர்கள்*

| வரிசை எண் | பதிப்பாசிரியர் | நூல் | பதிப்பு எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | அருணாசலதேசிகர் | குறுந் | 1 |
| 2. | அருளம்பலம், சு | முருகு, பெரும், பதி | 5 |
| 3. | அனந்தராமையர் | கலி | 5 |
| 4. | ஆறுமுக நாவலர் | முருகு | 16 |
| 5. | ஆறுமுகம் பிள்ளை.எம் | முருகு | 1 |
| 6. | இராகவையங்கார், நா | பெரும், பட், குறுந், அகம் | 10 |
| 7. | இராசமாணிக்கனார், மா | பத்துப், கலி | 2 |
| 8. | இராசா, கி | புறம் | 1 |
| 9. | இராமநாதன் செட்டியார், பொன் | பதி, பரி | 3 |
| 10. | இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு | பத்துப் | 1 |
| 11. | இராமையாபிள்ளை, நா | கலி | 1 |
| 12. | இராமரத்தினம் ஐயர் | குறுந் | 1 |
| 13. | இளவழகனார் | கலி | 1 |
| 14. | கச்சபேசுரன், ச.ரா | முருகு | 1 |
| 15. | கண்ணுசாமி, சிவ.காழி | கலி | 7 |
| 16. | கந்தசாமி முதலியார், வி | கலி | 1 |
| 17. | கந்தையா பிள்ளை, ந.சி. | முருகு | 1 |
| 18. | கனகசபாபதி முதலியார், தை.ஆ. | முருகு, முல்லை, கலி | 3 |
| 19. | காசிம் முகைதீன் இராவுத்தர் | பத்துப் | 1 |
| 20. | குளோறியா சந்திரமதி | மருதம் | 1 |
| 21. | கோதண்டபாணி பிள்ளை, கு | நெடு | 2 |
| 22. | கோபால கிருஷ்ணமாச்சாரியர் வை.மு. | பத்துப், முருகு, பொருந, சிறு, பெரும், முல்லை, மதுரை, நெடு, பட், மலை | 13 |
| 23. | கோவிந்தராச முதலியார் கா.ர. | முல்லை | 1 |
| 24. | சக்திதாசன் சுப்பிரமணியன் | குறுந், கலி | 2 |
| 25. | சண்முகம் பிள்ளை, மு | குறுந் | 1 |
| 26. | சந்தோஷம், க.ப. | முல்லை | 1 |
| 27. | சரவணப் பெருமாளையர் | முருகு | 1 |
| 28. | சாம்பசிவனார் | ஐங் | 1 |
| 29. | மு.ரா. | முருகு | 1 |
| 30. | சாமிநாதையர், உ.வே. | பத்துப், முல்லை, குறுந், ஐங், பதி, பரி, புறம் | 40 |
| 31. | சிதம்பரனார், சாமி | பத்துப், பட், குறுந் | 3 |
| 32. | சுப்ரமணிய பிள்ளை, கா | முருகு | 1 |
| 33. | சுப்ரமணிய பிள்ளை, பொன் | முருகு | 1 |

| வரிசை எண் | பதிப்பாசிரியர் | நூல் | பதிப்பு எண்ணிக்கை |
|---|---|---|---|
| 34. | கருளியாண்டிப் பாவலர், அ | குறுந் | 1 |
| 35. | செயராமன், ந | சங்கம் | 1 |
| 36. | சோமசுந்தரனார் பொ.வே | பத்துப், முருகு, பொரு, சிறு மதுரை, நெடு, பட், நற், குறுந், ஐங், பரி, கலி | 54 |
| 37. | சௌரிப் பெருமாள் ரங்கன் | குறுந் | 1 |
| 38. | தண்டபாணி தேசிகர் | முருகு | 1 |
| 39. | தமிழண்ணல் | பத்துப், நெடு | 6 |
| 40. | தாமோதரம்பிள்ளை சி.வை. | கலி | 1 |
| 41. | துரைசாமிப் பிள்ளை, ஔவை | நற், ஐங், பதி, புறம் | 27 |
| 42. | துரையரங்கசாமி, பொ.அ. | முருகு, பொரு | 2 |
| 43. | தெய்வசிகாமணிக் கவுண்டர், வே.ரா. | முருகு | 2 |
| 44. | நடராசப் பிள்ளை, அ | முல்லை | 1 |
| 45. | நமச்சிவாய முதலியார், கா.ரா. | முருகு, குறுந் | 2 |
| 46. | நாகலிங்க முனிவர் | முருகு | 1 |
| 47. | நாராயணசாமி ஐயர், அ | நற் | 1 |
| 48. | பாலசுந்தரம் பிள்ளை, தி.சு. | முல்லை | 1 |
| 49. | பாலசுப்பிரமணியன், மு.பி. | சிறு | 1 |
| 50. | புலியூர் கேசிகன் | முருகு, நற், குறுந், ஐங், பதி, பரி, கலி, அகம், புறம் | 34 |
| 51. | பெருமாள் முதலியார், மு.ரா. | குறுந் | 1 |
| 52. | மகாதேவ செட்டியார், அ. | முருகு | 1 |
| 53. | மகாதேவ முதலியார் | பொருந | 1 |
| 54. | மணிமேகலைப் பிரசுரம் | நற் | 1 |
| 55. | மறைமலை அடிகள் | முல்லை, பட் | 1 |
| 56. | மார்க்க பந்து சர்மா, எஸ்.ஆர். | குறிஞ்சிக்கலி | 1 |
| 57. | மோகன், இரா | சங்கம் (தொடு) | 1 |
| 58. | ராமச்சந்திரன், எஸ்.பி. | பரி | 1 |
| 59. | ராஜம், மர்ரே, எஸ். | பத்துப், நற், குறுந், ஐங், பதி, பரி, கலி, அகம், புறம் | 16 |
| 60. | வரதராசனார், மு. | சங்கம், குறுந், அகம் | 5 |
| 61. | வேங்கடசாமி நாட்டார் ந.மு. | அகம் | 13 |
| 62. | வேங்கடசாமி, செ. | நற், 1 | 2 |
| 63. | வேங்கடராமையா, கே.எம். | முருகு | 1 |
| 64. | வேங்கடாசலம் பிள்ளை, கரந்தை | அகம் | 3 |
| 65. | வையாபுரிப்பிள்ளை, எஸ். | சங்கம் | 2 |
| 66. | ஜகந்நாதன், கி.வா. | முருகு | 1 |

* இப்பட்டியல் இடம்பெற்ற நூல்: தி. மகாலட்சுமி, பதிப்பு வரலாறு, ந. கடிகாசலம், ச.சிவகாமி, (பதி.ஆசி), <u>சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு, சிந்தனைப் பின்புல மதிப்பீடு</u>, பக். 467-469

## பின்னிணைப்பு–2

### கே.என். சிவராஜப்பிள்ளை தரும் சங்க கால மன்னர்களின் கால வகுப்பு

(இக்கால வகுப்பு இடம்பெற்ற நூல்: K.N. Sivaraja Pillai, Chronology of Early Tamils), University of Madras, 1932).

## TABLE I.

### *THE CHŌḶA GENEALOGY.*

| | |
|---|---|
| 50 B.C.-25 B.C. | (1) Veḷiyan Tittan, the Conqueror of Uṟaiyūr. |
| 25 B.C.-1 A.D. | (2) Tittan Veḷiyan *alias* Pōrvaikkō-Perunaṟkiḷḷi, son of (1). |
| 1 A.D.-25 A.D. | (3) Muḍittalaikkō-Perunaṟkiḷḷi, probably son of (2)<br>(4) Karikālan I *alias* Perumpūṇ-Cenni. |
| 25 A.D.-50 A.D. | (5) Vēlpahṭaḍakkai-Perunaṟkiḷḷi, probably son of (3). |
| 50 A.D.-75 A.D. | (6) Uruva-pahtēr-Iḷañcēḍ-Cenni, probably son of Karikālan I. |
| 75 A.D.-100 A.D. | (7) Karikālan II or Karikālan the Great, son of (6). |
| 100 A.D.-125 A.D. | (8) Cēḍcenni-Nalaṅkiḷḷi, probably son of (7). |
| 125 A.D.-150 A.D. | (9) Kuḷamuṟṟattu-tuñciya-Kiḷḷivaḷavan, probably son of (8). |
| 150 A.D.-175 A.D. | (10) Rājasūyam-Vēṭṭa-Perunaṟkiḷḷi, probably son of (9). |
| 175 A.D.-200 A.D. | (11) Chōḻan Kō-Ceṅkaṇṇan. |

# TABLE II.

## *THE PĀṆḌIYA GENEALOGY.*

| | |
|---|---|
| 1 A.D.-25 A.D. | (1) Neḍuṁtēr-Ceḻiyan of Korkai *alias* Neḍuñceḻiyan I, the Conqueror of Kūḍal. |
| 25 A.D.-50 A.D. | (2) Ollaiyūr-tanta-Pūtappāṇḍiyan, probably son of (1). |
| 50 A.D.-75 A.D. | (3) Pasumpūṇ-Pāṇḍiyan *alias* Nilam-taru-tiruvil-Pāṇḍiyan *alias* Vadimbalamba-ninra-Pāṇḍiyan *alias* Pannāḍu-tanta-Pāṇḍiyan or Neḍuñceḻiyan II, the Conqueror of the Āayi country, probably son of (2). |
| 75 A.D.-100 A.D. | (4) Palśālai-Mudukuḍumi-Peruvaḻudi *alias* Veḷḷiyambalattu-tuñciya-Peruvaḻudi, probably son of (3). |
| 100 A.D.-125 A.D. | (5) Talaiyālaṁkānattu-Ceru-Venṟa-Neḍuñceḻiyan *alias* Neḍuñceḻiyan III, probably son of (4). |
| 125 A.D.-150 A.D. | (6) Ilavantikaipaḷḷi-tuñciya-Nanmāṟan.<br>(7) Kūḍakārattu-tuñciya-Maṟan-Vaḻudi. |
| 150 A.D.-175 A.D. | (8) Musiṟi-Muṟṟiya-Ceḻiyan.<br>(9) Kānappēreyil-tanta-Ukkirapperuvaḻudi. |

# TABLE III.

*THE CHERA GENEALOGY.*

